# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்
















நீடித்து
உழைக்கும்
டூத் ப்ரஷ்

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17 இதழ் 27

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்

ஹேவிளம்பி தை 20

# ஒற்றுமைக்கு வழி

ராஜாஜி

"ஆங்கிலம் பதினன்கு தேசிய மொழிகளால் ஏற்கனவே துரத்தப்பட்டு விட்டது. அதைக் கட்டிக்கொண்டு ஏன் அழுகிறீர்கள்? பாரத நாட்டில் வழங்கி வரும் மற்ற மொழிகளுக்கு யாதொரு தீமையும் விளையாது, இந்தியை மத்திய ஆட்சி மொழி யாக்கினால்" என்று அடிக்கடி சொல்லப்பட்டு வருகிறது.

ஜவாஹர்லால் நேரு அவர்களும் மற்ற வடநாட்டுத் தலைவர்களும் இவ்வாறு சொல்லி வருகிறார்கள்.

இந்தி மொழியை மத்திய அரசியல் மொழியாக்கி விட்டால் தமிழ் மொழிக்கு நஷ்டம் ஏற்படும் என்று யாரும் பயப்படவில்லை மொழிக்கு நஷ்டமில்லாவிடினும் மக்களுக்குப் பெரு நஷ்டம் உண்டாகும். அதைத்தான் சொல்லி வருகிறோம்.

ஆங்கிலத்தைப் பாரத நாட்டுப் பல்வேறு மொழிகளும் ஒன்றுகூடித் துரத்திவிட்ட தாக எண்ணுவது வெறும் பிரமையாகும். நேருஜியே அடிக்கடி சொல்லி வந்திருக்கிறார்: "ஆங்கிலம் இருந்தே தீரும். படிப்பில் இன்றியமையாத அம்சமாகும்" என்று. ஆங்கிலம் நீக்கப்பட்டால் அவர் கோரும் விஞ்ஞான வளர்ச்சியும் அதிவேக முன்னேற்றமும் எப்படி உண்டாகும்?

ஆங்கிலம், பிரதேச பாஷை, கணிதம், விஞ்ஞானம், சரித்திரம் முதலிய பல படிப் புக்களையும் சமாளிப்பதோடு குழந்தைகள் இந்தியிலும் சர்க்கார் அலுவலகங்களில் வேலை செய்யும் அளவுக்குப் பயிற்சி பெற வேண்டுமானால் தென்னாட்டு மாணவர்களின் சுமை எவ்வளவாகும் என்பதைப் பார்க்க வேண்டும். அதே சமயத்தில் இந்திப் பிரதேசத்தில் படிக்கும் மாணவர்களின் சுமை எவ்வளவு குறைவு என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இப்படி ஒப்பிட்டுப் பார்த்தால் இந்தி ஆட்சி மொழியாக்கும் திட்டத்தின் அநியாயம் விளங்கும்.

"நம் நாட்டு மொழிகள் பதினன்கு இருக்க, அதில் ஒன்றை அரசியல் மொழி யாக்காமல் அந்நிய மொழியாகிய ஆங்கிலத்தையா யூனியன் மொழியாக்குவது?" என்று வட நாட்டார் கோபமாகக் கேட்கிறார்கள்.

அவர்கள் கேட்பது சகஜம். பண்டித நேரு அவர்கள் கேட்பதுதான் வியப்பாக இருக்கிறது. இந்தியைப் பாரத நாட்டு அலுவல் மொழியாக்கி விட்டால் தென் மக்களுக்கு அது முற்றிலும் அந்நிய மொழியே ஆகும். அந்நிய மொழி என்கிற அவமானத்தைக் காட்டிலும் தெரியாத மொழியில் அரசியல் விவகாரமும் அரசாங்க இலாக்கா விவகாரங் களும் நடப்பது பெரிய நஷ்டமும் தொல்லையுமாகும். தென்னாட்டு மக்களின் கஷ்டத்தை யும் நஷ்டத்தையும் நேருஜி அவர்கள் கவனிக்க வேண்டும்.

உலகம் முழுதும் ஒன்று எனக் கருதிப் பல்வேறு மக்கட் தொகுதிகளையும் ஒன்று படுத்திவிட முயற்சி செய்யும் பண்டித நேரு அவர்கள் ஆங்கிலத்தை அந்நிய பாவத் தோடு 1958 ம் ஆண்டில் நோக்குவது அற்புதமாகும். பீகார், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் இந்த மாகாணங்களில் இந்தி மொழியை அலுவல் மொழியாகச் செய்து முடிப்பதோடு அவர் திருப்தியடைவது நியாயமாகும். அதற்குமேல் அகில பாரத மொழியாக்கி மற்றப் பிரதேசங்களை இதற்கு ஒப்புக் கொள்ளச் சொல்வது நியாயமாகாது.

எல்லா பாரத மொழிகளுக்கும் சம பதவி அளித்து, இந்திய யூனியன் அலுவல் மொழி உலக மொழியான ஆங்கிலம் என்று அவர் பிரகடனப் படுத்திவிட்டு, அரசியல்

சட்டத்தின் பதினேழாவது பகுதியின் அமுலை நிறுத்தி வைக்க மக்கள் சபையில் சட்டம் செய்துவிடுவது நியாயமும் பெருந்தன்மையுமாகும். அத்தகைய பிரகடனம் நம்முடைய தலைவர் ஜவாஹர்லால் நேரு அவர்களின் சரித்திரத்துக்கு இசைந்ததாகும். தென்னாட்டின்மேல் இந்தியைத் திணிப்பது அவரது குணத்துக்கும் பேச்சுக்கும் ஒவ்வாததாகும்.

அமெரிக்க - ஆங்கிலத் தொடர்பு பாரத நாட்டுக்கு அதிகமாகக் கூடாது. இருக்கிற தொடர்பையும் அறுத்துக் கழிக்க வேண்டும் என்ற அந்தரங்கக் கொள்கையைக் கொண்ட கம்யூனிஸ்ட் கட்சியார் 'ஆங்கிலம் வேண்டாம்' என்று சொல்வது எதிர்பார்க்கத் தக்கது.

மேற்கு வல்லரசுகளின் தொடர்பு மட்டுமல்ல; விஞ்ஞானத் தொடர்பும் அறுபட்டுப் போகும், ஆங்கிலத்தை நீக்கிவிட்டோமானால். இந்தி மொழிபெயர்ப்பையும் தமிழ் மொழிபெயர்ப்பையும் நம்பி வாழ்ந்தால் விஞ்ஞான முன்னேற்றம் எவ்வளவுக்கு அடைய முடியும்? அந்த நிதானத்தை ஜவாஹர்லால் நேரு அவர்கள் ஒப்புக்கொள்ள முடியுமா?

''படித்த குழுவினர்கள் தனி சாதியாகப் போயினர். ஆகையினால் இந்தி ஆங்கிலத்தின் ஸ்தானத்தை அடைய வேண்டும்'' என்று நேருஜி அவர்கள் ஒரு சமயம் சொன்னதாகத் தெரிய வருகிறது. இதில் ஆழ்ந்த கருத்தில்லை. படித்தவர்கள் தனி சாதியாக இருந்த காலம் மலையேறி விட்டது. இப்போது மேற்படிப்பு இல்லாதவர்களுக்குத்தான் காலம் என்பது தேர்தல்களில் தெரிந்த விஷயம். அது ஒருபுறம் இருக்க, தென்னாட்டில் 'இந்தி படித்த சாதி' என்று ஒரு தனி சாதி புதிதாக ஏற்பட்டால் அதனால் தமிழ்ப் பாமர மக்களுக்கு என்ன சந்தோஷம் உண்டாகும்?

பாரத மொழிகளுக்கெல்லாம் இந்தி பாஷை ஒரு இணைக்கும் சங்கிலியாகும்; அதனால் நன்மை அடைவோம் என்றும் ஒரு வாதம். தென் மொழிகளுக்கும் வடநாட்டு மொழிகளுக்குமுள்ள பேதத்தை அறியாதவர்கள்தான் இந்தச் சங்கிலி வாதம் பேசலாம். மொழி இலக்கணம் படித்தறிந்தவர்கள் இப்படி வாதிக்க மாட்டார்கள்.

இப்படி யெல்லாம் பேசுவதும் வாதிப்பதும் தவறு என்று தமிழ் அறிந்த நம்முடைய பிரதிநிதிகள் நேரு அவர்களுக்கு எடுத்துக் காட்டுவது கடமை. அந்தக் கடமையைச் செய்யாததின் விளைவு மக்கள் அனுபவிக்க வேண்டியதாகிறது.

சுய நன்மை மொழியன்பாகவும், மொழியன்பு தேச பக்தியாகவும் வேஷம் போடலாம். பாரத நாட்டின் ஒற்றுமை என்று பேசிப் பாதிக்கு மேற்பட்ட மக்களுக்கு அந்நிய மொழியான இந்தியைத் திணிப்பது நீதித் தவறாகும். நிர்வாகத்தைச் சீர்ப்படுத்தி நாட்டின் உணவுப் பிரச்னையைத் தீர்ப்பது முதற் கடமை. அதைக் கவனித்து மற்றப் பிரச்னைகளை ஒத்திப் போடுவது கடமையாகும்.

# மொழிக் கிளர்ச்சியில் ஒத்துழைப்பு

மொழிப் பிரச்னையைப் பற்றிச் சென்னை லஷ்மிபுரம் கோவிலுக்குமுன் நடந்த கூட்டத்தின் விசேஷம் என்னவென்றால் அரசியலில் வேறுபட்ட குழுவினர்கள் எந்த விஷயத்தில் ஒருமுகமாக வேலை செய்ய முடியுமோ, அந்தத் துறையில் ஒத்துழைக்க முடியும் என்பதை நிரூபித்தது. அவரவர்கள் கொண்ட வேறுபட்ட கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் ஒன்றுபட்ட துறையில் சேர்ந்து பணியாற்ற முடியும் என்பதைக் காட்டுவது மிக அவசியம். சில விஷயங்களில் வேறுபட்டால் அவர்களைத் தீண்டாதவர்களாகப் பாவிப்பது நமது நாட்டு மக்களின் சுபாவம். இதுவே சமூகத்தின் பலவீனத்துக்குக் காரணம்.

ஆங்கிலத்தைப் புறக்கணித்து விட்டு இந்திக்குப் பிரதான இடம் அரசியலில் கொடுத்து விட்டால் தென்னாட்டு மக்களுக்கு நஷ்டம் என்பது அனைவரும் ஒப்புக்கொண்ட விஷயம். அதைத் தவிர்க்கப் பலத்த போராட்டம் நடத்த வேண்டியிருக்கிறது என்பதும் வெளிப்படை. கௌஹாட்டி காங்கிரஸ் கூட்டத்தில் இந்தித் திட்டத்தை இளக்கி விட்டதாக எண்ணுவது தவறு. 1965 என்கிற வரம்பைத் தள்ளிப் போடவில்லை. அது அப்படியே சட்டத்தில் இருந்து வருகிறது. இந்தப் பிரச்னையில் வடக்குப் பிரதேசத்தார் மிக ஆவேசத்துடன் வேலை செய்து வருகிறார்கள். ஆபத்தைத் தடுக்க வேண்டுமானால் இந்தச் சமயத்தில் மற்ற விவகாரங்களைப் பற்றிக் கவனிக்காமல் இந்தக் கிளர்ச்சியில் எல்லாக் கட்சியினரும் ஒன்றுசேர்ந்து வேலை செய்யவேண்டும். அப்போதுதான் மத்திய சர்க்காருக்கு இந்தப் பிரச்னையில் தென்னாட்டு மக்களுக்கு ஏற்பட்டுள்ள உணர்ச்சியை அறிந்து நியாயத்துக்கு இணங்குவார்கள்.

வெவ்வேறு கட்சியினர் ஒன்றுபட்டு இந்தப் பிரச்னையில் உழைத்தால் தத்தம் கட்சிக்குப் பலம் சம்பாதித்து விடுவார்களோ என்று பயப்பட வேண்டியதில்லை. வேறுபட்ட பிரச்னைகளை எண்ணிக் கலவரமடைந்து அதன் காரணமாகத் திரட்டக் கூடிய சக்தியைத் திரட்டாமற் போனால் நஷ்ட மடைவோம்.


அழகான பெண்!
கௌஹாட்டி தீர்மானம்
தென்னகம்
காங்கிரஸ்
மொழிக் கொள்கை
அழகிய முகமூடிக்குப் பின்னால் பழைய உருவம் தெரிகிறதே


டாக்டர் லோகியா திரு ஈ.வெ.ரா.வைச் சந்தித்தார்.
இந்தி
இந்தி எதிர்ப்பு

உலக சமாதானம்
அமெரிக்க வெளிநாட்டு இலாக்காவில் மாறுதல் ஏற்படவேண்டும் என்கிறார் அட்லிரை.
டல்லஸ்
நீடூழி வாழ்க!
உலகம்
இந்தியக் குடியரசு
விஜி

# என்ன சேதி?

## தைரியம் வேண்டும்

டாக்டர் லோகியாவைப் பற்றிச் சமீபத்தில் சில ஆண்டுகளாகவே ஒரு சந்தேகம் இருந்து வந்தது. பயித்தியக்கார ஆஸ்பத்திரியில் இருக்க வேண்டிய இவர் எப்படி வெளியில் இருக்கிறார் என்றுதான் பொதுமக்கள் எண்ணி வந்தார்கள். இவற்றிற்குச் சிகரம் வைத்தாற் போல் அமைந்தது, ஹைதராபாத் நகரிலுள்ள கடைகளின் ஆங்கிலப் பெயர்ப் பலகைகளை அழிக்க அவர் தம் கட்சி ஆட்களை ஏவியது! இதைப் போன்ற சர்வ முட்டாள்தனமான செயல் வேறு இருக்க முடியாது! ஹைதராபாத் நகருக்குப் பல ராஜ்யங்களிலிருந்து வருபவர்களும் பல தேசங்களிலிருந்து வருபவர்களும் புரிந்து கொள்ளக் கூடிய பாஷை ஆங்கிலம். 'ஆங்கிலத்தை எல்லாரும் படிக்க மாட்டார்கள், இந்தியைத்தான் படிப்பார்கள்' என்று ஒரு பொய்யை உண்மையாக்கும் கருத்தோடு ஆரம்பிக்கப்பட்டது இந்த இயக்கம்.

ஆகவே, பலகைகளை அழிக்க முற்பட்டபோது, அந்நகரத்து வர்த்தகப் பிரமுகர்கள் கடுமையாக எதிர்த்துத் தடுத்து நிறுத்தியிருக்க வேண்டும். அதற்குப் பதிலாகக் கடைகளை மூடிக் கொண்டு போயிருக்கிறார்கள் என்ற செய்திகளைப் படிக்கிறோம். பாரத நாட்டில் வரவரத் தைரியம் குன்றி, காலிகளைக் கண்டு பயப்படும் வழக்கம் ஏற்பட்டு வருகிறது. இதுவல்ல அஹிம்சை முறை. தங்கள் உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்ளக்கூடத் தைரியம் இல்லாமற் போகக் கூடாது. அதற்காகச் சிறு கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளானாலும் துணிந்து உரிமையை நிலை நாட்டி, காலித்தனங்களை ஒடுக்க வேண்டும்.

## குருவும் சிஷ்யரும்

லோகியா அவர்கள் ஆங்கிலப் பெயர்ப் பலகைகளை அழிக்கப் போகிறார் என்ற செய்தியைக் கேள்விப்பட்டதும், 'இவர் எப்போது இந்தப் பாடத்தை ராமசாமிப் பெரியாரிடம் கற்றுக் கொண்டார்' என்று தமிழ் மக்கள் பேசிக் கொண்டார்கள். அவர்கள் பேசி முடியு முன், திரு ஈ. வெ. ராவைச் சந்திக்கத் திரு லோகியா விரைந்து சென்றார். அத்துடன், 'உங்களை நான் பெரிதும் மதித்து வந்திருக்கிறேன்' என்று சொல்லி ராமசாமிப் பெரியாரைப் பாராட்டியிருக்கிறார். மேலும் ஈ. வெ. ரா. அவர்களை ஹிந்தி கற்றுக் கொண்டு அடுத்த தடவை தம்முடன் பேசும்படியும் வேண்டியிருக்கிறார். குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்தான்!

## பிரிட்டிஷ் நிதிமந்திரி

பாரத சர்க்காரின் நிதி இலாக்கா தலைவர்களைப் பற்றிப் பேச்சு நாட்டில் அடிபட்டு வரும்போது, பிரிட்டிஷ் நிதி மந்திரி தார்னிக்ராப்ட் தமது பதவியை ராஜிநாமாச் செய்து விட்டதாகப் பத்திரிகைகளில் தகவல் வந்தது. அவர் ராஜிநாமாச் செய்ததற்கு முக்கிய காரணம், செலவுகள் இந்த வருஷம் செய்வது போலவே அடுத்த வருஷமும்-அதாவது 1958-59ம் வருஷமும்-செலவு செய்யப் பட்டால் நாடு தாங்காது என்பதுதான். விலைவாசிகள் உயரும். காகிதப் பணம் அதிகரிக்க வேண்டியிருக்கும். ஆகவே, சில முக்கியமான செலவினங்களைக் குறைக்கத்தான்வேண்டும் என்று மந்திரி தார்னிக்ராப்ட் சொன்னார். குழந்தைகளைப் பராமரிக்க அளிக்கப்படும் அலவன்சுகள், பள்ளிகளில் இடைவேளைகளில் சாப்பாட்டுக்காகச் செலவிடும் தொகை, இலவசப் பால் வழங்கச் செய்யப்படும் செலவுகள் முதலியவற்றைக் குறைக்க வேண்டும்; அத்துடன் ராணுவச் செலவையும் குறைக்க வேண்டும் என்றார். நிதி மந்திரி கூறிய எந்தச் செலவினங்களையும் பிரதமர் மாக்மில்லன் குறைக்க விரும்பாததால், அவர் ராஜிநாமாவை ஏற்றுக் கொண்டார். விரைவில் பிரிட்டனில் தேர்தல் வர இருப்பதால் தங்கள் நிதி மந்திரியின் யோசனையைக் கேட்டு, பிரிட்டன் விஷப் பரீட்சை செய்யத் தயாராக இல்லை.

## ருஷ்யாவில் மதுவிலக்கு

ருஷ்ய கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் குருசேவ் ருஷ்யாவில் மது விலக்குப் பிரசாரம் தொடங்கியிருக்கிறார். வீடுகளில் சாராயம் காய்ச்சுவதையும், திரைப்படங்களில் குடிப்பது, குடித்துக் கூத்தாடுவது போன்ற காட்சிகள் காண்பிப்பதையும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். ''பொது மக்களும், அதிகாரிகளும் சட்டங்களை நன்றாக அமுல் நடத்த முயல வேண்டும்'' என்று கூறியிருக்கிறார்.

ருஷ்யா போன்ற நாடுகளிலேயே மதுவை இவ்வளவு வன்மையாகக் கண்டிக்கிறார்கள் என்றால் நம் நாட்டுக்குச் சொல்லத் தேவையே இல்லை. ஏழை

எளிய மக்கள் மதுவுக்கே தங்கள் பணத்தைச் செலவழித்து விட்டு என்றென்றும் ஏழைகளாகவே இருக்கநேரிடும். இதைக் கருதித்தான் காந்திஜியும் ராஜாஜியும் தீவிரமாகப் பல்லாண்டுகள் மதுவிலக்குப் பிரசாரம் செய்தார்கள். நம் சென்னை ராஜ்யத்திலும் மதுவிலக்குச் சட்டம் செய்யப்பட்டிருக்கிறது-இதனால் பெருவாரியான குடிப் பழக்கமுள்ள மக்கள் பயன் அடைந்திருக்கிறார்கள். முக்கியமாக, பெண்கள் இந்தச் சட்டத்தினால் பயன் அடைந்திருக்கிறார்கள். ஆயினும் சுயநலக்காரர்கள் இருந்தே வருகிறார்கள். கள்ளத்தனமாகச் சாராயம் காய்ச்சுதல் ஆங்காங்கே நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கிறது; அதிகமாகவே நடைபெற்று வருகிறது. இதை நமது சென்னை சர்க்காரின் மதுவிலக்குப் போலீஸ் தீவிரமாக ஒடுக்கி வருகிறார்கள். என்றாலும், அவர்களுக்குப் பொதுமக்களின் ஒத்துழைப்பு இன்னும் தேவைப்படுகிறது. நாட்கள் செல்லச் செல்ல, சட்டங்களை மீறிப் பணம் சம்பாதிக்கும் தொழில் வரவரக் குறைந்து முடிவில் நின்றுதான் போகும்.

இனி கம்யூனிஸ்ட் கட்சியினரும் 'குருசேவைப் பின்பற்றி மதுவிலக்குக்கு ஆதரவு தருவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். தலைவர்கள் எப்படியாயினும் கம்யூனிஸ்ட் கட்சியிலுள்ள தொழிலாளிகள் ருஷ்யத் தலைவரின் பேச்சை மதிப்பார்கள்.

## தாயுள்ளம்

தஞ்சை ஜில்லாவில் திருநாகேசுவரம் என்ற ஊரிலுள்ள குளத்தில் ஜயகுமார் என்ற மூன்று வயதுக் குழந்தை நழுவி விழுந்து விட்டதாம். குளத்தின் கரையிலிருந்தவர்கள் "குழந்தை மூழ்குகிறது" என்று பலத்த சத்தம் போட்டதன்றி வேறு ஒன்றும் செய்ய முடியாமல் இருந்தார்களாம்! அந்தச் சமயம் அந்தக் குளத்துக்கு எதிர்த்தாற்போலிருந்த வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த ஓர் இளம் பெண்மணி உடனே ஓடிப் போய்க் குளத்தில் பாய்ந்து குழந்தையைக் காப்பாற்றியிருக்கிறார். குளத்தில் மூழ்கிய குழந்தையை எடுத்துக்கொண்டு போய் ஆஸ்பத்திரியில் முதல் சிகிச்சை செய்ததும், குழந்தை பூரண குணமடைந்து சௌக்கியமாக இருக்கிறது என்று வைத்தியர்கள் கூறினார்களாம்!

பத்திரிகைகளில் கொலை, கொள்ளை முதலியவற்றுக்கு இலக்காகி நமது மக்கள் கோழைகளாகி வருகிறார்கள் என்ற செய்திகளையே படித்து வரும் நமக்கு, தமிழகத்தின் ஒரு பெண்மணி தைரியமாகக் குளத்தில் மூழ்கி ஓர் உயிரைக் காப்பாற்றி யிருக்கிறார் என்ற செய்தியைப் படிக்கும்போது பெருமித உணர்ச்சி உண்டாகிறது! எப்படி ஒரு பெண்மணிக்கு இவ்வளவு துணிச்சல் உண்டாயிற்று என்பதை நினைக்கும் போது "**தாயுள்ளத்தின் மாண்பு அது**" என்று அறிந்து வியக்கிறோம்.

## காந்திமகானின் நினைவு

காந்தி மகான் மறைந்த ஜனவரி 30ம் தேதியிலிருந்து, அவர் நினைவை நெஞ்சிலே நிறைத்து அவருடைய அஸ்திகளை நீரிலே கரைத்த பிப்ரவரி 12ம் தேதி வரை சர்வோதய விழாவாகத் தேசமெங்கும் பக்தி சிரத்தையுடன் கொண்டாடப் படுகிறது. இந்தக் காலத்தில் காந்தியின் நினைவோடு ஒரு சிட்டம் நூலைக் காணிக்கையாகத் தருபவர்களுக்குக் காந்தி மகானின் திருவுருவம் பொறித்த 'ஸ்டாம்ப்' நினைவுப் பரிசாக வழங்க சர்வோதய சங்கத்தினர் ஏற்பாடு செய்திருக்கின்றனர். காந்தி மகான் மறைந்த ஜனவரி 30ம் தேதி சென்னை அடையாறு காந்தி மண்டபத்தில் பிரார்த்தனைக்கூட்டமும் சொற்பொழிவுகளும் நடைபெறும். 12-2-58ம் தேதியன்று சென்னை கடற்கரையில் போலீஸ் ஐ. ஜி. ஆபீசுக்கு எதிரில் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெறும். இவ்விரண்டு கூட்டங்களுக்கும் சென்னை நகரப் பெருமக்கள் திரளாக விஜயம் செய்து சிறப்பிப்பார்கள் என்பதில் ஐயமில்லை.

# உலகை மறந்தாள்!

தாமரைக் குளத்தினிலே — அவள்
தண்ணீர் மொள்கையிலே — தன்
பூமனைக் கண்டாளவன் — இந்தப்
பூவுலகை மறந்தாள்.

காதலனைக் கண்டதும் அவள் உள்ளத்தில் பொங்கிய ஆனந்தம் அவள் முகத்தில் பிரதிபலிக்கிறது! அவனுடன் உறவாடிய நாட்களும் நினைவுக்கு வருகின்றன. இந்த அழகிய நங்கையை இவ்வார அட்டைச் சித்திரமாக வழங்குகிறார் ஓவியர் வினு!

# அருள் வாக்கு

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய பஞ்சேந்திரியங்களும் பிரபஞ்சத்தில் அடங்கியுள்ள ஆதார சக்திகளை நமக்கு உணர்த்துகின்றன. ரேடியோ ரிஸீவிங் செட்டைப்போல இந்தப் பஞ்சேந்திரியங்களும் வெளியிலிருந்து பல்வேறு சலனங்களைப் பெற்று, நமது மூளைக்குக் கொண்டு செல்கின்றன. இதனால்தான் இவைகள் ஞானேந்திரியங்கள் என்று சொல்லப்படுகின்றன. உமிழ் நீரின் உதவியால் பல்வேறு ருசிகளைக் கண்டறியும் நாக்கு ஒரு கர்மேந்திரியம். பேசுவதற்கும் நாவை நாம் பயன்படுத்துகிறோம். ரோமம், நகங்கள் நீங்கலாக ஸ்பரிச உணர்ச்சி உடலின் எல்லாப் பாகங்களிலும் இருக்கிறது. ரூபம், ரஸம், கந்தம், ஸ்பரிசம், சப்தம் ஆகிய ஐந்து வழிகளால் நாம் வெளி உலகுடன் தொடர்பு கொள்கிறோம்.

இந்தப் பஞ்சேந்திரியங்களும் நமது வாழ்வுக்கு ஆனந்தம் அளிக்கின்றன. நல்ல உணவு, செவிக்கினிய கீதம், நறுமணம், அழகிய கலை, குளிர்காற்று ஆகிய இவைகள் எல்லாம் நமது வாழ்க்கையில் பேரானந்தத்தை அளிக்கின்றன. பகவானின் பேரருளால் இந்த நல்ல பொருள்கள் எல்லாம் நமக்குக் கிடைக்கின்றன. நாமாக ஒரு மணி அரிசியைக்கூட உற்பத்தி செய்ய முடியாது. இறைவன் எங்கும் வியாபித்திருக்கையில் பகவானிடமிருந்து பிறக்கும் எல்லா ஈசுவராம்சங்களையும் நாம் வணங்க வேண்டும். நமக்கு ஆனந்தமளிக்கும் இந்தப் பொருள்களை எல்லாம் முதலில் ஈசுவரனுக்கு நன்றியுடன் அர்ப்பணம் செய்துவிட்டு, பின்னர் அவைகளை ஆண்டவனின் அருட் பிரசாதங்களாக ஏற்று இன்புறுவது நமது கடமை ஆகும். இந்தப் பொருள்களை எல்லாம் அளிக்கும் பகவானுக்கு இப்பொருள்களை அர்ப்பணிக்காமல் நாம் அனுபவித்தோமானால் அது திருடுவதற்குச் சமமாகும் என்று பகவத்கீதை கூறுகிறது. பஞ்சேந்திரியங்களுக்கும் ஆனந்தம் அளிக்கும் பொருள்களை ஆண்டவனுக்குச் சமர்ப்பிப்பதுதான் பஞ்சோபசாரம் என்பது. அதாவது கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம் என்ற உபசாரங்கள்.

இந்த ஆராதனைகளை நாம் மானஸிக பூஜையாகக் கூடச் செய்யலாம். மந்திர ஜபம் செய்யும் பொழுது குலதெய்வத்துக்கு மானஸிக பூஜை செய்யலாம். நமது ஞானேந்திரியங்களும் இவைகளை ஊக்குவிக்கும் சக்திகளும் பரமாத்மாவுக்கு பக்திபூர்வமாகச் சமர்ப்பிக்கப்பட்டால் இவைகளை துஷ் பிரயோகம் செய்ய நமக்கு மனம்வராது. ஈசுவரார்ப்பணம் மூலம் தீய காரியங்களிலிருந்து இவைகளை நாம் விளக்குகிறோம். தெய்விக லட்சியத்துக்கு உயர்த்தி, புண்ணியம் அடைகிறோம்.

இந்த உபசாரங்கள் எல்லாம் பூஜை விதிகளின் கீழ்வருகின்றன. ''இவ்வளவு விரிவான சடங்குகள் எதற்கு? மௌனப் பிரார்த்தனை போதாதா?'' என்று கேட்கலாம். ஒரு உண்மை பக்தன் பரம் பொருளின் மூல சக்தியையும், தனக்குப் பேரின்பம் தரும் பொருட்களின் உட்பொருளையும் உணர்ந்து நன்றியுடன் அந்தப் பொருள்களை ஆண்டவனுக்குச் சமர்ப்பித்துவிட்டு, பின்னர் உபயோகிக்கிறான் என்பதே இந்தப் பூஜைச் சடங்குகளின் முக்கியமான பொருளாகும். மிகச் சிறந்தவைகளையும், மிகவும் பரிசுத்தமானவைகளையும் நான் பகவானுக்கு அர்ப்பணிக்க வேண்டும். ஈசுவரார்ப்பணம் செய்யப்படாத எதையும் நாம் அனுபவிக்கக் கூடாது. இந்தப் பழக்கம் இருந்து வந்தால் ஒவ்வொருவனும் ஆண்டவனுக்கு அர்ப்பணிக்கத் தகுந்த பொருட்களை அடைந்து, அவைகளை ஆண்டவனுக்கு அர்ப்பணித்து ஆனந்தம் பெறுவான். இதனால் வாழ்வு பரிசுத்தமடையும். இப் பூஜா விதிகள் காப்பாற்றப்படா விட்டால் இவைகளின் முக்கியத்தை மக்கள் மறந்துவிடக் கூடும்.



ஸ்ரீ சங்கராச்சாரியார் காஞ்சிகாமகோடி பீடம்

# புகாருக்குப் பதில்

இவ்வாரம் சமஷ்டிக் கட்சித் தலைவரான ஸ்ரீ எஸ். ஜே. வி. செல்வநாயகம் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகாவைச் சந்தித்து முக்கியமான பேச்சுகள் நடத்தினர். பாஷைத் தகராறு நாட்டில் ஒரு பெரிய நெருக்கடியையும் கொந்தளிப்பையும் விளைவித்திருந்த பொழுது பிரதம மந்திரியும் சமஷ்டிக் கட்சித் தலைவர்களும் சந்தித்துச் சென்ற ஆகஸ்டு மாதம் ஒரு சமரச ஒப்பந்தம் செய்து கொண்டார்கள். சிங்களம் மட்டுமே நாட்டின் ஆட்சி மொழி என்ற அடிப்படைக் கொள்கையை மாற்றாமல் தமிழ் மொழிக்கு நியாயமான அந்தஸ்து அளிக்கவும், தமிழர் பெரும்பான்மையோர்களாக வாழும் மாகாணங்களிலே தமிழில் நிர்வாகம் நடக்கும் முறையில் பிராந்திய சபைகள் ஏற்படுத்தவும் இந்தச் சமரச ஒப்பந்தத்தில் அரசாங்கம் ஒப்புக் கொண்டிருந்தது.

ஒப்பந்தம் கையெழுத்தாகி ஐந்து மாதங்களாகியும் அதை அமுலுக்குக் கொண்டு வர அரசாங்கம் எவ்விதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை. நடவடிக்கை எடுக்கும் அறிகுறியையும் காணோம். இதைச் சுட்டிக் காட்டவும் பிராந்திய சபை மசோதாவை விரைவில் பார்லிமெண்டு சபைக்குக் கொண்டு வரவேண்டுமென்று வற்புறுத்தவுமே சமஷ்டிக் கட்சித் தலைவர் ஸ்ரீ செல்வநாயகம் இவ்வாரம் பிரதம மந்திரியைச் சந்தித்துப் பேசினர்.

தவிர, உத்தியோக பாஷை இலாகா மீதும் ஸ்ரீ செல்வநாயகம் சில புகார்களைச் சொன்னர். இந்த இலாகா தமிழ் மொழியிடம் சிறிதளவு அக்கறையும் காட்டவில்லையென்றும் தமிழ் அகராதியைத் தயாரிக்க இந்த இலாகா பொறுப்பேற்றிருந்தும் அதற்குத் தகுதியான ஒருவரும் அந்த இலாகாவில் நியமிக்கப்படவில்லையென்றும் உதவிக் கமிஷனராக ஒரு தமிழரை நியமிக்க வேண்டுமென்றும் ஸ்ரீ செல்வநாயகம் பிரதம மந்திரியிடம் வற்புறுத்தினர். நீண்ட நேர விவாதத்துக்குப் பின்னர் பிராந்திய சபை மசோதாவை விரைவில் தயாரித்துத் திரு செல்வநாயகத்தின் பரிசிலனைக்கு அனுப்புவதாகப் பிரதம மந்திரி ஒப்புக் கொண்டார். உத்தியோக பாஷை இலாகா மீது கூறப்பட்ட புகார்களை ஆராய்வதற்காக அந்த இலாகா கமிஷனருடன் விரைவில் ஒரு மகாநாடு கூட்டுவதாயும், அந்த மகாநாட்டுக்குத் திரு செல்வநாயகத்தையும் அழைப்பதாயும் பிரதம மந்திரி திரு பண்டாரநாயகா உறுதிமொழி கூறினர்.

பிப்ரவரி மாதம் 4ம்தேதி இலங்கை தனது பத்தாவது சுதந்திர தினத்தைக் கொண்டாடுகிறது. பெரிய தோரணையில் இந்தக் கொண்டாட்டங்களை நடத்த மந்திரிகள் முதலில் திட்டமிட்டிருந்தார்கள். வெள்ளத்தின் காரணமாகப் பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் கஷ்டத்துக்கு உள்ளாகியிருப்பதை உத்தேசித்துச் சுதந்திர தின வைபவத்தில் பிரார்த்தனைகளுக்கே முதலிடம் கொடுப்பதென்றும் மற்றத் தமாஷாக்களை யெல்லாம் ரத்துச் செய்து விடுவதென்றும் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. சுதந்திர தின விழாவில் கலந்து கொள்ளுவதற்காக மலாயா பிரதம மந்திரி இலங்கைக்கு வருகிறார். இந்திய உதவி ஜனாதிபதி டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணனும் இதற்கு வருவாரென்று எதிர் பார்க்கப்படுகிறது.

சுதந்திர தினத்தைத் துக்க தினமாக அனுஷ்டிப்பதென்று தமிழ் அரசுக் கட்சி வாலிபர் முன்னணி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. பாஷை சமரச ஒப்பந்தத்தை இதய சுத்தியுடன் அமுல் நடத்துவதாகப் பிரதம மந்திரி வாக்குறுதி யளித்தால் ஆர்ப்பாட்டங்களில்லாமல் பிரார்த்தனை தினமாகச் சுதந்திர தினத்தைத் தமிழர்கள் அனுஷ்டிப்பார்களென்றும், தமிழர்களுக்குச் சுய நிர்ணய உரிமையும் சமஷ்டி அரசியல் திட்டமும் கிடைக்கும் வரையில் சுதந்திர தினத்தை விழாவாகத் தமிழர்கள் கொண்டாடுவதற்கில்லை யென்றும் தமிழரசுக் கட்சி பொதுக் காரியதரிசி டாக்டர் இ. எம். வி. நாகநாதன் ஒரு அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்.

கொழும்புக்கும் தலைமன்னாருக்கு மிடையில் வெள்ளம் காரணமாகச் சென்ற டிசம்பர் 24-ம் தேதி முதல் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த ரயில் போக்குவரத்து இவ்வாரம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. கொழும்புக்கும் யாழ்ப்பாணத்துக்கும் முறையான ரயில் போக்குவரத்தும் இவ்வாரத்தில்தான் மறுபடியும் ஆரம்பமாகி யிருக்கிறது.

—ரஜனி



குட் ஆசாமி:—எங்காணும்......... அது நான் மாப்பிள்ளைக்காக அலைஞ்சு மாப்பிள்ளையும் கிடைத்து விட்டாரே...இன்னும் ஏன் நீச அலைந்து கொண்டிருக்கிறீர்?......

மிஸ்டர் குடை:—வீடு பார்த்துத் தந்த அப்புறம்தான் கல்யாணம் செய்துக்குவேன்னு மாப்பிள்ளைப் பையன் சொல்கிறான். அவனுக்கு ஒரு வீட்டுக்காக அலைஞ்சிண்டிருக்கேன்!

# முன்னேற்றத்தின் அறைகூவல்

இந்திய மக்களின் ஆசைகளும் நம்பிக்கைகளுமே உருவெடுத்தது போன்றது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம். நாட்டில் சோஷலிச (பொதுநல) பாணி சமுதாயத்தை உருவாக்கும் பெரும் பணியில் ஈடுபட்டுள்ளது இத்திட்டம். ஆதாரத் தொழில்களும் கனரகத் தொழில்களும் வளர்ந்து, விவசாயமும் உற்பத்தியும் பெருகி, நாட்டின் வருமானம் அதிகரித்து, அதிகமான வேலை வாய்ப்புகள் ஏற்பட்டு, உழைப்பின் பயனும் பொருளாதாரமும் எல்லா மக்களுக்கும் சமமாகக் கிடைக்க வேண்டுமென்பதே இத்திட்டத்தின் நோக்கம். இந்த வளர்ச்சிப் பாதையில் எழுகிற பிரச்சினைகளெல்லாம் நமது முன்னேற்றத்தின் பல்வேறு திருப்பங்களேயாகும். நாம் விரும்புகின்ற இந்த முன்னேற்றம் நம்மை நோக்கி விடுக்கும் அறைகூவலை நாம் ஏற்றுக் கொள்ளுகிறோம். அதுவும் தியாக உணர்ச்சியோடும், சேவை மனப்பான்மையோடும், 'இத்திட்டத்தை நிறைவேற்றியே தீருவோம்!' என்னும் உறுதியான ஆர்வத்தோடும் ஏற்றுக் கொள்ளுகிறோம்...!

**நாடு முன்னேற - வளங்கள் பெருக**

**நிறைவேறுகிறது, திட்டம்**



"நமது நாட்டின் புனரமைப்பு மிகப் பெரிய லட்சியமாகும். அதை நிறைவேற்றும் பொறுப்பை நாம் மேற்கொண்டிருக்கிறோம். இப்பெரும் பணிக்கு ஒன்றுபட்ட உழைப்பு மட்டும் போதாது. ஆர்வமும் தியாக உணர்வும் கொண்ட ஒன்றுபட்ட உழைப்பு வேண்டும்!"

—ஜவஹர்லால் நேரு








விவாகம் செய்துகொண்டு குடும்ப வாழ்க்கை நடத்திப் பொருள் சேர்த்தும் பாதுகாத்தும் வருவது என்னத்துக்கு?—என்கிற கேள்வியைப் போட்டுக் கொண்டு பதில் சொல்லுகிறார்.

அன்னம் இடவேண்டியவர்களுக்கு அன்னமிட்டு உதவுவதற்கு இல்லறம் ஒரு சாதனம் ஆகிறது. இல்லற வாழ்க்கையென்பது ஒரு உரிமையல்ல. சமூகத்துக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்வதற்கு வேண்டிய ஒரு சாதனம்.

**இருந்தோம்பி இல்வாழ்வது**
**எல்லாம் விருந்தோம்பி**
**வேளாண்மை செய்தல்**
**பொருட்டு.**

'இருந்து ஓம்பி' என்பதில் இருந்து என்பதற்கு, துறவியாகி விடாமல் இல்லறத்தில் இருந்து என்பது பொருள். ஓம்புதல் என்பதில் குடும்பத்தைத் தாங்குதலும், பொருள் தேடிப் பாதுகாத்தலும் அடங்கும். வடமொழியில் குடும்ப யோகக்ஷேமம் என்று சொல்லுவதும் இதுவே.

விருந்தோம்பி உதவுவதே இல் வாழ்க்கையின் பயன். அந்தப் பயனையே நோக்கமாகக் கொண்டு குடும்பம் நடத்த வேண்டும். விருந்தோம்புதலில், பசியினால் வருந்துவோருக்கு அன்னம் இடுவதும் தவிர, எல்லாவித உதவியும் அடங்கும். வேளாண்மை செய்தல் என்றால் பிறருக்கு உதவுதல்.

இல்லற வாழ்க்கை இன்பம் தரும் ஒரு வாழ்க்கைமுறையான போதிலும், அதற்குரிய கடமைகளை மறத்தலாகாது என்பது பாட்டின் கருத்து.

அதிதியை அழைத்து உடனிருந்து உண்ணாமல் தனித்து உண்ணுதலைப் பற்றிச் சொல்லுகிறார். அமிருதம் ஆயினும் அதிதியை வெளியே நிறுத்தி உண்பது தகாது.

**விருந்து புறத்ததாத்**
**தாம் உண்டல் சாவா**
**மருந்து எனினும் வேண்டல்பாற்று**
**அன்று.**

[சாவா மருந்து என்பதற்கு நேர் வடமொழி அமிருதம். ம்ருத் என்றால் சாவு. ஆகையினால் அம்ருதம் என்றால் சாவா மருந்து]

அதிதியாக வந்தவனை வீட்டுக்கு வெளியே நிறுத்தி விட்டு உண்பது பெருந் தவறு. தனித்து உண்பதால் சாகாத நிலை பெறுவதாயினும் கூடாது என்கிறார் முனிவர். எதிர்மறையாகச் சொன்னால்,நஞ்சாகிலுங்கூட விருந்தினருடன் புசித்தால் அது அமிழ்தமாகும்.

அதிதிகளை அழைத்து உடனிருந்து உண்பவனுடைய பாக்கியத்தைப் பற்றிச் சொல்லுகிறார்.

**அகனமர்ந்து செய்யாள்**
**உறையும் முகனமர்ந்து**
**நல்விருந்து ஓம்புவான் இல்.**

செய்யாள் என்பது திருமகள். பாக்கியதேவதை. அவள் மிகத் திருப்தியுடன் அந்த வீட்டினின்று போகாமல் நிலையாக இருப்பாள். எந்த வீட்டில்? முகன் அமர்ந்து — அதாவது மன மகிழ்ச்சியோடு, அதை முகத்திலும் காட்டி விருந்தாளியை அழைத்து இல்லறக் கடமையைச் செய்பவன் வீட்டில். அப்படிச் செய்யாவிடில் பாக்கியதேவதை மனம் நொந்துகொள்வாள். அகன் அமர்ந்து என்பதில் இந்தப் பொருள் காண வேண்டும்.

விருந்தினரை அழைக்கும் போது உண்மை மகிழ்ச்சி அகத்திலிருந்து பொங்கி முகம் பொலிவுபெறவேண்டும்.

பாக்கிய தேவதை அளித்த செல்வம், நல்ல வழியில் பயன்பட்டால் பாக்கிய தேவதைக்குத் திருப்தி உண்டாகும். ஈட்டியபொருள் இவ்வாறு செலவாகிப் போவதனால் குறைந்து போகும் என்று பயப்பட வேண்டாம் என்று சொல்வதற்காகச் 'செய்யாள்' அந்த இல்லத்தில் "அகன்மர்ந்து உறையும்" என்கிறார்.

ஒரு விஷயத்தில் எச்சரிக்கையும் செய்கிறார். "நல் விருந்து ஓம்புவான் இல்" என்றார். 'நல்' என்றால் குணத்தினால் தகுதி பெற்றவருக்கும், வறுமையினால் உதவியை எதிர்பார்ப்பவருக்கும் விருந்தளிக்க வேண்டும் என்று பொருள். பாக்கிய தேவதை அளித்த செல்வத்தை வீணாக்கலாகாது.

# தேரடிப் பைத்தியம்

டி. ஜி. சீனிவாசன்

'தேரடியிலே என்ன விசேஷம்? அத்தனை பேர்கள் கும்பலாய் நின்று கொண்டிருக்கிறார்களே!'

'பணக்காரன் பின்னால் பத்துப் பேர்; பைத்தியக்காரன் பின்னால் பத்துப் பேர் என்று வசனம் உண்டல்லவா? தேரடியிலே ஒரு பைத்தியக்காரன் உட்கார்ந்திருக்கிறான். அவன் சேஷ்டைகளைப் பார்க்கத்தான் இத்தனை பேர்.'

'நல்ல வேடிக்கை!' என்று சிவசாம்பு சொன்னாலும் அவனால் தேரடிக்குப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆர்வத்தை அடக்க முடியவில்லை. கும்பலோடு கும்பலாய் அவனும் நின்று பார்த்தான்.

தேரடியிலே கிழிந்த சட்டையும் வேஷ்டியுமாக ஒருவன் உட்கார்ந்திருந்தான். அவன் பக்கத்தில் கந்தல் துணி மூட்டை யொன்றும், காகிதக் கட்டொன்றும் கிடந்தன. கூட்டத்தைச் சற்று வெறித்துப் பார்த்த அவன், 'ஏ பைத்தியங்களா! என்ன பார்க்கிறீர்கள் எல்லோரும்?' என்று இடி குரலில் கேட்டான். எல்லோரையும் அடித்து விரட்ட விரும்புவதுபோல் சற்று உடம்பைத் தூக்கினான். கூட்டத்திலிருந்த கோழைகளில் சிலர் பின் நகர்ந்து விட்டனர்.

''குளத்தில்தானே குதித்துவிட்டாள்? அதனாலென்ன? போகட்டும், எக்கேடாவது கெட்டு.... இதோ பாருங்கள் ஸார்! இதெல்லாம் அவள் கல்யாணத்துக்காகத் தைத்த உருப்படிகள். இதோ பாருங்கள்......இதெல்லாம் ஜாதகக் கட்டுகள். எத்தனை இடம்! எத்தனை இடம்! ஹஹ்ஹஹ் ஹா.......கடைசியில் போயிட்டாள் ஸார், போயிட்டாள்! அழுங்கள், பிலாக்கணம் பாடுங்கள்! நான் அழுகிறேனே, நீங்கள் ஏன் அழாமல் இருக்கிறீர்கள்? எல்லோரும் ஒன்று சேர்ந்து அழலாம்'' என்று சொல்லி 'ஓ' வென்று அழவாரம்பித்தான் அவன்.



''சற்று நேரத்துக்கு ஒரு தடவை இப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறான்'' என்றார் ஒருவர்.

''வயது முப்பதுக்கு மேலிராது. படித்தவனாயும் இருப்பான் போலிருக்கிறது. எந்த ஊர் என்று தெரியவில்லை. ஒரு மணி நேரமாய்த் தேரடியில் உட்கார்ந்திருக்கிறான்'' என்றார் இன்னொருவர்.

சிவசாம்புவோ 'இந்த முகத்தை எங்கே பார்த்திருக்கிறோம்!' என்ற யோசனையில் ஆழ்ந்தான்.

சட்டென்று, ''அட வேம்பு! நீ யாடா?'' என்று உரக்கக் கத்திவிட்டான் உணர்ச்சியை அடக்க முடியாமல்.

பைத்தியக்காரன் அழுகையை 'டக்' கென்று நிறுத்தி அவனையே வெறித்துப் பார்த்தான்.

''யாரடா நீ? என்பேர் உனக்கு எப்படியடா தெரிந்தது?'' என்று உரக்கக் கேட்டான்.

''பைத்தியத்துக்குத் தெரிந்தவன்'' என்ற ஹோதாவிலே சிவசாம்புவுக்குக் கூட்டம் முன்னேற வழிசெய்தது.

அருகில் நின்றுகொண்டிருந்த ஒருவர், ''உங்களுக்குத் தெரிந்த பேர்வழியா! ஏன் இப்படி ஆகிவிட்டார்?'' என்று ஆவலை அடக்க முடியாமல் கேட்டார்.

''கல்லூரியில் என்னோடு படித்தவன் ஸார் இவன்! கல்யாணத்துக்குத் தங்கை ஒருத்தி இருந்தாள்!'' என்று ரத்தினச் சுருக்கமாய்ப் பதில் சொல்லி விட்டுப் பைத்தியத்தை நெருங்கி, ''எழுந்திருடா வேம்பு; வீட்டுக்குப் போகலாம், வா'' என்றான்.

''தொடாதேடா, தொடாதே. அந்த வேம்பு செத்துப்போய் விட்டான். குளத்தில் குதித்து விட்டானடா. இதெல்லாம் பார். எத்தனை ஜாதகக் கட்டு. இதெல்லாம் அவளுக்கு வாங்கிய பட்டுப் புடவைகள்....'' பைத்தியம் புலம்பியது.

அருகே, கோயிலிலிருந்து நாககசுர ஒலி காற்றில் தவழ்ந்து வந்தது.

''அதோ, யாருக்கோ கல்யாணம், கல்யாணம்....ஆனால் என் தங்கைக்கு மட்டும் கல்யாணமில்லை!''

சிவசாம்பு, வேம்புவின் கையைப் பிடித்துத் தூக்கி மெதுவாகத் தேரடியிலிருந்து வெளியே கொண்டு வந்தான்.

கல்லூரியில் படித்த நாட்களில் ராஜா மாதிரி இருப்பான் வேம்பு. நாடகங்களில் ராஜா வேஷம் அபாரமாகப் போடுவான். அந்த வேம்பு இப்போது பைத்தியமாகி விட்டான்!

தேரடியை விட்டு வெளியே வந்ததும், 'புர்..ர்..ர்..'என்று சப்தம் போட்டு நண்பன் பிடியிலிருந்து திமிரப் பார்த்தான் அவன்.

பின்பு, ''எங்கேடா அந்த ஹைட்ரஜன்குண்டு! கொண்டுவா. அதில் நாலை என் தங்கையைக் குளத்தில் விழச் செய்தவன் தலையிலே போட்டு அவனையும், சமூகத்தையும் பொசுக்கி விடுகிறேன், பொசுக்கி'' என்று கூவினான்.

''சரி, சரி..இன்னும் கொஞ்சநேரம் இங்கே நின்றால் இது கல்லெடுத்து அடிக்கக் கிளம்பி விடும். போகலாம்'' என்று கூறிக்கொண்டே நகர்ந்தார் ஒருவர்.

சிவசாம்புவின் கண்களில் நீர் துளித்தது..'இந்தப் பைத்தியத்தை எப்படி வீடு கொண்டு போய்ச் சேர்ப்பது?' என்ற கவலையும் பிறந்தது.

உடம்பை ஒரு முறுக்கு முறுக்கிச் சிவசாம்புவின் பிடியிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட பைத்தியம், ''ஓடுங்கடா எல்லாரும். இங்கே நின்றால் அடித்துக் கிழித்துத் தவிடுபொடியாக்கி விடுவேன்'' என்று கையைச் சுழற்றியது. சிலர் விழுந்தடித்துக் கொண்டு வேகமாக ஓடினார்கள். 'ஐயோ,ஆபத்து! பைத்தியத்தின் கையில் சிக்கினால் அது சும்மா விடாது'என்று கத்திக்கொண்டே சிலர் விரைந்தார்கள்.

கும்பலில் இருந்த ஒருவர் 'பட, பட' வென்று கையைத் தட்டி, ''பிரமாதம்! பிரமாதம்!'' என்று கூவினார்.

பைத்தியக்காரன்புன்னகை பூத்தான். பின்னர், ''எப்படி, ரொம்ப 'ஓவ'ராகி விட்டதோ?'' என்றான்.

''இல்லை, இல்லை! நன்றாயிருக்கிறது. உன் நண்பராலேயே உன்னைத் தெரிந்து கொள்ள முடியவில்லையே!'' என்றார் கை தட்டியவர்.

''சிவசாம்பு! நீ இந்த ஊரில் இருக்கிறாயென்று தெரியுமே தவிர என் நடிப்பைப் பார்க்க வருவாயென்று நினைக்கவில்லை. சௌக்கியமா?'' என்று கேட்டான் வேம்பு.

''காரில் வந்து ஏறிக்கொள்ளுங்கள். வழியில் விவரமெல்லாம் பேசிக்கொள்ளலாம். இப்படியே இந்தப் பைத்தியக்கார வேஷத்தில் எத்தனை நேரம் இருப்பீர்கள்?'' என்றார் கைதட்டியவர்.

''ஆஷா பிலிம்ஸ் டைரக்டர் இவர்; எனக்குப் பைத்தியம் போல் நடிக்க வருமா என்று சந்தேகப் பட்டார். நீங்கள் எல்லாரும் கண்டு களித்தது அவர் டைரக்ட் செய்யப் போகும் படத்தில் ஒரு கட்டம். பொதுஜனங்கள் எதிரிலேயே நடித்துக் காட்டுவதாகச் சொல்லி அழைத்து வந்தேன்..சரி, நான் வரட்டுமா?'' என்று கை கூப்பி வணங்கினான் வேம்பு.

''அட, பாவி! நீ பைத்தியக்காரன் என்று நம்பி முக்கியமான வேலையையும் விட்டு விருதாவாக நின்றுவிட்டேனே?'' என்று சொல்லியபடி அங்கிருந்து புறப்பட்டார் ஒருவர்.

''நல்ல நடிப்புடா, என் உள்ளம் எப்படி வேதனைப்பட்டுப் போயிற்று தெரியுமா....ஆமாம். உன் தங்கை....'' என்று இழுத்தாற்போல் நிறுத்தினான் சிவசாம்பு.

''இவர்தான் என் தங்கையின் கணவர்; ஆஷா பிலிம்ஸ் டைரக்டர் வெங்கடராமன். இவன் என் கல்லூரி நண்பன் சிவசாம்பு'' என்று ஒருவருக்கொருவரை அறிமுகம் செய்து வைத்தான் நடிகன் வேம்பு!




## . . . உங்கள் கையில்

**ரூ. 12,000**
முழுச் சீட்டு

★

**12 வருடங்கள்**

★

வருஷாந்தரத் தவணை
ரூ. 1000

★

ஆரம்பத் தேதி
மார்ச் 17
1958

நீங்கள் விரும்பும் வீட்டையோ, நிலத்தையோ சுலபமாக வாங்கலாம். அல்லது உங்கள் வீட்டைப் பெரிதாகக் கட்டவோ, கடன் ஏதாவது இருந்தால் அதை அடைக்கவோ எங்கள் 12 வருடச் சீட்டு உங்களுக்கு உதவியாயிருக்கும். முழு டிக்கட் ஒன்றுக்கு வருடம் ரூ. 1000/- கட்ட வேண்டும். சீட்டு மொத்தத் தொகை ரூ. 12,000/- ஆண்டுதோறும் ஏலத்தில் விடப்படும். 24 மெம்பர்களுள் குலுக்குதலும் உண்டு. நீங்கள் குலுக்கு, ஏலம் இரண்டிலும் கலந்து கொள்ளலாம். உங்கள் வசதிக்கு ஏற்ப அரை, கால், அரைக்கால், வீசம் சீட்டுகளிலும் சேரலாம்

★

தாமதம் செய்யாமல் உடனே
விவரங்களுக்கு எழுதுங்கள் :




# தி பாலக்காடு சிட் பண்ட்ஸ்

பிரைவேட் லிமிடெட்

தலைமை ஆபீஸ் :

331/333, தம்பு செட்டி தெரு
மதராஸ்-1

| | |
|---|---|
| கிளை : | கிளை : |
| பெரிய கடை வீதி | ஜெயில் ரோடு |
| பாலக்காடு | கோயமுத்தூர் |




ஈப்போவில் தமிழ் நாடக விழாவைத் தொடங்கி வைத்தவர் மிகவும் புகழ் பெற்ற மலாய்ப் பிரமுகர். அவர் பேரா ராஜ்யத்தின் இளவரசர். அவருடைய 'பெயர் விருது' மிக நீளமானது. எனவே அந்தப் பெயரை ஒருமுறை படித்துவிட்டுத் தப்பில்லாமல் சொல்லிக் காட்டும்படி குழுவினர் சிலரிடம் ஒரு பகவதி வேடிக்கைப் பரீட்சை செய்தார். அந்தப் 'பெயர் விருது' என்ன தெரியுமா? ''யாங் டெராமட் மூலியா ராஜா மூடா பேராக்.'' 'மாட்சிமை தங்கிய பேரா ராஜ்ய இளவரசர்' என்பதுதான் இந்தத் தொடரின் உட்பொருள். அவர் தமிழர்களின் கலாச்சார மேன்மையை வாயாரப் புகழ்ந்து அரசாங்கத்தின் சார்பில் நமது கலைக் குழுவுக்கு மனமார வரவேற்புக் கூறினார். தொழிலாளர் நல அதிகாரி திரு ஆர். எஸ். சிவம் அவர்கள் நாடக ஆரம்ப விழாவுக்குத் தலைமை தாங்கியதோடு மட்டு மல்லாமல், நாங்கள் ஈப்போவை விட்டுப் புறப்படும் வரை அன்பும் சிவமும் போல எங்களோடு இணைந்து பழகி வந்தார்.

ஈப்போவில் 'இராஜராஜ சோழன்' நாடகம் எட்டு நாட்களும், 'ஔவையார்', 'ரத்த பாசம்' ஆகிய நாடகங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நாளும், கொட்டகை நிறைந்து வழியும் கூட்டத்துடன் நடைபெற்றன.

சிங்கப்பூர்-மலேயாவில் பன்னிரண்டு வயதுக்கு உட்பட்ட சிறுவர் சிறுமியர் தொழில் முறை நடிப்பிலோ நடனத்திலோ பங்கு கொள்ளக் கூடாது என்று ஒரு தனிச் சட்டம் அமுலில் இருக்கிறது. இதன் காரணமாக ஔவையார், ரத்தபாசம், எது வாழ்வு போன்ற நாடகங்களில் நமது குழுவில் உள்ள சிறுமி சந்தோஷ் நடிப்பதற்கு இயலாத சூழ்நிலை ஏற்பட்டு, விசேஷ உத்தரவுபெற்று எப்படியோ சமாளிக்க வேண்டியதாக இருந்தது. ஆனால் பொழுது போக்கு முறையில் விழாக்களின்போது ஊதியம் இன்றி நடனமாடும் சிறுமிகளுக்குத் தடை விதிப்பது இல்லை. நடன ஆர்வமுள்ள பெரும்பாலான சிறுமிகள் சினிமா இசைத்தட்டுக்களை ஒலிபரப்பச் செய்து அவற்றுக்கு ஏற்ப மேடையிலே நடனமாடும் நிகழ்ச்சிகள் சிலவற்றை நாங்கள் நேரில் கண்டோம்.

ஜூலை மாதம் ஏழாம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலையில் பேரா மாகாண இந்தியப் பெருமக்களின் சார்பில் ஈப்போ தண்டாயுதபாணி திருக்கோயில் மண்டபத்தில் நமது குழுவினருக்கு மாபெரும் வரவேற்பு விருந்து ஒன்று நிகழ்ந்தது. திரு எஸ். கே. ஜகதீசன் தலைமை தாங்கினார். சிந்தா இந்தியர் சங்கம், மலேயா இந்தியர் காங்கிரஸின் பேரா மாகாணக் கிளை, அகில மலேயா தமிழர் சங்கம், நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வர்த்தகச் சங்கம் முதலிய நிறுவனங்களின் பிரதிநிதிகள் பாராட்டுரை நிகழ்த்திப் பேரா மக்களின் கலையார்வத்தை வலியுறுத்தினர்.

ஈப்போவிலிருந்து மூன்றாவது மைலில் கோபங் சாலைக்கு அருகில் உள்ள 'சாம்-போ' குகைக் கோயில் எங்களை மிகவும் கவர்ந்தது. பிரும்மாண்டமான சர விளக்குகளும், பல வகையான புத்தர் சிலைகளும், எழில் தவழும் கருணைதேவியின் சிலையும் கண்டு மகிழத் தக்க அம்சங்கள். குகைக் கோயிலுக்கு உள்ளே நுழைந்தால் நாற்புறமும் மதில் எழுந்தாற் போல் அமைந்த மலை அழகு ''நாம் ஏதோ பாதாளத்தில் இருக்கிறோமோ?'' என்ற மருட்சியை உண்டுபண்ணக் காணலாம். அந்தக் குகைக்குள்ளே வில் வளைவு போலத் திண்டுகட்டி விடப்பட்டுள்ள ஆமைக் குளம் காணப்படுகின்றது. சற்று நீர் குறைந்து நூற்றுக் கணக்கான ஆமைகள் நிறைந்து காணப்படும் அந்தக் குளத்தைப் பார்க்கவே எங்களுக்குச் சற்று அருவருப்பாக இருந்தது.

காந்தியடிகளின் பெருமையை மனமார உணர்ந்து போற்றுவதோடு, அண்ணலின் புகழ் பரப்பும் நினைவுச் சின்னங்கள் நிறுவவும் மலை நாட்டு மக்கள் தவறவில்லை என்பதை நேரில் கண்டு பூரிப்படைந்தோம். சிங்கப்பூரில் மட்டுமன்றி, தெலுக்கான்சன், தாப்பா போன்ற சிறு சிறு நகரங்களில்கூட, மகாத்மா காந்தி நினைவு மண்டபங்கள் எழுப்பப் பெற்றுள்ளன. கோலாலம்பூரில் மிகப் பெரிய

டி. கே. சண்முகம் புத்தனேரி சுப்பிரமணியம்

பினாங்கு கொடிமலையில் மலேயா முதலமைச்சர் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களுடன் டி. கே. எஸ். குழுவினர்.



ராஜராஜசோழன் ஔவையார் மனிதன்

நினைவு மாளிகை எழுப்பி நாடக அரங்கம் அமைக்கவும் ஏற்பாடு நடந்து வருகிறது.

வெறும் நினைவு மண்டபமாக மட்டும் இல்லாமல் காந்தி அண்ணலின் நினைவாக ஒரு கலாசாலையே இயங்குமானால் "பொன்மலர் நாற்றம் உடைத்து" என்பது போன்ற சிறப்பு அமைந்து விடுமல்லவா? அத்தகைய சிறப்பை, ஈப்போவிலிருந்து பதினெட்டாவது மைலில் உள்ள 'சுங்கை சிப்புட்' என்னும் சிற்றூரிலே கண்டு பெருமிதம் எய்தினேம். மலேயாவின் தமிழ் மந்திரி திரு வீ. தி. சம்பந்தன், அவருடைய மூத்த சகோதரர் திரு வீ. மீனாட்சி சுந்தரம், இளைய சகோதரர் திரு வீ. கிருஷ்ணன், திரு ஏ. எம். எஸ். பெரியசாமி முதலியோரின் தீவிர முயற்சியால் 'சுங்கை சிப்புட்'டில் மகாத்மா காந்தி கலாசாலை தோன்றிச் சிறப்பாக இயங்கி வருகிறது. கலாசாலையை இயக்கும் பொறுப்பைத் திரு வீ. மீனாட்சி சுந்தரம் ஏற்றுத் திறம்பட நிர்வகித்து வருகிறார். காந்தியின் பெயரில் ஒரு லட்சம் வெள்ளிகளுக்குமேல் நன்கொடை அளித்துள்ளார் திரு பெரியசாமி.

திரு வீ. மீனாட்சிசுந்தரம் அவர்களைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற வேண்டும். அவர் மலேயாவிலேயே பிறந்து வளர்ந்த தமிழர். இன்னும் அவர் இந்தியாவையே பார்த்ததில்லை. தமிழ் நாட்டைக் காண வேண்டும் என்னும் உள்ளத் துடிப்பு மிகுந்துள்ளவர். மலைநாட்டிலே பிறந்து தமிழ் நாட்டையே பார்க்காத ஒருவர் தமிழ் அறிவிற் சிறந்தவராகவும், மொழிப்பற்று நிறைந்தவராகவும் விளங்குகிறார் என்றால் அவருடைய பெருமையை என்னவென்று சொல்வது! திரு மீனாட்சிசுந்தரம் அவர்களைப்போல் தமிழ் நாட்டைக் காணாமலே அதன்மீது காதல் கொண்டு வாழும் தமிழர்கள் மலேயாவில் ஏராளமாக வாழ்கின்றனர். அவர்களெல்லோரும் தமிழ் நாட்டிலிருந்து செல்லும் ஒவ்வொருவரையும் காணும்போது தமிழ் நாட்டையே கண்டது போன்று மகிழ்கின்றனர்.

ஈப்போவிலிருந்து ஐம்பத்தைந்து கல் தொலைவில் தெலுக்கான்சன் என்ற பழம் பெரும் பதி உள்ளது. பழங் காலத்தில் இவ்வூர் சிறந்ததொரு நதித் துறைமுகமாக விளங்கியது. இராஜேந்திர சோழனுடைய கப்பற் படைகள் தெலுக்கான்சன் ஆற்றிலே நிறுத்தப்பட்டிருந்தன என்று சரித்திர வரலாறுகள் கூறுகின்றன.

ராஜராஜசோழன் சிவலீலை இன்ஸ்பெக்டர்





ரத்தபாசம்



கள்வனின் காதலி



டி.கே. ஷண்முகம்

இருவாளர்கள் கரு. தெம்பரம் பிள்ளை ஜே. பி., ரெங்கசாமிப் பிள்ளை முதலியோர் தெலுக்கான்சனில் வள்ளன்மை மிக்க தமிழ்ச் செல்வர்களாக வாழ்ந்து வருகின்றனர். அவ்வூரில் ஜூலை 14-ல் நடைபெற்ற இந்து சபைக் கட்டடத் திறப்பு விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்றிருந்தோம். அங்கு கேட்ட ஒரு செய்தி மிகச் சுவையாக இருந்தது.

மலேயா அரசாங்கம் ''சோஷியல் வெல்பேர் சர்வீஸ் லாட்டரிச் சீட்டு'' ஒன்று நடத்தி வருகிறது. மலேயாக் கூட்டரசில் 1950-ஆம் வருடத்து ஒன்பதாவது விசேடச் சட்டத்தின்படியே சோஷியல் வெல்பேர் சர்வீஸ்லாட்டரிபோர்டு அமைக்கப்பட்டது. கூன் குருடுகளுக்கு உதவுதல், காச நோய் மருந்துவம், பொது விளையாட்டு மைதானங்கள் அமைத்தல், அநாதைகளுக்கு ஆதரவு முதலான இட்டங்களுக்கு நிதி சேர்ப்பதற்காகவே இந்த லாட்டரிச் சீட்டு நடைபெறுகிறது.

இந்தச் சீட்டின் மூலம் சுமார் நூற்றைம்பது பரிசுகள் வழங்கப் பெறுகின்றன. பரிசுத் தொகையும் மிக அதிகம். முதற் பரிசு மூன்றரை லட்சம் வெள்ளிகள். அதாவது சுமார் ஐந்தே கால் லட்சம் ரூபாய். இரண்டாவது பரிசு ஒன்றே கால் லட்சம் வெள்ளிகள். கடைசிப் பரிசு இரண்டாயிரம் வெள்ளிகள். நாற்பது நாட்களுக்கு ஒரு முறை நடைபெற்று வரும் இந்த லாட்டரிச் சீட்டு ஒவ்வொரு தடவையும் ஒவ்வோர் ஊரில் குலுக்கப்பட்டு வருகிறது. லாட்டரிச் சீட்டுக்குரிய கூப்பன்கள் மலேயாவில் எல்லாத் தபால் நிலையங்களிலும் விற்கப்படுகின்றன. ஒவ்வொரு கூப்பனுக்கும் விலை ஒரு வெள்ளி. இதுவரை ஐம்பது சீட்டுகளுக்குமேல் முடிந்து விட்டன. மிகத் திறமையாகவும் நாணயமாகவும் இந்தச் சீட்டு நடைபெற்று வருவதாக மக்கள் பேசிக் கொள்ளுகின்றனர். அரசாங்க நிதியும் கணிசமாகப் பெருகி வருவதாகச் சொல்லப்படுகிறது.

தெலுக்கான்சன் ஊரில் உள்ள காந்தி நினைவு மண்டபத்தையும், தெம்பரம் பிள்ளை தமிழ்ப் பாடசாலையையும் பார்வையிட்டோம். இந்தப் பாடசாலைக்காகத் திரு தெம்பரம் பிள்ளை ஒன்றரை லட்சம் வெள்ளி நன்கொடை ஈந்துள்ள செய்தி யறிந்து வியந்து பாராட்டினோம்.

தெலுக்கான்சனுக்குச் சென்ற அன்று மாலையிலேயே ஈப்போவுக்குத் திரும்பினோம்.

மனிதன்



அந்தமான் கைதி



டி.கே. பகவதி





**மக்களின் ஓவியர்கள் என்று பாராட்டுப் பெற்றுள்ள ஓவியக் கலைஞர்களான பானு சகோதரர்கள்-திரு பானு அவர்களும் திரு சீனு அவர்களும்-தீட்டிய எண்ணற்ற வண்ண ஓவியங்கள் தேனாம்பேட்டைக் காங்கிரஸ் கண்காட்சியில் தனிக்கலைக் கண்காட்சியாகத் திகழ்கின்றன. இக் கலைக்கூடத்தைக் கண் படைத்தவர்கள் எல்லாரும் கண்டு மகிழலாம். கலை மனம் படைத்தவர்கள் பார்த்தால் பரவசமடைந்து விடுவார்கள். சங்ககால தமிழ் இலக்கியங்களிலிருந்தும், கலைத்துறையிலும் அரசியல் துறையிலும் தொண்டாற்றி வரும் பிரபல தலைவர்களையும் சிரஞ்சீவிச் சித்திரங்களாகத் தீட்டி வைத்திருக்கின்றனர்.**

> **இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்**
> **கொன்றதுபோலும் நிரப்பு.**

**என்ற குறளுக்குத் தீட்டியிருக்கும் சித்திரத்தில் தங்களைக் கொன்று விடுவது போலத் துன்பப் படுத்தும் தரித்திரம் இன்றைக்கும் வந்து விடுமோ என்று ஏங்கும் பாவம் மிளிர்கிறது.**

---

ஈப்போவில் தங்கிய சமயம் ஈயச் சுரங்கம் ஒன்றுக்குச் சென்று காணும் சிறந்த வாய்ப்புக் கிடைத்தது.

## 29. மலைவளம் கண்டோம்

ஈப்போவில் தங்கியவாறே சுற்றுப் புறங்களிலுள்ள பல ஊர்களுக்குச் சென்று வளங் காணும் வாய்ப்புக் கிடைத்தது.

தைப்பிங் நகரம் ஈப்போவிலிருந்து பினாங்கு செல்லும் சாலையில் ஐம்பதாவது மைலில் உள்ளது. தைப்பிங் நகரிலிருந்து ஏழு மைல் தூரம் மலைமீது ஏறினால்தான் மாக்ஸ்வெல் மலையின் சிகரத்தை எட்ட முடியும். மலைச் சாலை மிகவும் செங்குத்தானது. சாதாரணக் கார்களில் செல்ல முடியாது. ஜீப் கார்களிலேதான் போக வேண்டும்.

கடல் மட்டத்திலிருந்து 4750 அடி உயரத்தில் உள்ள இடம். மாக்ஸ்வெல் மலையின் சிகரத்திலிருந்து நோக்கினால் மேலைக் கடற்கரையின் எழிலைக் காணலாம். கீழ் பாகத்தில் தைப்பிங் நகரம் அற்புதக் காட்சி தரும்.

அவ்வளவு உயரமான மலைமீது கூட ஒரு சிறு காளி கோயிலையும், பள்ளிக்கூடம் ஒன்றையும் சில நூறு தமிழ் அன்பர்களையும் காண முடிந்தது. "வருக! வருக!" என்று அழகு தமிழில் தோரண வளைவுகளுடன் மக்கள் அளித்த வரவேற்பு மன நெகிழ்ச்சி தருவதாக இருந்தது. காணுகின்ற இடமெல்லாம் தமிழர் மயமாகவே தோன்றியது வியப்பாகவே இருந்தது. மாக்ஸ்வெல் மலையில் வரவேற்பு ஏற்பாடுகளைச் செய்த திரு ரெனட் அவர்களை மறக்க முடியாது.

மலையிலிருந்து கீழே வந்ததும் தைப்பிங் நகரத்தில் மலேயா இந்தியர் காங்கிரஸ் சார்பில் அதன் தலைவர் திரு டி. செல்வர் நல்லதொரு வரவேற்பு நல்கினர். குவாந்தாங் மண்டபத்தில் நடைபெற்ற பொது வரவேற்பில் திரு பெரி. முத்தையா போன்ற அன்பர்களின் பாராட்டுரையில் மட்டில்லா மகிழ்ச்சி பெற்றோம்.

தைப்பிங்கிலிருந்து ஈப்போவுக்குத் திரும்பும் வழியில் கோலக் கங்சார் என்னும் ஊரில் இந்தியப் பெரு மக்கள் அளித்த வரவேற்பும் இரவு விருந்தும் மெச்சத்தக்கதாக இருந்தன. கோலக் கங்சார் ஊரில்தான் பேரா ராஜ்யசுல்தான் அவர்களின் அரண்மனை உள்ளது.

கோலக் கங்சாரிலிருந்து இரவோடு இரவாக ஈப்போவுக்குத் திரும்பி விட்டோம்.

மறுநாள் அதிகாலையில் தாப்பா என்னும் ஊர் வழியாக 'காமிரான் ஹைலாண்ட்ஸ்' மலைப் பகுதிக்குக் காரிலே பயணப்பட்டோம். மலைச் சாலை அவ்வளவு செங்குத்தாக இல்லாதிருந்தபடியால் பிரயாணம் வெகு சுகமாக இருந்தது. சாலையோடு இணைந்து விளங்கும் மலைச்சோலையின் வனப்பு மன மகிழ்ச்சி தந்தது. ரிங்லெட் என்னும் சிற்றூரைத் தாண்டித் 'தானரத்தா' என்ற மலை உச்சிக்குச் சென்றோம். அங்கே உள்ள ஒரு விவசாயப் பண்ணையை இப்பொழுது நினைத்தாலும்கூட வியப்பாக இருக்கிறது.

தானரத்தாவில் உள்ள சிவிமாக் கோட்டையில் அகில மலாயா தமிழர் சங்கத்தின் சார்பில் ஒரு வரவேற்புக் கூட்டம் நடைபெற்றது. அங்கிருந்து திரும்பும் வழியில் 'ரிங்-லெட்' என்ற ஊருக்கு ஐந்து மைல் தொலைவில் உள்ள 'போ எஸ்டேட்' என்னும் தேயிலைத் தோட்டத்துக்குச் சென்றோம். அங்கு நூற்றுக்கணக்கான தோட்டத் தொழிலாளர்களின் தமிழ் முகங்களைக் கண்டோம். அந்தத் தேயிலைத் தோட்டத்திலும், காமிரான் மலைப் பகுதியிலும் வாழும் தொழிலாளர்களில் பெரும்பாலோர் நமது நாமக்கல் தாலூக்காவைச் சேர்ந்தவர்கள் என்று கேள்விப்பட்டோம். பிறந்த நாட்டை விட்டு வெகு தூரம் சென்று மலையின் சிகரத்திலே பாடுபட்டு வரும் தொழிலாளர்களின் மன வலிமையையும் உடல் வலிமையையும் வாயார வாழ்த்தினோம்.

காமிரான் மலைப் பகுதிகள் கடல் மட்டத்திலிருந்து 3500 அடி முதல் 6500 அடி வரை உயரமுள்ளனவாக விளங்குகின்றன.

மலேயாவுக்கும் சிங்கப்பூருக்கும் தேவையான காய்கறிகளை விளைவித்துக் கொடுக்கும் மண்வளத்தைக் காமிரான் மலைகள் பெற்றுள்ளன.

மலைப் பகுதியிலிருந்து மாலையில் 'தாப்பா' என்ற ஊருக்கு வந்தோம். தாப்பா வட்டாரத் தமிழ் மக்களின் சார்பில் மகாத்மா காந்தி நினைவு மண்டபத்தில் வரவேற்பு விழா நடைபெற்றது.

வரவேற்பு விருந்து முதலானவற்றை ஏற்றுக் கொண்டு இரவு பதினொரு மணியளவில் ஈப்போவுக்குத் திரும்பினோம்.

ஜூலை மாதம் இருபத்தோராம் தேதி காலையில் ஈப்போவிலிருந்து காரிலே பினாங்கு நோக்கிப் புறப்பட்டோம். எங்களை விட்டுப் பிரிய மனமில்லாமல் சுங்கை சிப்புட் நண்பர் திரு ஏ. எம். எஸ். பெரியசாமி அவர்களும் எங்களோடு புறப்பட்டு வந்தார். பின்னர் பகல் ஒருமணிக்குப் 'பட்டர்வொர்த்' படகுத் துறையை அடைந்தோம்.

நாங்களும், எங்களை ஏற்றி வந்த கார்களும் சின் சாமான்கள் பெட்டி — படுக்கைகள் முதலியவற்றை ஏற்றி வந்த லாரிகளும், நீராவிப் படகுகளின் மூலம் சுமார்மூன்று கல் தூரம் கடல் கடந்து பினாங்குத் தீவைஅடைந்தோம். எங்கள் வருகைக்காகப் பினாங்குத் துறைமுகத்தில் காத்து நின்ற மக்கள் வெள்ளத்தில் மூழ்கினோம்.

## 30. பினாங்கில் பிரியாவிடை

பினாங்கில் கலையன்பர்களின் அன்புத் தொல்லை ஈப்போவைவிட அதிகமாக இருந்தது. ஈப்போ ரசிகர்களாவது நமது வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து அமைதியாகக் கலைந்து செல்லும் மனப்பண்பு பெற்றிருந்தனர். பினாங்கிலோ நாங்கள் தங்கியிருந்த பங்களாவின் கதவுகளைத் தாளிடும் அளவுக்கு ரசிகர்கள் அத்து மீறிய அன்பினால் ஆரவாரம் எழுப்பினர். அவர்களுடைய அன்பும் ஆரவாரமுந்தான் நாடக விழாவின் வெற்றிக்கு அடிகோலின என்றால் அது மிகையாகாது.

தமிழர் பிரதிநிதித்துவ சபைத் தலைவர் திரு டி. பி. எஸ். கிருஷ்ணசாமி, திரு மு. துரைசாமித் தேவர், கங்குரும்பை திரு ஆறுமுகம் பிள்ளை, 'வாத்தியார்' கிருஷ்ணன் முதலிய அன்பர்கள் பினாங்கில் எங்களுக்கு வேண்டிய உதவிகளை நிறைவேற்றித் தந்தனர்.

மலேயன் இந்தியர் காங்கிரஸ் இளைஞர்களும் தமிழ் இளைஞர் மணிமன்றத்தாரும் வரவேற்பளித்துப் பாராட்டினார்கள்.

தமிழகத்தில் வெளியாகும் இதழ்களில் பெரும்பாலானவற்றைச் சிங்கப்பூர் மலேயாவில் பரப்பும் பொறுப்பு சிவகுரு புத்தகசாலையைச் சேர்ந்தது. இதன் மூலமாகவும் மனோன்மணி விலாச புத்தகசாலை மூலமாகவும், வேறு சில நூலகங்களின் வாயிலாகவும் தமிழில் வெளியாகும் எல்லா நூல்களும் மலேயாவில் கிடைக்கின்றன.

பினாங்கில் உள்ளூர் நண்பர்களும் வெளியூர் நண்பர்களும் ஏராளமாக எங்களோடு அன்புத் தொடர்பு கொண்டனர்.

பினாங்குத் தீவில் அழகின் சிகரமாக விளங்குவது கொடிமலை. சுமார் 2700 அடி உயரமுள்ள இந்த மலைமீது ஏறுவதற்கு மின்சார

ரயில் அமைக்கப்பட்டுள்ளது. பொறி இயற்கலையின் சிறந்த சாதனைகளில் இந்த மின்சார ரயில்வேயும் ஒன்று. 2270 அடி உயரத்துக்குச் சற்றுச் செங்குத்தாக அமைந்துள்ள ரயில் பாதையில் மின்சார ரயில்கள் இரண்டு பகுதிகளாக இயங்குகின்றன. இரண்டு பகுதிகளுக்கும் மத்தியில் ரயில் நிலையம் ஒன்று உள்ளது. மலை அடிவாரத்திலிருந்து முதல் பகுதி ரயிலில் சென்றதும் மத்திய நிலையத்தில் இறங்கி மற்றொரு ரயிலில் ஏறிக் கொள்ள வேண்டும்.

மலையின் அடிவாரத்திலிருந்து உச்சிக்கு ரயில் மூலம் செல்வதற்கு 25 நிமிடங்கள் ஆகின்றன. இந்த மின்சார ரயில்வே அமைவதற்குப் பதினைந்து லட்சம் வெள்ளிகள் செலவாயினவாம்.

கொடிமலையின் உச்சியிலே மலேயாவின் முதலமைச்சர் கனம் துங்கு அப்துல் ரஹ்மான் அவர்களைக் கண்டு அளவளாவும் பேறு கிடைத்தது. "காட்சிக்கு எளியனாக" விளங்கிய அவர் மிக உற்சாகமாக உரையாடி உள்ளத்தைக் கவர்ந்தார். அவருடைய குணநலன்கள் காரணமாகவே மலேயா மக்களின் ஒப்பற்ற தலைவராக அவர் விளங்குகிறார் என்பதை அவரோடு பழகிய ஒரு சில விநாடிகளில் புரிந்து கொண்டோம்.

தமிழ் நாடகக் கலைச் சிறப்பைச் சக மந்திரிகளின் மூலம் தாம் கேள்விப்பட்டதாகவும், 'மெர்டேகா' அலுவல் நெருக்கடி காரணமாகவே நாடகங்களைக் காணும் பேறு தமக்குக் கிடைக்கவில்லை யென்றும் திரு துங்கு அவர்கள் மனம் கசிந்து கூறினர். முதல் அமைச்சர் அவர்களுக்கு எங்கள் 'மெர்டேகா' வாழ்த்தை வழங்கிவிட்டு விடைபெற்றோம்.

பின்னர், கொடிமலையில் வாழும் இந்தியத் தொழிலாளர்கள் அன்பு கலந்த தேநீர் விருந்தளித்துப் பாராட்டினர்.

பினாங்கில் உள்ள "ஆயர்-இட்டாம்" கோயில் என்னும் புத்தர் கோயில் மிகப் பெரியது. மலேயாவில் உள்ள புத்தர் கோயில்கள் அனைத்திலும் மிகச் சிறந்தது இது என்றுகூடச் சொல்லலாம். பளிங்கினாலும் சலவைக் கற்களினாலும் செய்யப்பட்ட பலவகையான புத்தர் சிலைகளை இந்தக் கோயிலிலே காணலாம். இந்தக் கோயிலைச் சார்ந்து ஆமைக் குளம், மீன் குளம் போன்ற அமைப்புக்கள் உள்ளன. மலையோடு இணைந்து வனப்பாக அமைக்கப்பட்டுள்ள 'ஆயர் - இட்டாம்' கோயில் பினாங்கில் கண்டு மகிழ வேண்டிய அபூர்வமான இடங்களில் ஒன்று.

பினாங்கு நகரிலிருந்து சுமார் ஒன்பது கல் தொலைவில், பாயன் லெபாஸ் சாலையில், சுங்கை குளுவாங் என்ற இடத்தில் அமைந்துள்ள பாம்புக் கோயில் மிகவும் புகழ் பெற்றது. 'சோர்-சூ-கோங்' என்னும் சீன முனிவர் கோயில் கொண்டுள்ளதாகக் கூறப்படும் பாம்புக் கோயிலில் உயிருள்ள பாம்புகள் பல உத்திரக் கட்டைகளிலும், விளக்குகளிலும், கதவுக் கம்பங்களிலும் அடங்கி ஒடுங்கிப் படுத்திருக்கக் கண்டோம். கண்டவுடன் மருட்சி தருகின்றபோதிலும் பாம்புகள் யாருக்கும் தொந்தரவு தருவதில்லை. கோயிலின் பக்கத்து மண்டபத்தில் பெரிய மலைப் பாம்பு ஒன்று இரும்பு வலைக் கம்பிகளுக்கு உள்ளே பூட்டி வைக்கப்பட்டுள்ளது. கோயிலுக்குச் செல்வோர் கோழிகளை மலைப் பாம்புக்கு இரையாகக் கொடுப்பார்களாம்.



புத்தனேரி சுப்பிரமணியம்

ஜூலை மாதம் ஆறும் தேதி, தமிழர் பிரதிநிதித்துவ சபையார் நகர மண்டபத்தில் மாபெரும் பிரியா விடைக் கூட்டம் நடத்திப் பாராட்டு உரைகளையும் அன்பின் சின்னங்கள் சிலவற்றையும் வழங்கிக் கௌரவித்தனர்.

ஜூலை மாதம் ஒன்பதாம் தேதி பிற்பகல் இரண்டு மணிக்குப் பினாங்குத் துறைமுகத்தில் 'ஸ்டேட் - ஆப் - மதராஸ்' கப்பலில் தாயகத்துக்குப் புறப்பட்டோம்.

உள்ளூரிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் திரளான கலையன்பர்கள் கப்பலடியில் குழுமி நின்று கண்ணீர் மல்கக் கரம் குவித்து வழியனுப்பிய காட்சி இன்னமும் எங்கள் கண் முன்னே நிற்கிறது.

ஜூலை ஒன்பதாம் தேதி மாலை ஐந்து மணிக்குப் பினாங்கை விட்டுப் புறப்பட்ட கப்பல் பதினைந்தாம் தேதி காலையில் சென்னைத் துறைமுகத்தை அடைந்தது.

*   *   *

சிங்கப்பூர் — மலேயாவில் நடைபெற்ற நாடகங்களைப் பற்றி ஒரு வார்த்தை.

கலை உலாவில் நடைபெற்ற நாடக வகைகள் ஐந்து:—இராஜராஜ சோழன், ஔவையார், கள்வனின் காதலி, ரத்தபாசம், எது வாழ்வு?

கலை விழா நிகழ்ந்த நகரங்களும் ஐந்து:— சிங்கப்பூர், கோலாலம்பூர், மூவார், ஈப்போ, பினாங்கு. மொத்தம் ஐம்பத்தெட்டு நாடகங்கள் நடைபெற்றன. அவற்றில் நாற்பத்திரண்டு 'இராஜராஜ சோழன்' நாடகம்.

**"உலகத்தைக் கவர்கின்ற சின்னம்—**
**அதன்**
**உச்சியைப் போலவே உயர்ந்திடும்**
**எண்ணம்"**

என்ற புகழுக்குரிய திருக்கோயிலைக் கட்டியதன் மூலம் இராஜராஜ சோழ மன்னன் கலையின் சிகரத்தைக் கண்டான்; இளவரசன் இராஜேந்திரன் வீரத்தின் சிகரத்தைக் கண்டான்; அவன் காதலி வீரமாதேவி கடமையின் சிகரத்தைக் கண்டாள்; இளவரசி குந்தவி காதலின் சிகரத்தைக் கண்டாள்; அவள் காதலனை வேங்கி மன்னன் விமலாதித்தன் கவிதையின் சிகரத்தைக் கண்டான்; பெரிய குந்தவைப் பிராட்டி பக்தியின் சிகரத்தைக் கண்டாள்; துப்பறியும் தோழி பூங்கோதை தொண்டின் சிகரத்தைக் கண்டாள்; இத்தகைய பாத்திரப்

படைப்புக்களின் சிறப்பினாலேதான் இந்த நாடகம் வெற்றியின் சிகரத்தைக் கண்டது. திரு அரு. ராமநாதன் அவர்களின் திறமையின் சிகரத்தைப் புலப்படுத்துவது இது.

தமிழ் என்னும் மந்திர சக்தியால் மன்னரையும் மக்களையும் ஆட்டி வைக்கும் அன்புக் கிழவியின் அரிய வரலாறு ஔவையார். ஒரு கிழவியைக் கதைத் தலைவியாக நிறுத்திக் கட்டுமீறிய காதற் சுவையோ களியாட்டமோ சிறிதுமில்லாத இந் நாடகத்தில் தமிழின் சக்தி சுடர் விடுவதைக் காணலாம். திரு எதிராஜு அவர்களின் எழுத்தோவியம் இது.

ஆதரவுக்கு உரியாள் யார்? காதலித்த மங்கையா? கண்ணனைய தங்கையா? எது பெரிது? காதலா - கடமையா? இத்தகைய உணர்ச்சிச் சுழல்களிலே சிக்கி உயிர்த்தியாகம் செய்யும் முத்தையனின் சோக வாழ்வைச் சித்திரிப்பது கள்வனின் காதலி. பொருத்த மனத்தின் பெருந்துயரை உணர்த்தும் கதை விருந்து. அமரர் கல்கி அவர்களின் கற்பனையிலே மலர்ந்து அழகு தமிழிலே அமரத்துவம் பெற்றுவிட்ட கதை இது. நாடகமாக்கியவர் திரு எஸ். டி. சுந்தரம்.

"தான் ஆடாவிட்டாலும் தன் சதை ஆடும்" என்ற தத்துவத்தை இரு சகோதரர்களின் வாழ்க்கைப் போராட்டங்களிலே பிணைத்துக் காட்டுவது 'ரத்தபாசம்'. திரு ஸ்ரீதர் அவர்களின் உணர்ச்சிச் சித்திரம்.

உலகம் தூற்ற வாழ்வதைவிட உலகம் போற்றச் சாவதே மேல் என்ற உயரிய எண்ணத்தை நிலைநாட்டுவது 'எது வாழ்வு?' என்னும் நாடகம். ஆங்கிலக் கதை யொன்றைத் தமிழாகக் கற்பனை செய்தவர் திரு ராஜு. அழகு வசனத்தால் உருவாக்கியவர் திரு டி. கே. கோவிந்தன்.

*　　　　*　　　　*

**க**லை உலாவிலே நாங்கள் கண்ட காட்சிகளைக் கொண்டும் பெற்ற அனுபவத்தைக் கொண்டும் இந்தப் பிரயாணக் கட்டுரைத் தொடரை உருவாக்கினோம். எங்கள் கண்ணுக்கும் கருத்துக்கும் எட்டாத செய்திகள் இன்னும் எவ்வளவோ இருக்கலாம். எனினும் மலேயாவைப் பற்றி அறிய விரும்புவோருக்கு ஓரளவேனும் இந்தக் கட்டுரைத் தொடர் பயனுக இருக்குமானால் அதுவே எங்கள் வெற்றி என்று கருதி மகிழ்வோம்.

ஒன்றுமட்டும் குறிப்பிட விரும்புகிறோம். எங்களுக்குப் பின்னால் மலேயாவுக்குச் செல்பவர்கள் உண்மையில் எங்களைவிடப் பாக்கியசாலிகள் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில், நாங்கள் மலேயா சுதந்திரம் பெறுவதற்கு முன்னால் போய் வந்தோம். இனிமேல் போகிறவர்கள் சுதந்திர மலேயாவில் உலா வருவார்கள்.

"மலேயாவின் சுதந்திரப் பாதையில் கலை மலர் தூவினர்" என்று நண்பர்கள் சிலர் எங்களைப் பாராட்டுகின்றனர். எங்கள் கலைக் குழுவினர்கள் அன்போடு தூவிய கலைமலர்கள் சுதந்திர மலேயா தேவியின் திருவடிக் கமலங்களுக்கு உரியனவாகட்டும்! வாழ்க சுதந்தர மலேயா! வெல்க, சுதந்திர மலேயா!



## கண்களுக்கு விருந்து

'கல்கி' இதழ் 1958-ம் வருஷ ஆரம்பத்தி லிருந்தே மிகப் பொலிவுடன் விளங்க ஆரம் பித்திருக்கிறது. சென்ற இரண்டு இதழ்களின் அட்டைப் படங்களும் கண்களுக்கு விருந்தாய் அமைந்திருக்கின்றன.

12-1-58 இதழில் வெளியான 'ராம ராஜ் யம்' சிந்தனையைக் கிளறி விட்டு நம் நாட்டின் நிலைமையை அப்படியே பிரதிபலிக்கச் செய் யும் பெரிய நிலைக்கண்ணாடி போல் அமைந் துள்ளது. திரு த. நா. குமாரசாமி அவர் களின் மொழிபெயர்ப்பு நன்கு சுவைபட அமைந்திருக்கிறது.

இம்மாதிரி அறிவுக்கு வேலை தரும் சிந் தனைக் கதைகள் மேலும் மேலும் வெளிவர விரும்புகிறேன்.

கச்சி
11-1-58

மங்களம் முத்துஸ்வாமி

## கருத்துக்கு விருந்து

இந்த மார்கழி மாதம் நான்கு வாரங்களி லும் 'கல்கி' இதழ்களில் வெளியான திருப் பாவை, திருவெம்பாவைச் சித்திரங்கள் உள் ளத்துக்கு உவகை யூட்டுவனவாக அமைந் தன. தெய்விகத் தன்மை பரிபூரணமாக நிறைந்து, கண்ணுக்கும் கருத்துக்கும் விருந் தாகத் திகழும் அந்த நான்கு இதழ்களும் போற்றிப் பத்திரப்படுத்தி வைக்கத் தகுந் தவை என்பதில் ஐயமில்லை. 'கல்கி'யின் உயர்ந்த தொண்டு ஓங்கி வளர்க.

சென்னை
11-1-57

ஏ. கே. பட்டுசாமி

## வானொலியில் தியாகப் பிரும்ம விழா

திருவையாற்றில் 10, 11, 12 தேதிகளில் நடந்த ஸத்குரு "தியாகப் பிரும்மத்தின்" ஆண்டு விழாவில் நடைபெற்ற சங்கீதக் கச்சேரிகளை ரேடியோ மூலம் நண்பர்கள் கேட்டிருப்பார்கள். அதில் இந்த வருடம், சரியாக அஞ்சல் செய்யாத குறை காண் கிறது. மாலை 5-15, 6-15 மணிக்கு அஞ்சலே இல்லை. ஏன்? தவிர சென்னையில் இரண்டு மீட்டர்கள் இருக்கும்போது, ஏன் ஒன்றில் எப்போதும் அஞ்சல் செய்யக் கூடாது? அடுத்த வருட உற்சவத்திலாவது இந்தக் குறை நிவர்த்திக்கப்படுமென நம்பு கிறேன். அவ்விதம் செய்தால் மேற்படி விழாவுக்குச் செல்ல முடியாத லட்சக்கணக் கான மக்களுக்கு உதவியாக இருக்கும்.

மேட்டூர்
15-1-58

மாலதி ரமணி

## பை வந்தது. ஆனால்......!

கோவை ஜில்லா போர்டு நிர்வாகத்தின் கீழ் உள்ள ஆரம்பப் பள்ளியில் வேலை செய்யும் ஆசிரியன் நான். தற்போது 'போர்டி'ன் நிர்வாகம் கனம் விசேஷ அதிகாரியவர்களின் கீழுள்ளதும் தெரிந்ததே. ஜில்லாத் தலைவர் காலத்தில் வழக்கப்படி தாமதித்து வந்த சம்பளம் கனம் விசேஷ அதிகாரியவர்கள் நிர்வாகத்தில் ஒழுங்காக வரும் என்று என் போன்ற ஆசிரியர்கள் கனவு கண்டார்கள். அது பொய்த்துவிட்டது. தமிழர் திருநாளாம் பொங்கல் நன்னாளில் ஆசிரியர் பலர் அஞ்சல் நிலையமே தஞ்சமெனக் கிடந்தோம். அங்கே பை வந்தது. ஆனால் பணந்தான் வரவில்லை. இந்த இடத்தில் கொஞ்சம் சிந்திக்க வேண் டும். சர்க்கார் அலுவலகங்களில் வேலை செய் யும் அதிகாரிகளோ, குமாஸ்தாக்களோ முதல் தேதி கிடைக்கும் சம்பளம் இரண்டாந்தேதி கிடைத்தால் என்ன பாடுபடுகிறார்கள்? எங்கள் விஷயத்தில் இது நியாயமா?

அது போகட்டும். பல மாதங்களாகப் பன்முறையும் எனது பிரயாணப்படி கிடைக்க வில்லை. 'கண்டின்ஜெண்ட்' கிடைக்கவில்லை. 'சப்ளிமெண்ட்' கிடைக்கவில்லை என்று விண் ணப்பித்திருக்கிறேனே. அவைகளில் ஒன்றாவது கவனிக்கப்பட்டதா? கேட்டால் வரும் பதில்: 'கவனிக்கிறேன்'. எதை? எப்பொழுது?



# மேஜை



இலைகளைக் கனம் விசேஷ அதிகாரி அவர்கள் கவனித்து நிவாரணமளிப்பின் ஆசிரியர் சமூகம் அன்னார்க்கு நாவலிக்க நன்றி நவிலும்.

தல்லகவுண்டன் பாளையம்
16—1—58 பெ. தருமராசன்

## அவசரமான பணி

**ப**ல்வேறு மொழிகளிலிருந்தும் பற்பல நூல்கள் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. அவைகளால் தமிழகம் பெரும் நன்மை அடைந்துள்ளது. பல்வேறு தேசத்தினரும், பல்வேறு மொழி பேசுவோரும் தம் சிந்தனையின் மூலம் படைத்த மாபெரும் பொக்கிஷங்கள் தமிழில் மொழிபெயர்க்கப்படுவதால் நாம் பல நன்மைகள் அடைகிறோம். வேற்று மொழி பேசுவோரின் நாகரிகம், பண்டைப் பெருமை, குணாதிசயங்கள், வாழ்க்கைமுறை, இலக்கியங்கள் முதலியவைகளை அறிகிறோம். ஆனால் அதே சமயத்தில் தமிழகத்தைப் பற்றியும், தமிழ் இலக்கியங்களைப் பற்றியும் வெளியார் எவ்வளவு தூரம் அறிந்துள்ளார்கள் என்பதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். வேறு மொழிகள் வழங்கும் பிரதேசங்களிலுள்ள பாமர மக்கள் நம்மைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ளவில்லை என்பதே என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

இதை எவ்வாறு நீக்குவது? தமிழிலுள்ள பெரும் இலக்கியங்கள், நாவல்கள், சிறுகதைகள், சரித்திர சம்பந்தமான நூல்கள், தமிழகத் தலைவர்களின் வாழ்க்கை வரலாறுகள் முதலியவைகளெல்லாம் வேறு மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட வேண்டும். அப்போதுதான் பிற நாட்டார் நம்மைப் பற்றித் தெரிந்து கொள்ள ஒரு நல்ல வாய்ப்பு ஏற்படும். உதாரணமாக, கம்ப ராமாயணத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கும் பொறுப்பைத் திரு அ. சீநிவாஸராகவன் அவர்கள் மேற்கொண்டார்கள். உத்தமமான பணி அது. தமிழகத்தின் சிறந்த இலக்கியம், பண்பாடு, நாகரிகம் முதலியவற்றை வெளி உலகுக்கு அது நன்முக எடுத்துக் காட்டும். பல பெரியோர்கள் குறளைப் பல மொழிகளில் மொழிபெயர்த்துள்ளார்கள். இவை போல் மற்ற நூல்களும் மொழிபெயர்க்கப்பட வேண்டியது அவசரமும் அவசியமுமாகும்.

காளஹஸ்தி
20—1—58 கே. சுந்தரராமன்

## உயர்ந்த கற்பனை

**ஜ**னவரி 19-ம் தேதி 'கல்கி' இதழில் வெளியான ''மாப்பிள்ளை விருந்து'' மிக, மிக உயர்ந்த கற்பனை. ஆசிரியைக்கு என் இதயங் கனிந்த பாராட்டுக்கள். பொருத்தமான சித்திரமுங் கூட. ஓவியர் ''லதா'' ''மாப்பிள்ளை''யை உணர்ந்து தீட்டியிருக்கிறார்.

புதுக்கோட்டை
17—1—58 ஸ்ரீ நரஸிம்மன்

## தொழிலுக்கு மதிப்பு

**க**ல்கி ஆரம்பத்திலிருந்து தொடர்ந்து விடாமல் படித்து வருகிறேன். டி. கே. எஸ். சகோதரர்களின் நாடகக் குழு மலாயாவுக்குப் போய்த் திரும்பி வந்தபின், கல்கியில் தொடர்ந்து வெளிவரும் ''கலை கண்ட மலாயா''ப் பகுதியை ஆர்வமுடன் படித்து வருகிறேன். ஏனெனில், நான் மலாயாவில் பல ஆண்டுகள் தொழில் நடத்தியிருக்கிறேன். எனவே, மலாயாவின் செய்திகளை அறிந்து கொள்ள இயற்கையாகவே ஆவல் எழுகிறது.

19-1-58 கல்கி இதழில் கோலாலம்பூரிலுள்ள ஒரு சிகை அலங்கரிக்கும் நிலையத்தைப் பற்றியும், அந்த நிலையத்தினரையும் சிறப்பாகவும், அழகாகவும் சொல்லியிருக்கிறார்கள். என்றாலும், தமிழகத்திலே—சுதந்திரம் அடைந்த பிறகும் கூட—இன்றும் மக்கள் சவரக் கலைத் தொழிலையும்—தொழிலாளர்களையும் இழிவாகவே கருதப்பட்டு வருவது வருந்தத் தக்கது. சவரக் கலைஞர்கள் மலாயாவிலே எத்துணை சிறப்பாக, பொருளாதார உயர்வுடன் தொழில் நடத்து





கிறார்கள், அந் நாட்டு மக்கள் எத்துணை கௌரவம் கொடுத்து மதிக்கிறார்கள் என்பதைப் பார்க்கும்போது இந்த வருத்தம் பன்மடங்கு அதிகரிக்கிறது.

மேலும், சமீபத்திலே ஒரு பிரபல சினிமாப் படத் தயாரிப்பாளரே, "சினிமாப் படத் தயாரிப்புத் தொழிலை விடச் சவரத்தொழிலே மேல்" என்று இத்தொழிலினை இழிவுபடுத்த முயன்றிருக்கிறார் என்பதைப் பத்திரிகை வாயிலாக அறிந்திருப்பீர்கள். இவ்வாறு கண்ணிய மானவர்களே வெளிப்படையாகச் சொன்னால் சாதாரண மக்களின் மனப்பான்மை எத்தன்மையில் இருக்கும் என்பதைச் சொல்லவா வேண்டும்?

சென்னை
18—1—58
என். சிவானந்தம்

## "தியாகத்தின் சிகரம்"

**க**ல்கி இதழில் வெளி வந்த 'வஞ்சிமடம்' என்னும் கதை சிறந்த முறையில் சித்திரிக்கப் பட்டுள்ளது. மெகாஸ்தெனிஸின் தியாகத்தை ஆராயுமிடத்து நட்பு என்பது எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதை மிக அழகாக வலியுறுத்தப்பட்டிருக்கிறது. இக் கதை படிக்கும் பொழுது,

"முகம்நக நட்பது நட்பன்று—நெஞ்சத்(து)
அகம்நக நட்பது நட்பு."

என்ற பொய்யாமொழியின் பொன் குறள் நினைவுக்கு வருகிறது.

கல்கத்தா
19—1—58
ரா. ஜெயலக்ஷ்மி
ரா. சரஸ்வதி

## கருத்துக் குவியல்

**க**ல்கி-தமிழகத் தமிழ்ப் பத்திரிகைகளில், தன் ஒவ்வொரு மூச்சையும் பணயம் வைத்துப் பாடுபடும் உயரிய தமிழ்மாலை. இலக்கியத் தொண்டோடு, வெளியுலக வரலாறுகளையும் அணு அணுவாக ஆராய அடிகோலும் அதிலே கலைஞர்களான இருவாளர்கள் டி. கே. ஷண்முகம் - புத்தனேரி ரா. சுப்பிரமணியன் விரிவாக வரைந்துவரும் "கலை கண்ட மலாயா கட்டுரை "மாதிரிக்கு ஒன்று" என்றால் மிகையாகாது. சில மாதச் சுற்றுப்பிரயாணத்தில், இரட்டித் தரும் செய்திச் சுருள் கச்சிதமான கருத்துக் குவியல்-சிறப்பான படப் பிடிப்பு-உயர்வான கண்டுபிடிப்பு, மலாயாவைப் பாராமல் பார்க்க விரும்புவோருக்கு அரியதொரு வாய்ப்பு.

கோலாலம்பூர்
18—1—58
ஜி. மனுவேல்

## நேர்மையான விமர்சனம்

**பா**க்யவதி' படத்துக்குக் 'கல்கி'யில் எழுதியுள்ள விமர்சனத்தைப் படித்து மிகவும் மகிழ்ச்சியுற்றேன். விமர்சனம் மிகவும் நேர்மையாகவும் பொருத்த முடையதாகவும் இருந்தது. குறிப்பிடவேண்டிய விஷயங்களைக் குறிப்பிட வேண்டிய முறையில் குறிப்பிட்டிருப்பது பாராட்டுதற்குரியது.

நாகர்கோவில்
18—1—58
கண்ணப்பர் - தேவதாஸ்

## அறிவு தரும் வாசகம்

**செ**ன்ற 19-1-58 கல்கி இதழை நான் வெகு ஆவலோடு வாங்கிப் படித்துப் பார்த்தேன். கவலைகள், அனேகம் தோய்ந்த என் உள்ளத்தைப் பெரும் மகிழ்வில் ஆழ்த்தியது ஸ்ரீ ராஜாஜி அவர்கள் எழுதிவரும் வள்ளுவர் வாசகம். நீதி, நேர்மை, அறம் இன்னும் அனேகவிதமான தர்ம சித்தாந்தங்களைக் கிளறி, பகுத்தறிவு படைத்த மனிதன் பண்போடும், அன்போடும் வையத்தில் வாழ நேர்மையான பாதையையும் வகுத்துக் தருகிறது.

தாவணகிரி
18—1—58
வி. துரைசாமி

## ஆட்சி மொழி

**செ**ன்ற இதழில் வெளியாகியிருந்த "மொழிப் பிரச்னை தீரவில்லை" என்ற தலையங்கம் சமயத்துக்கு ஏற்றதாக இருந்தது. ஆம், தாங்கள் கூறுவது போல் கௌஹாட்டி காங்கிரஸில் நடைபெற்ற விவாதங்கள் தமிழகத்துக்கு வெற்றி தேடித் தந்துவிட்டதோ என்ற குழப்ப நிலையிலிருந்தபோது, தங்கள் தலையங்கம் நிலையைத் துலாம்பரமாகத் தெளிவுபடுத்தி விட்டது. மொழிச் சண்டை உண்மையில் இனிமேல்தான் ஆரம்பமாகிறது.

பம்பாய்
24—1—58
டி. கிருஷ்ணமூர்த்தி

திரைவானிலே ஒரு துருவ நக்ஷத்திரம்

பிப்ரவரி 7 முதல்

வீனஸ் பிக்சர்ஸ்

# உத்தமபுத்திரன்

சென்னையில்
காஸினோ
கிரௌன்
சயானி
மற்றும் தென்னகமெங்கும்..

டைரக்ஷன்: T. பிரகாஷ் ராவ் • திரைக்கதை வசனம் ஸ்ரீதர் • சங்கீதம்: G. ராமநாதன்

விநியோகஸ்தர்கள்

சென்னை நகரம்: மெஸர்ஸ் சிவாஜி பிலிம்ஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை-6 ★ வட ஆர்காடு, தென் ஆர்காடு & செங்கற்பட்டு ஜில்லாக்கள் (பாண்டிச்சேரி, சித்தூர் உள்பட): மெஸர்ஸ் ஆனந்தா பிக்சர்ஸ், வேலூர். ★ திருச்சி தஞ்சாவூர் ஜில்லாக்கள் (புதுக்கோட்டை & காரைக்கால் உள்பட): மெஸர்ஸ் அஜந்தா பிக்சர்ஸ், திருச்சி. ★ மதுரை, ராமநாதபுரம் & திருநெல்வேலி ஜில்லாக்கள்: மெஸர்ஸ் அஜந்தா பிக்சர்ஸ், மதுரை. ★ சேலம் ஜில்லா: மெஸர்ஸ் கே. வி. கிருஷ்ணராஜ் பிலிம் டிஸ்டிரிபியூட்டர்ஸ் சேலம்-2 ★ கோயமுத்தூர் & நீலகிரி: கன்னையா பிலிம்ஸ், ஒதயகுளம் (கோயமுத்தூர் ஜில்லா) ★ தி. கொ. ராஜ்யம் & மலபார் (கன்னியாகுமரி ஜில்லா உள்பட): மெஸர்ஸ் ஜியோ பிக்சர்ஸ், பிரைவேட் லிமிடெட், கோட்டயம் ★ பெங்களூர் & மைசூர் ராஜ்யம்: மெஸர்ஸ் எமரால்ட் பிக்சர்ஸ் சர்க்யூட், பெங்களூர்-2 ★ சிலோன்: மெஸர்ஸ் சினிமாஸ் லிமிடெட், கொழும்பு. ★ எப். எம். எஸ். மெஸர்ஸ் ஷா பிரதர்ஸ், சிங்கப்பூர்

Elegant

# பாவை விளக்கு

அகிலன்

அத்தியாயம் 12

## வளரும் வாழ்க்கை

பெண்களே பெரும்பாலும் சந்தேகப் பிராணிகள். அவர்களுக்கென்று எங்கிருந்துதான் இந்தச் சந்தேகம் முளைத்து விடுமோ, தெரியவில்லை!

கௌரிக்கு இதுவரையில் தணிகாசலத்திடம் சந்தேகம் கிடையாது. இது அவனுடைய அதிர்ஷ்டம். இல்லாவிட்டால் உமாவுக்கு அவன் வீட்டில் இவ்வளவு சுதந்திரம் கிடைத்திருக்குமா? நினைக்கும்போது வந்து போகவும், நினைக்கும்போது சண்டை போடவும், நினைக்கும்போது அவனைத் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கூத்தாடவும் கௌரி அநுமதித்திருப்பாளா? சங்க காலம் தொட்டே தமிழ்ப் பெண்மணி தன் சந்தேகத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறாள். தலைவனுக்கு விக்கல் எடுத்தால், 'எவளை நினைத்துக் கொண்டு தடுமாறுகிறீர்கள்', என்று கேட்டு வைப்பாளாம். வள்ளுவருக்கே இந்தத் தொல்லை வந்திருக்கும் போலும்!

தலைவிக்குச் சந்தேகம் வந்தால் அதில் நியாயம் உண்டு. தோழிக்குச் சந்தேகம் வந்தால்? அந்த வீண் சந்தேகம் இங்கே தோழிக்கு வந்து தொலைத்தது. உமா, அவன் செங்கமலத்திடம் பேசிக் கொண்டு நின்றதற்காக, அவனைப் போட்டுத் துளைத்து எடுத்து விட்டாள்.

உமாவும் தணிகாசலமும் மாம்பலத்துக்குத் திரும்பி வந்தவுடனேயே, உமா அவன்மீது சரமாரியாக அம்பெய்யத் துவங்கி விட்டாள்: "யார் இந்தச் செங்கமலம்? பட்டணத்தில் இவளை எங்கே தேடிப் பிடித்தீர்கள்? உங்களுக்குத்தான் யாரையும் இந்த ஊரில் தெரியாதே! நடுத்தெருவில் நின்றுகொண்டு என்ன உருக்கமான பேச்சு வேண்டிக் கிடக்கிறது? கௌரிக்குஇவளைத் தெரியுமா?"

"தலைவி கேட்க வேண்டிய கேள்விகளைத் தோழி கேட்கிறாயே!"

"தலைவன் வாயில் லாப்பூச்சி; எனக்கு நீங்கள் பதில் சொல்லுங்கள்."

தணிகாசலம் தன் தலைவியிடம்



ஏற்கனவே கூறியிருந்த அளவுக்குப் புதுப்பட்டி விவகாரங்களை ஒதுக்கி விட்டு, தோழியிடமும் கூறினான்: "கிராமத்தில் வளர்ந்த அடுத்த வீட்டுப் பெண்; பத்து வருஷங்களுக்கு முன் அவள் பாவாடை கட்டிக் கொண்டிருந்தாள்; இப்போது கு'மாரசாமி என்ற பெரும் புள்ளியோடு

வாழ்கிறாள்; தலைவிக்குத் தெரிந்த ரகசியந்தான் இது: குற்றாலத்தில் எங்கள் வீட்டுக்கே வந்திருக்கிறாள்.''

''எதையோ நீங்கள் என்னிடம் மறைத்து வைத்துப் பேசுகிறீர்கள்'' என்றாள் உமா.

''எல்லா விஷயங்களையும் உன்னிடம் சொல்ல முடியாது: அது சொல்லக் கூடிய விஷயமும் இல்லை; நீ பெரும் வாயாடி. இந்த ஊர் முழுவதும் தம் பட்டம் அடித்து விடுவாய்'' என்று நினைத்துக் கொண்டு, ''நான் ஒன்றும் மறைக்கவில்லை'' என்றான்.

அவள் அதை நம்பவில்லை. ''இந்த ஆண்களையே நம்பக் கூடாது: கோவலன் பரம்பரையைச் சேர்ந்தவர்கள்..''

''மாதவியை மறைக்கப் பார்க்கிறாயே! உங்கள் இனம் என்பதால் அவளிடம் அநுதாபமோ? - இதோ பார், உமா! வழியில் உன்னைப் பார்த்தாலும் நான் அப்படித்தான் பேசியிருப்பேன்.''

''ஊஹூம்; நீங்கள் என்ன சொன்னாலும் நான் நம்ப மாட்டேன். உங்கள் கதையை எழுத்தோடு வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் முகத்தில் அப்போது அசடு வழிந்ததைத்தான், நான் என் கண்களால் பார்த்தேனே! அவளுடைய அழகை நினைத்தால் என் தேகம் நடுங்குகிறது. அப்பா! எத்தனை அழகு!''

''வெளி அழகைக்கண்டு நான் இப்போது ஏமாறுவதில்லை, உமா!'' தணிகாசலத்தை அறியாமல், அவன் செங்கமலத்தால் பெற்ற பழைய ஏமாற்றம் இப்போது தலைநீட்டியது.

உமாவுக்குச் சந்தேகம் தீர்ந்தபாடில்லை. தன் வரம்பைமீறி அவள்பேசிக் கொண்டே போனாள். அவளுடைய பரபரப்பு வீட்டுக்குள்ளேபரவிவிடும் போல் தோன்றியது. கௌரியின் வெள்ளை மனத்தில் வீண் சந்தேகம் பதிந்து விட்டால்?... அதற்கு உமாவே தூபம் போட்டால்?

பொறுமையை உமா சோதனை செய்தாள்.

''நிறுத்து, உமா!'' என்று அவளை அதட்டினான் தணிகாசலம். ''வீணாய்ப் பெண் பாவத்தைக் கட்டிக் கொள்ளாதே: அவள் பிறந்த குலம் உன்னை இப்படிப் பேசச் சொல்கிறது: செங்கமலம் இன்றைக்கு ஒரு தாய்! அவளைப் பழித்தால் நான் உன்னைச் சும்மா விட மாட்டேன்.''

''என்னை என்ன செய்து விடுவீர்களாம்? உங்களுக்கு அவளிடம் பிரியம் இல்லாவிட்டால், எதற்காக அவளுக்குப் பரிந்துகொண்டு இப்படி என்னைத் திட்டுகிறீர்கள்?'' என்றாள் உமா.

''சண்டைக்கு வராதே!''

''சண்டைக்கு நான் வரவில்லை. கௌரியிடம் போய் நியாயத்தைக் கேட்கப் போகிறேன்.''

'கௌரியிடம் போய் நியாயமா?'— தணிகாசலம் தன்னை மறந்த வெறியனாகிவிட்டான்.

''நீ என்ன என்னிடம் குற்றம் கண்டு பிடிப்பது? நீ யார்?'' என்று கத்தினான். ''என்னை என்னிடமிருந்து காப்பாற்றும் போலீஸ்காரியா நீ? நீ உன் வரம்பை உணர்ந்து கொண்டு பேசு. நீ எதற்குக் கௌரியிடம் போய் நியாயம் கேட்பது? அவள் என்ன எனக்குத் தீர்ப்புச் சொல்வது? — என் வேதனை எனக்குத் தெரி



யும்; வேதனை, வேதனை, வேதனை! வேதனை!—நீ யார்? யார் நீ?''

பொறுமையின்மையும், பொறுமையும் அந்த அறைக்குள் தங்களுக்குள் முட்டி மோதிக்கொண்டன. உமா உடைந்து, இடிந்து பொடிப் பொடியாய்த் தூளாய்ப் போய் விட்டான்.

''பேசாதீர்கள் மாமா! பேசாதீர்கள்!'' என்று உமா தேம்பினான்.

அவன் பேச்சை நிறுத்தவில்லை.



''மாமா! தப்புத்தான்! என் தப்பு! என் தப்பு!'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டு அவன் நடுங்கினான். ''நீங்கள் சொல்வது சரி. உங்களைக் கேள்வி கேட்க நான் யார்? நீங்கள் யாரோ, நான் யாரோ, உங்களுக்கும் எனக்கும் என்ன உறவு? நீங்கள் வேறு நான் வேறுதான். என்னைப் பெற்று எடுத்தவனே என்னிடம் பாசம் வைக்காமல் செத்துப் போனான். உங்களிடம் பாசத்தை எதிர்பார்க்கலாமா? பிறத்தியார் உறவாக மாட்டார்கள். என்னைத் துண்டாய் வெட்டிப்போட்டுப் பிரித்துக் காட்டி விட்டீர்கள். என்னை மன்னித்து

விடுங்கள்! இனி உங்கள் வழிக்கு நான் வர மாட்டேன்!''

அறைக் கதவு 'படார்' என்ற சத்தத்துடன் சாத்தப்பட்டது. நல்ல வேளையாக அது உடையவில்லை. கோபத்தின் நெருப்புத் திவலையை வாரிக் கொண்டு போய்க் கௌரியிடம் பற்ற வைக்கப் போகிறாளே என்று அவன் பயந்தான். 'பெண்ணுக்குப் பெண்ணின் சொல் தான் எடுபடும். ஒன்றுக்குப் பத்தாக அவள் பற்ற வைத்தால்?'

பயந்தபடி நடக்கவில்லை. கௌரியைப் போய்ப் பார்க்காமலே அவள் சென்று விட்டாள். இன்றைக்குச் சொல்லா



விட்டாலும், நாளை அல்லது மறுநாள் சொல்வாள். அவள் போய்ச் சொல்வதற்கு முன்னால் தானே முந்திக் கொள்ள வேண்டும். உடனடியாய்க் கௌரியைத் தன் கட்சியில் சேர்த்துவிட வேண்டும். இது என்ன தர்மசங்கடம்?

வேப்பமரக் காற்று அவன் மன வேகத்தைத் தணித்தது. முன்கோபக்காரனைப் பின்புத்திக்காரனாக மாற்றியது. 'பாவம் உமா! பார்க்கப்போனால் அற்ப விஷயம்! வீட்டைக் கொடுத்துக் குடியிருக்கச் செய்தவள்; அடிமையிலும் அடிமையாக உழைத்துத் தன் அன்பைப் பெறத் துடித்தவள். உழைத்துக் களைத்த வேளைகளில் உற்சாகத் தென்றலாய் வீசியவள். நன்றி மறந்து திட்டி விட்டோம்?'

மனிதனாக மாறிய தணிகாசலம், அடுத்த ஐந்து நிமிஷங்களில் எழுத்தாளனாக மாறினான். ஒரு மனிதனுக்குள்ளே எத்தனை மனிதர்கள்! முன்கோபக்காரன், பின்புத்திக்காரன், வெறும் மனிதன், எழுத்தாளன்....

'படிக்காத பெண்களைவிடப் படித்த அசடுகளுக்கே சந்தேகம் அதிகம்' என்று நினைத்துக் கொண்டு, உமாவுக்குத் தெரியாமல் 'சந்தேகப் பேய்' என்ற சிறு கதையை எழுதத் திட்டமிட்டான். கதை வெளி வந்தவுடன் அதை அவளிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லி வயிறு குலுங்கச் சிரிக்க வேண்டும். 'இந்தப் பாழாய்ப்போன நகைச்சுவை நம்முடைய கதைகளில் ஒழுங்காய் வந்து தொலைப்பதில்லையே!'

இரண்டு நாட்கள் சென்றன.

உமா அவனிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை. 'நான் இந்தக் கதை எழுதி முடியுமட்டும் நீ பேசாமலே இரு!' என்று தனக்குள் சொல்லிக் கொண்டு அவசரம் அவசரமாய் ஒரு கதை எழுதினான். அவசரம் அவசரமாய் வாரப் பத்திரிகை ஒன்றுக்கு அதை அனுப்பி வைத்து விட்டான்.

நான்காவது நாள் முருக்க மரத்தில் ஏறிக் கொண்டிருந்த வேதாளம் தானாகக் கீழே இறங்கி வந்தது. அவன் இல்லாத நேரம் பார்த்து அவனுக்கு வந்த கடிதங்களையும் அவன் எழுதிக் கொண்டிருந்த கதையையும் அது தேடிப் பார்த்தது. ஆனால் கதையின் நகல்கூட மேசைக்குள் இல்லை.

''அகோ, வாரும் நங்காய் உமா தேவியாரே! முருக்க மரக்கிளை ஒடிந்து, வெள்ளைக் கொடி வீசி விட்டதா?'' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் வந்தான் தணிகாசலம்.

''கழுதை கெட்டால் குட்டிச்சுவர்!'' என்று அவனைத் திரும்பிப் பார்க்காமலே அவள் பதிலளித்தாள்.

''இதோ பார், சமாதானத்தின் ஆரம்பமே சண்டையில் தொடங்குகிறது. நீ உனக்கு என்ன பெயர் வேண்டுமானாலும் வைத்துக் கொள். நான் வந்து ..நான் வந்து ..''

''குட்டிச்சுவர்களுக்குக் கூரை போட வேண்டுமென்கிற பெரியவர். வெறும் எழுத்துக் கூரை!''

''வீணாகக் கதையைத் தேடி மேசையைக் கலக்காதே. கதை இப்போது ஆசிரியரிடமிருந்து கைமாறிப் படம் போடுகிறவரிடம் போய்விட்டது. கதை

தொடர்கதை இல்லை; ஆனால்... ஆனால்.. ஒரு குட்டிக் கலகம் 'தொடரும்'!''

தொடர்ந்தாற்போல் அந்த வாரத்தில் வீடு நிறைந்து விட்டது. தணிகாசலத்தின் தங்கை லட்சுமியும், அவள் கணவர் ராமசாமியும் தங்களுடைய இரு குழந்தைகளுடன் வந்து சேர்ந்தார்கள். ஆணும் பெண்ணுமாக இரண்டு குழந்தைகள் அந்த மாடியை அமளி துமளிப்படுத்தினார்கள். பொன்வயல் மங்களத்துப் பாட்டியையும் கௌரியின் தாயாரையும் அனுப்பி வைத்தது. பிறக்கப் போகும் குழந்தையை வரவேற்பதற்கான முன்னேற்பாடுகள் தொடங்கின.

தங்கையின் குழந்தைகள் உமாவுக்கு ஒன்பது மடங்காக விளங்கினார்கள். மருமகன் தன் மாமா எழுதுகிற நேரம் பார்த்து, கடை வீதியில் வாங்கி வந்த நான்கணாத் தகர டமாரத்தை வெளுத்துக் கட்டினான். அவன் தங்கையோ ஒன்றரையணா 'பீப்பீ'யை வைத்துக் கொண்டு ஊர் கூட்டினாள். ஒரு பக்கம் யுத்த பேரிகையும், மறுபக்கம் வெற்றி முழங்கும் வெண்சங்கும்' ஊதும்போது எப்படித் தணிகாசலம் பேனாவைக் கையில் எடுக்க முடியும்?

வாத்தியக் கச்சேரி நடக்காத வேளைகளில் பாட்டுக் கச்சேரியும் ஆட்டக் கச்சேரியும் நடந்தன. இந்த இன்னிசைக் குழுவுக்குத் தலைவி உமா! தலைவியா, தலைவலியா!

தணிகாசலம் உமாவிடம் மண்டியிட்டுக் கெஞ்சாதது ஒன்றுதான் குறை. கோபித்துக் கொண்டால் குழந்தைகளிடம் ஒன்றும் பலிக்காது. புரட்சியைத் தூண்டி விட்டு வேடிக்கை பார்ப்பாள் தலைவி.

''தயவு செய்து இந்த அற்புதமான இசைக் குழுவை, கீழே கூட்டிக்கொண்டு போ! இந்தா, உன் அத்தை சௌந்தரத்தம்மாளின் காதுகளுக்குக் கொஞ்சம் பஞ்சு தருகிறேன்.''

வேண்டுகோளை நிறைவேற்றி வைத்தாள் உமா. அவன் கெஞ்சும்போது அவள் முகத்தில் தோன்றிய கர்வத்தைப் பார்க்க வேண்டுமே!

தேவகி மாத்திரம் இன்னும் வரவில்லை. வரும் நாளைத் தள்ளிப் போட்டுக் கடிதம் எழுதியிருந்தாள். அந்தக் கடிதத்தில் ஒரு சிக்கலும் தெரிந்தது:

''நில புலங்களைப் பார்ப்பதற்காக முல்லையூர் கிராமத்துக்கு நானும் அண்ணாவும் வந்து இரண்டு நாட்களாகின்றன. இது அறுவடைக் காலம். குத்தகைக்காரருக்கும் பண்ணையாட்களுக்கும் இங்கே சண்டை நடந்து கொண்டிருக்கிறது. விளைந்த நெல்லை அறுவடை செய்து கொண்டு போக வழியில்லை. இன்னும் சில நாட்கள் கிராமத்தில் தங்கி, ஒரு நல்ல முடிவு தேடவேண்டும். எப்படியும் பத்துப் பதினைந்து நாட்களில் சென்னைக்கு வந்துவிடுவேன். அதற்குள் குழந்தை பிறந்தால் கண்ணபுரத்துக்கே கடிதம் எழுது. என்னுடைய மனமெல்லாம் கௌரியிடம்தான் இருக்கிறது. நல்ல செய்தியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறேன்.''

நல்ல செய்தி கிடைத்து விட்டது. டாக்டரம்மாளைக் கூப்பிடாமலே தாதி, மருத்துவச்சி, பாட்டிக் கிழவிகள் எல்லோருமாகச் சேர்ந்து கொண்டு அடுத்த அறைக்குள் மும்முரமாக இருந்தார்கள். அவர்கள் போட்ட சந்தத்தில் கௌரியின் முனகல் தணிகாசலத்துக்குக் கேட்கவில்லை. வெளியில் நின்று கொண்டு, கதவிடுக்கில் பார்த்துக்கொண்டு, உமாவும் லட்சுமியும் துடிதுடித்தார்கள். உள்ளே செல்லுவதற்கு அவர்களுக்கு அநுமதி கிடைக்கவில்லை.



மைத்துனனும் மைத்துனனும் அறைக்குள் குறுக்குநடை போட்டார்கள்

''அம்மா!'' என்று எழுப்பிய கௌரியின் ஈனக் குரலுடன் சேர்ந்து, ''வீல்! வீரா, வீரா, வீரா...'' என்று மற்றொரு புதுக்குரலும் எழுந்தது.

''ஆண் குழந்தை! ஆண் குழந்தை!'' என்று ஆட்டம் போட்டாள் உமா.

''பெண் குழந்தை! பெண் குழந்தை!'' என்று கைதட்டினாள் லட்சுமி.

தங்கை லட்சுமிக்கு அப்போது வேண்டியது பெண் குழந்தை, தன் மகனுக்குக் கட்டிப் போடுவதற்கு!

ஆண் குழந்தையா? பெண் குழந்தையா?-மருமகன் டமாரத்தைப் போட்

# வளர் பிறை

இரவு பதினோரு மணிக்கு விழுப்புரம் சந்திப்பில் வண்டி கடகடத்துக் கொண்டு நுழைந்தபோது, சின்னப் பயல் பாலு தூங்கி, என் கணவரும் மேல் தட்டில் ஏறிப் படுத்துக்கொண்டார். அப்போது எங்கள் பெட்டிக் கதவு திறந்துகொண்டு, கணவர் பின்தொடர, கையில் வெள்ளிக் கூஜாவுடன் ஏறினாள் அவள். ''மதுரம்!'' என்று கூவினேன். சிறிது நிதானித்த பிறகு, 'அலமுவா...எப்படி வளர்ந்துவிட்டாய். அடேயப்பா!' என்றாள் மதுரம். உண்மையில் என் தோற்றம் மாறிவிட்டதோ என்று என் கணவரைக் கேட்டேன். 'அதே அசட்டுக் கோலந்தான்' என்றார் அவர். இரண்டு மணி நேரம் அளவளாவிய பிறகே, உறக்கம் எல்லோரது நயனங்களையும் ஆட்கொண்டது—என்னைத் தவிர.



கண்ணாடி ஜன்னலில் பிரதிபலித்த எனது உருவத்தைப் பார்த்தவண்ணமிருந்தேன். எனது தோற்ற மாறுதலை விளக்குவதற்குப் பதிலாக, மூன்று வருஷங்களுக்கு முன்பு நடந்த சில சம்பவங்களை அகக்கண்களுக்கு முன்பு படரவைத்தது அந்தக் கண்ணாடி...

* * *

அப்போது மூன்று மாதக் குழந்தையாயிருந்த பாலுவின் அழுகை அடுத்த வீட்டுக்காரியான மதுரத்துக்குப் பகையாக அமைந்தது. ஒரு நாள் அவள் தன் கணவரிடம் புகார் செய்த மொழிகள் என் காதுக்கு எட்டிவிட்டன. 'இரவெல்லாம் அழுது படுத்தினால் தூக்கம் வருமா? தாய்க்காரி ஒழுங்காகச் சாப்பிட்டுத் தெம்புடன் இருந்தால்தானே தாய்ப்பால் போதுமான அளவு கிடைக்கும்? தகுந்த போஷாக்கு இல்லாமல் அது அலறுகிறது...' அன்று முதல் எங்கள் நட்பு முறிந்தது.

அப்போதெல்லாம் என் கணவர்கூட எனக்குப் பரிந்து பேசாமல், எனது நடை உடை பாவனையெல்லாம் ஒரே போக்காக இருந்ததாக சலித்துக் கொள்வார். என் சமையல்கூட அப்படியேதானாம்!

ஒரு நாள் மதுரம் என்னை யணுகி, ''மாற்றலாகிவிட்டது என் கணவருக்கு. அடுத்த மாதம் ஊரை விட்டுப் போகிறோம்'' என்றதும், சற்றே மனமிளகி சகஜமாகப் பழகத் தொடங்கினேன். கிளம்பும் தினத்தன்று, சாமான்களை முன்கூட்டி ரயிலடிக்கு அனுப்பிவிட்டு விடைபெற வந்தாள் மதுரம். ''ஒரு விஷயம், அலமு. எங்களிடம் சில தட்டுமுட்டு சாமான்கள் கிடக்கின்றன. எறிந்து விடவும் மனமில்லை; எடுத்துக் கொண்டு போகவும் முடியாது. உங்களிடம் கொடுத்துவிட்டுப் போகலாம் என்று...'' என்று இழுத்தாள்.

உப்பு, புளி, வெங்காயம், அடுப்புக்கரி, மண்ணெண்ணெய்—எல்லாவற்றையும் சந்தோஷத்தோடு பெற்றுக்கொண்டேன். ஆனால், பேரிச்சை மர அடையாளமிட்ட டின் ஒன்றை அவள் எடுத்துவந்ததும் வாங்க மறுத்துவிட்டேன்.

"ஒரு கரண்டிதான் எடுத்திருக்கிறோம். மீதியை நீங்களே உபயோகித்துக் கொள்ளலாம். சுத்தமான புத்தம் புதிய தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கிறார்கள். எவ்வளவு அடக்கமான டின் பாருங்கள். பரிசுத்தம் கெடாமலிருக்கும் டால்டா வனஸ்பதி?" என்றாள் மதுரம்.

"பொரிப்பதற்கும் சில பட்சணங்கள் தயாரிப்பதற்குமே சிலர் உபயோகிக்கிறார்களாம். நாங்கள் அதற்குக்கூட வனஸ்பதி உபயோகிப்பது கிடையாது. எங்கள் வீட்டில் எல்லாவற்றிற்கும் எண்ணெய்தான்."
"ஆனால் 'டால்டா'வுக்கு ஈடாகுமா? அனேக கடைகளில் திறந்த டின்களில் எண்ணெய்களைத் தூசிபடிய விற்கிறார்கள். அதுவுமன்றி, நெய்யிலுள்ள வைடமின் ஏ எண்ணெயில் இல்லை என்பார் என் கணவர். நோய் நொடிகளை எதிர்த்து நிற்க உதவுமாம் வைடமின் ஏ."

"'டால்டா'வில் மட்டும் இருக்கிறதோ?"

"பேஷாக. நெய்யிலுள்ள அதே அளவு 'டால்டா'விலும் சேர்க்கப்படுகிறது. அதுமட்டுமல்ல. பற்களையும் எலும்புகளையும் வலிவாக்கும் வைடமின் டீ யும் 'டால்டா'வில் சேர்க்கப்படுகிறது."

"உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது என்று கேள்வி."

"வருஷக் கணக்காக நாங்கள் உபயோகித்து வருகிறோம். திடமாக இல்லையா நாங்கள்? நல்ல நெய் கிடைப்பதே குதிரைக் கொம்பு. கிடைத்தாலும் யானை விலை. அதோடு, போதுமான பால் கிடைக்காத இந்தக் காலத்தில், வெண்ணெய் நெய்யாக மாற்றுவதைவிட, பாலைப் பாலாகவே சாப்பிடுவது நல்லது. ஆகவே, எல்லா சமையலுக்கும் 'டால்டா' உபயோகிக்க எங்களால் முடிகிறது..."

"நினைத்தால் வேடிக்கையாக இருக்கிறது. விசேஷ நாட்களுக்கான வடை, ஹல்வா, லட்டு எல்லாமே 'டால்டா'வில் தயாரிப்பீர்கள் என்பதனால் உங்கள் அழைப்பை ஏற்றுக்கொள்ளாமல் இருந்துவிட்டேன்."

"விசேஷங்களுக்கு மட்டுமென்ன? சாம்பார், ரஸம், அப்பளம் முதலிய அன்றாட சமையலுக்குக்கூட 'டால்டா'தான் உபயோகிக்கிறோம்; எல்லாப் பண்டமும் ருசியாயிருக்கும், புஷ்டிதரும்!—என்ன அலமு, உங்களிடமே இருக்கட்டும்; இந்த பேரிச்சை மர அடையாளமிட்ட டின், என் ஞாபகமாக...!" வதனத்தில் புன்னகை மலர விடை பெற்றுக் கொண்டாள் மதுரம். என்ன அதிசயம்! எங்கள் வீட்டுச் சமையலையே மாற்றி, மங்காத குதூகலத்தை நிலைநிறுத்திவிட்டது அந்த மதுரப் புன்னகை!

அந்தப் புன்னகையை நான் மறக்கவில்லை, மூன்றாண்டுகள் ஆகியும். ஆனால் அவளோ...?

* * * *

நான் என்ன அப்படி அடையாளந்தெரியாமல் மாறியா போய்விட்டேன்? "ஆம் அலமு. உண்மையில் நீ மாறித்தான் போயிருக்கிறாய். நானே அடிக்கடி பிரமிப்பதுண்டு...அலமு!...". திடுக்கிட்டேன். எல்லோரும் உறங்கிய பிறகு, அந் நள்ளிரவில் என் கணவர் என்னைப் பாராட்டியவாறு பின்புறமிருந்து அணுகிய காட்சியை ஜன்னலுக்கு வெளியே ஒளிர்ந்துகொண்டிருந்த பூரண சந்திரன் மட்டும் பார்த்துவிட்டான்!

டுப் பிய்த்து வாங்கினான். மருமகள் 'பீப்பீ'யால் வெற்றி விழாக் கொண்டாடினாள்.

குழந்தை பிறந்தவுடன், அது என்ன குழந்தை என்று தெரிந்து கொள்வதற்கு, பிரசவ அறையின் வெளியே நிற்பவர்களுக்கு ஏற்படும் ஆவல் இருக்கிறதே, அதை எப்படி இங்கே எழுத முடியும்? பேனாவுக்கு உயிரா இருக்கிறது, தன் பரபரப்பைக் கொட்டித் தீர்ப்பதற்கு? திரைப்படங்கள், தொடர் கதைகள், சூடான செய்திப் பத்திரிகைகள் கொடுக்கும் பரபரப்பையெல்லாம் அந்த ஜீவசக்தியின் காலில் கட்டி அடிக்க வேண்டும். பிறப்பின் ரகசியத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று இறக்கப் போகும் மனிதர்கள் துடிக்கும் துடிப்பு ஐயா, அது!

குழந்தை பிறந்து விட்டது.

போர்க்களத்தில் வெற்றி வாகை சூடிய இருபத்தைந்து வயது வீர மங்கை போல், மங்களத்துப் பாட்டி, குழந்தையைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டு வெளியில் வந்தாள். கண்களில் ஆனந்தம், நடையில் மிடுக்கு, முகத்தில் பெருமிதம்! எல்லோரும் அவளைச் சூழ்ந்து கொண்டு குதியாய்க் குதித்தார்கள். 'என்னிடம் கொடு! என்னிடம் கொடு! என்னிடம் கொடு!' வழி மறித்தவர்களிடம் அவள் கொடுக்கவில்லை.

"ராஜா! உன் அப்பா பரமசிவம் பிறந்து விட்டாரடா!" என்று கத்தினாள் பாட்டி. "என் கட்டை இனிக் கட்டாயம் கைலாசம் போய்விடும்!" என்று அவளே சொல்லிக்கொண்டாள்.

தணிகாசலத்தின் கரங்களுக்குக் குழந்தை வந்தது. சின்னஞ் சிறு கைகால்களை உதறிக் கொண்டு, மணிக் கண்களால் விழித்து நோக்கிக்கொண்டு அழகாக அழுதான் அந்தச் சிறு பயல். பூப்போன்ற மேனி, சந்தனமும் செஞ்சாந்தும் குழைத்த தளிர் நிறம், பட்டு போன்ற மிருதுவான தலை மயிர்.

தன் தந்தையை உயிருடன் திரும்பிப் பார்ப்பது போல் தணிகாசலத்துக்கு ஒரு கற்பனை. தன்னை அரும்பாடுபட்டு வளர்த்த தந்தை, தன்னை மனிதனாக்க வேண்டும் என்று கனவு கண்டு, அந்தக் கனவு நனவாகு முன்பே கண்களை மூடிய தந்தை இப்போது திரும்பவும் பிறந்திருக்கிறாரா? தெய்வத் தமிழ்த் திருநாட்டின் பரம்பரைத் தத்துவம் அவன் கண்களில் நீர் சுரக்க வைத்தது. இதே வேளையில் அங்கு கௌரியின் மார்பகத்தில் பால் சுரந்து கொண்டிருக்கும். அன்பால் இந்த உலகத்தை ஆள நினைக்கும் அருந்தமிழன் பிறந்து விட்டான்!

அத்தியாயம் 13

## மனிதனா? பணமா?

குழந்தை பிறந்த இரண்டாவது வாரத்தில், கண்ணபுரத்திலிருந்து சென்னைக்குப் புறப்பட்ட தேவகியை அழைத்து வருவதற்காகத் தணிகாசலம் ரயிலடிக்குச் சென்றான். உமாவும் அவனுடன் ஒன்றாய்க் கிளம்பினாள். தேவகியைப் பற்றிப் பேசிக்கொண்டே இருவரும் எழும்பூர் பிளாட்பாரத்தில் காத்துக் கொண்டிருந்தார்கள். வாய்க்கு வாய் "தேவகி அக்கா! தேவகி அக்கா!" என்று சொல்லி, தேவகியின் புகழ் பாடத் தொடங்கி விட்டாள் உமா. தணிகாசலத்துக்கு, முதற் பார்வையிலேயே செங்கமலத்தை அடியோடு வெறுத்த இந்தப் பெண், தேவகியிடம் மட்டிலும் இத்தனை பரிவு காட்டியதன் ரகசியம் புரியவில்லை. தேவகியும் பெண்; செங்கமலமும் பெண். உமா ஏன் ஒருத்தியை விரும்ப வேண்டும்? மற்றவளை வெறுக்க வேண்டும்?

ரயில் வந்து நின்றவுடன் தேவகியைத் தூக்கிக் கொண்டு வராத குறையாகப் பெண்கள் பெட்டியிலிருந்து வெளியே இழுத்து வந்தாள் உமா. தேவகியின் கண்கள் ரயிலடிக் கூட்டத்தில் தணிகாசலத்தைத் துழாவிக் கண்டு பிடித்துச் சிரித்தன. "படிக்கும்போது எப்படிச் சிறு பிள்ளையாக இருந்தாயோ, அதே போல் இன்னும் அச்சு மாறாமல் இருக்கிறாயே!" என்று தணிகாசலத்தைப் பார்த்துக் கூறினாள் தேவகி.

"இன்னும் அவர் படித்துக் கொண்டு தான் இருக்கிறார்" என்றாள் உமா. "வாழ்க்கைப் பள்ளிக்கூடத்தில்" என்று மேலே கூறி, அவன் சொல்லைக்கொண்டு அவனையே கேலி செய்தாள்.

தேவகியின் வருகைக்குப் பிறகு தணிகாசலத்தின் மனம் நிறைவு பெற்றது. நினைக்கும்போதெல்லாம் மன நிறைவைத் தரும் தேவகியின் நெற்றியையும் தேர் வகிட்டையும் ஏறிட்டுப் பார்த்தான். கூட்டை முடிச்சுக்களைத் தூக்கிக் கொண்டான்.

மேலும் பத்து நாட்கள் மாம்பலத்து மாடியில் கோலாகலமாகக் கழிந்தன.

மூன்றைக்கு மருந்து கொடுத்தாள் மங்களத்துப் பாட்டி, குளிப்பாட்டி விட்டாள் கல்யாணியம்மாள், தூளி ஆட்டினுள் கௌரியைப் பெற்றவள், பால் கொடுத்தாள் கௌரி, 'பௌடர்' பூசினுள் லட்சுமி, விளையாட்டுக் காட்டினுள் தேவகி, அவனுக்குப் பேசக் கற்றுக் கொடுத்தாள் உமா!

**பெ**ண்களுடன் சேர்ந்து பொழுது போக்கிய தேவகி, ஒருநாள் தணிகாசலம் சோம்பலுடன் புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த வேளையில், எதிரில் தரையில் வந்து உட்கார்ந்தாள். புத்தகத்தை மூடி வைத்துவிட்டு அவளிடம் தணிகாசலம் பேச்சுக் கொடுத்தான். "பட்டணத்தில் பார்க்க வேண்டிய இடமெல்லாம் பார்த்து விட்டீர்களா? உமா உங்களை அழைத்துக் கொண்டு போனுளே!"



தேவகிக்குச் சென்னைப் பட்டணம் பழைய நினைவுகளைக் கிளறி விட்டிருக்க வேண்டும்." இந்த ஊ!ரில் தான் அவர் படித்துப் பாழாய்ப் போனுர்!" என்று பெருமூச்சு விட்டாள். "இந்த ஊர்க் கடல்தான் அவரை விழுங்கி விட்டது" என்ருள்.

சட்டக் கல்லூரியில் படிக்க வந்து தண்ணீருக்கு இரையான அவள் கணவனை நினைத்துக் கொண்டான் தணிகாசலம். தொடர்ந்தாற் போல் வேறு பல நினைவுகளும் அவனுக்கு வந்தன. ஒரு நாள் இரவு அவனிடம் வந்து தேவகி மன்ருடினுள் அல்லவா? 'உன் விருப்பப்படி நீ சென்னையில் போய்ப் படித்து விட்டு வா. செலவுக்கு நான் பணம் தருகிறேன். ஆனல் கடற்கரைப் பக்கம் மட்டும் போகாதே. அப்படிப் போனுலும் தண்ணீரில் இறங்காதே!'

'சாவைவிட, சாவைப் பற்றிய நினைவே மனிதர்களுக்கு அதிகமான பயத்தைத் தருகிறது' என்று எண்ணினுன் தணிகாசலம். வருத்தம் தோய்ந்த சிரிப்பு அவன் இதழ்க் கோணத்தில் நெளிந்தது.

"என்ன சிரிக்கிருய்?"

"ஒன்றுமில்லே."

"என்னைப் பற்றி நினைக்கிருயா? எனக்கே நான் யாரென்றுதெரியவில்லை. 'என்ன நினைக்கிறேன்?' என்று என்னுலேயே கண்டு கொள்ள முடியவில்லை. வீணுக நீ அந்த ஆராய்ச்சியில் இறங்க வேண்டாம். என்னைப் பற்றி நீ கவலைப்படுவது எனக்குப் பிடிக்காது."

"கவலைப் படவில்லை" என்று சொல்லி விட்டுக் கவலைப்படத் தொடங்கினுன் தணிகாசலம்: 'இவளிடம் மறைந்து கிடக்கும் உணர்ச்சிக்கு என்ன பெயர்? மனுேதத்துவ ஆராய்ச்சி இவளிடம் ஒத்துழைக்க மறுக்கிறதே! இந்த உணர்ச்சிக்குப் பெயர் வெறும் அன்பா? காதலா? பாசமா? பாசம் என்ருல் என்ன பாசம்? சகோதர பாசமா? தாய்மைப் பாசமா? என்னிடம் இவளுக்கு அப்படிஎன்ன பற்றுதல்? ஏன் பற்றுதல்? இவள் யார்? நான் யார்? அன்றைக்கு வந்து காலைக் கட்டிக் கொண்டு அழுத தேவகி அன்றைக்கே செத்துப்போய் விட்டாள். மனிதர்கள் கணத்துக்குக் கணம் இறந்து போய் மறுபிறவி எடுக்கிருர்கள். அப்படியாளுல் எனக்கு இவளைப் புரியவில்லையே? புரிந்து என்ன பலன்? அன்பின் உருவத்தைக் கண்டு, ஆழத்தைத் தேடி, நீ என்ன செய்யப் போகிருய்? விட்டு விடு! உணர முடிந்தால் உணர்ந்துகொள்; அத்துடன் நிறுத்திக் கொள். நெஞ்சைக் கீறிப் பார்ப்பதற்கு முயற்சி செய்யாதே. நெஞ்சைக் கீறிப் பார்த்தால் ரத்தமும், சதையும், நரம்பும், ஊனுமே வெளிப்படும். எவனே ஒரு கவி, 'கேட்கக் கூடிய இன்னிசையை விடக் கேட்க முடியாத இன்னிசையின் ஒலி அற்புதமானது' என்று கூறவில்லையா? தணிகாசலம்! அவள் நெஞ்சைக் கூறுபோட முயற்சிக்காதே!..."



முதல் சேவகன் : ஏம்பா ஏகாம்பரம்! டைரக்டர் ஐயாவைப் பார்க்க வருகிறவர்களையெல்லாம் ''மேல் அதிகாரிகளுடன் ஆலோசனை நடத்துகிறார்'' என்று சொல்லித் திருப்பி அனுப்புகிறாயே! உள்ளே அவர் தனியாகத் தானே இருக்கிறார்!

இரண்டாவது சேவகன் : உஸ்ஸ்...! உரக்கப் பேசாதே! இந்த வேளையில் அவருடைய தூக்கத்தை யாரும் கலைக்கக் கூடாது!

ooooooooooooooooooooooooooooooo

தணிகாசலம் தன்னையே ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான்.

'' எனக்கு நீ ஒரு உதவி செய்ய வேண்டும்?'' என்றாள் தேவகி.

''என்ன?''

''என்னோடு இரண்டு நாட்கள் முல்லையூருக்கு வந்துவிட்டுத் திரும்பவேண்டும்; கண்ணபுரத்துக்குப் போய் அண்ணாவை அழைத்துக் கொண்டு முல்லையூருக்குப் போவோம்'' என்றாள். கிராமத்தில் நிலத் தகராறு இன்னும் சரியாகத் தீரவில்லையாம். குத்தகைக்காரருக்கும் பண்ணைக் கூலிகளுக்கும் சண்டை முற்றி, அடுத்த நடவுக்கு நிலத்தை உழவடை செய்ய மறுத்து விட்டார்களாம். நானோ பெண்பிள்ளை; அண்ணாவின் சொல் அவர்களிடம் எடுபடவில்லை; எதற்கும் நீயும் வந்து ஒரு வார்த்தை சொல்லிப் பார்'' என்றாள் தேவகி.

தணிகாசலம் ஒப்புக் கொண்டான். சிக்கலைத் தீர்ப்பதற்குத் தன்னால் முடியாவிட்டால் கூட, தேவகியின் பொருட்டு முயற்சி செய்து பார்க்க விரும்பினான்.

'மனிதர்களுடைய நல்ல எண்ணத்தில் நம்பிக்கை வைத்துத் தெரிந்ததைச் சொல்லிப் பார்ப்போம். அவர்கள் கேட்டால் கேட்கிறார்கள். கேட்காவிட்டால் போகட்டும்.'

முல்லையூர் கிராமத்துக்கும் அதன் ரயிலடிக்கும் மூன்று மைல் காட்டுப் பாதை. 'மோட்டார்' கிடையாது. ரயிலடியிலிருந்து நடந்து போக வேண்டும்; வண்டி வைத்திருப்பவர்களுக்கு அந்தக் கஷ்டமில்லை.

குத்தகைக்காரச் செல்லையா மாட்டு வண்டியுடன் ரயிலுக்கு வந்திருந்தார். அவரும் சரி, அவருடைய பண்ணையாட்களும் சரி, அது வரையில் ஊர் வம்புகளில் தலையிட்டுக் கொண்டதில்லையாம். அதனால்தானோ என்னவோ தங்களுக்குள் தகராறு செய்து கொண்டார்கள். வண்டியில் போகும்போதே செல்லையாவிடம் கிராமத்து நிலவரங்களை விசாரித்தான் தணிகாசலம்.

''அந்த ஒரு பயலை வழிக்குக் கொண்டு வந்தால் போதும்! குடிக்கக் கூழில்லை, குந்தக் குச்சில்லை, என்னிடமே மீசை முறுக்குகிறான்!'' என்று தம்முடைய நரைத்த மீசையை முறுக்கிக் கொண்டார் செல்லையா.

''குடிக்கக் கூழும், குந்தக் குச்சும் கிடைத்து விட்டால் இந்தச் சண்டைகளே குறைந்து போகும்'' என்றான் தணிகாசலம்.

பண்ணைக்காரர்களின் தலைவன் வேறு யாருமில்லையாம். அவருடைய ஒன்று விட்ட தங்கை மகன் வேலாயுதம் அவருடைய 'எதிரி!' அரைகுறைப் படிப்பு படித்து விட்டு வந்து சட்டம் பேசினானும். கூலியாட்களை வேலை செய்ய விடாமல் தடுத்தானும். ''ஒழுங்காகத் தானே அந்தப் பயல் அடங்கி ஒடுங்கி வேலை பார்த்தான்'' என்று ஆரம்பித்துச் செல்லையாவே அவனுடைய திறமைகளைச் சொல்லிக் கொண்டு வந்தார்.

செல்லையாவின் வீட்டுத் திண்ணையில் கூட்டம் கூடியது. தணிகாசலத்தைச் சேர்த்துத் தேவகியின் பக்கம் நான்கு பேர்கள். வேலாயுதம் தன்னைச் சேர்ந்த இரண்டு உழவர்களை அழைத்துக் கொண்டு வந்திருந்தான். வேலாயுதத்துக்கு இருபத்தைந்து வயதுக்குள் இருக்கலாம். முறுக்கு மீசையும், அரைக்கைச் சட்டையும், கட்கத்தில் சொருகிய மேல் துண்டுமாக ஒரு மூலையில் வந்து நின்றான். மற்றவர்களுக்கு மேல்சட்டை என்ன, மேல்துண்டு கூடக் கிடையாது. தம்முடைய சொந்தக்காரனாக இருந்தும் செல்லையா அவனைத் திண்ணையில் உட்கார வைத்துப் பேசவில்லை.

இரண்டு பக்கத்தாரும் விட்டுக் கொடுக்காமல் காரசாரமாகப் பேசிக் கொண்டார்கள். தணிகாசலம் எதிலும் பட்டுக் கொள்ளாமல் நடவடிக்கைகளைக் கவனித்தான். வேலாயுதம் மேட்டுக்கு இழுத்தால் செல்லையா அவனைப் பள்ளத்தில் தள்ளினார். செல்லையா மேலே பறந்தால், வேலாயுதம் அவரைச் சொல்லாயுதத்தால் சுட்டு வீழ்த்தினான். இரண்டு பேரும் ஒருவரையொருவர் பயமுறுத்திக் கொண்டார்கள். செல்லையாவின் பயமுறுத்தல் சட்டம், போலீஸ், வழக்கு, கோர்ட்டு, பணம் இப்படி இருந்தது. வேலாயுதத்தின் பயமுறுத்தல் ஆள் கட்டுப்பாடு, 'உழுதவனுக்கே நிலம் சொந்தம்', 'மற்றவன் உழுதால் கால் முறியும்'- இந்தத் தோரணையில் இருந்தது.

இரண்டு கட்சியும் விட்டுக் கொடுக்கவில்லை. தேவகி விட்டுக் கொடுக்கத் தயாராக இருந்தாள். ஆனால் செல்லையா அதை ஒப்புக்கொள்ளவில்லை.

ருந்த அதே வேளையில் அந்த வீட்டில் இனிமையான தென்றலும் ரகசியமாக வீசத் தொடங்கியது. செல்லையாவின் வீட்டுச் சன்னலுக்குப் பின்னால் நின்று கொண்டு அவருடைய மகள் வள்ளி திருட்டுத் தனமாய் வேலாயுதத்தை எட்டிப் பார்த்தாள். வேலாயுதமும் அடிக்கடி தன் கிராப்புத் தலையை ஒதுக்கி விடும் சாக்கில் சன்னல் பக்கம் திரும்பினான். ஒரே சமயத்தில் அவனுடைய கண்கள் அவர் மகளிடமும் வாய் அவரிடமும் பேசுவதற்கு முற்பட்டன. செல்லையா இந்த லட்சணத்தில் அவர் மகளை வைத்துக்கொண்டு அவனிடம் காரசாரமாகப் பேசினார்.

பேச்சுவார்த்தை முறிந்தது.

''உனக்குத் தெரிந்ததை நீ பார்த்துக் கொள்!'' என்றார் செல்லையா.

''உங்களுக்குத் தெரிந்ததை நீங்கள் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று கத்திவிட்டு வேலாயுதம் சன்னல் பக்கம் பார்த்தான். பிறகு தன்னுடைய



''என்னுடைய சொந்த நிலம் வேறே இருக்கிறதே! அதற்கும் இந்தப் பேச்சுத்தானே?'' என்று அவர் மறுத்தார்.

ஆளுக்குச் சிறிது விட்டுக் கொடுத்தால் அமைதி நிலவும் போல் தோன்றியது. ஆனால் இரண்டு பேருமே தங்கள் தங்கள் சுயமரியாதையை இறுக்கிப் பிடித்தார்கள். மூளையால் தீரவேண்டிய சிக்கலுக்கு அவர்கள் உணர்ச்சியைப் போட்டுக் குழம்பிக் கொண்டிருந்தார்கள். எவ்வளவு விட்டுக் கொடுத்தாலும் செல்லையாவுக்குப் பண்ணையின் கௌரவம் குறைந்து விடுமாம். வேலாயுதத்துக்கோ தன்மானம் போய்விடுமாம்! மாமன் மருமகனுக்குள் அகப்பட்டுக்கொண்டு அந்த உயர்வு - தாழ்வு மனப்பான்மை படாதபாடு பட்டது.

இத்தகைய சூடான காட்சிக்கு மத்தியில் தணிகாசலம் மற்றொரு சுவையான காட்சியையும் கண்டான். கடுமையான பேச்சுப் புயல் வீசிக்கொண்டி

தோழர்களுடன் நடையைக் கட்டினான்.

மத்தியானச் சாப்பாடு முடிந்தவுடன் தணிகாசலமும் செல்லையாவும் தனியாகச் சந்தித்து நீண்ட நேரம் பேசினார்கள். அவருடைய வயதுக்கும் பெருமைக்கும் மதிப்புக் கொடுத்து, அவரிடமே கேள்விகள் கேட்டு, அவரையே பதில் சொல்ல வைத்து உழவர்களின் நியாயமான குறைகளை அவர் மனத்தில் ஆழமாய்ப் பதிய வைத்தான். அவன் கூறிய யோசனைகள் செல்லையாவின் வாயிலாகவே, அவரே சொல்வதுபோல் வெளிவரத் தொடங்கின! முடிவான திட்டங்களை அவன் சொல்லவில்லை. அதற்கான மனச் சூழ்நிலையை ஏற்படுத்தியதுதான் அவன் வேலை. ''நீங்களே திரும்பவும் பேசி ஒரு நல்ல முடிவுக்கு வாருங்கள். அதிகாரத்தால் சாதிக்க முடியாததை அன்பால் சாதிக்கலாம். பணத்தால் சாதிக்க முடியாததை மனத்

தால் சாதிக்கலாம். பணத்துக்கு எவ்வளவு வலிமை இருந்தாலும் அது ஒரு கருவிதான். மனிதர்கள் உயிரும் உணர்ச்சியும் உடையவர்கள். உண்மையான அன்பு செலுத்துவது கூட ஒரு மனப் பழக்கம் தான். நான் அவனிடமும் சொல்லிப் பார்க்கிறேன்.''

மாலை வேளையில் ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு வேலாயுதத்தின் இருப்பிடத்தை விசாரித்தான் தணிகாசலம். வேலாயுதத்தின் வீட்டுக்குப் பின்னால் பூவரச மரத்தடியில் சிறு கூட்டம் கூடியிருந்தது. பத்துப் பதினைந்து குடியானவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்து வேலாயுதம் செல்லையாவைத் திட்டிக் கொண்டிருந்தான். தணிகாசலத்தைக் கண்டவுடன் அவன் பேச்சு நின்றுவிட்டது. எல்லோரும் சந்தேகக் கண்களுடன் தணிகாசலத்தைத் திரும்பித் திரும்பிப் பார்த்தார்கள்.

வேலாயுதத்திடம் தணிகாசலம் நியாயம் பேசத் தொடங்கியது அவனுக்கே பிடிக்கவில்லை. எடுத்த எடுப்பில் தாக்கி எறிந்து பேசிவிட்டான்.

''நீங்க என்னைவிடப் படிச்சவுங்க; என்னை ஏமாற்றப் பார்க்காதிங்க'' என்றான் வேலாயுதம்.

முகத்தில் சவுக்கடித்தது போல் தோன்றியது தணிகாசலத்துக்கு. என்றாலும் சிரித்துக் கொண்டான். ''இங்கே இருப்பவர்களை விட நீ படித்தவன்; அதற்காக நீ இவர்களை ஏமாற்றுகிறாய் என்று நான் சொல்லலாமா?''

''நாங்கள் ஏழைகள்...''

''வேலாயுதம்!'' என்று அவன் முகத்தை உற்று நோக்கினான் தணிகாசலம் ''நானும் ஏழை; நீயும் ஏழை. நான பட்டணத்து ஏழை; நீ பட்டிக் காட்டு ஏழை. நமக்குள் உள்ள வித்தியாசம் இவ்வளவுதான். ஏழைகள் எல்லோரும் நல்லவர்களுமல்ல. பணக்காரர்கள் எல்லோரும் கெட்டவர்களுமல்ல. எல்லா வகுப்பாரிலும் நல்லவர்-கெட்டவர் இருக்கிறார்கள். நானும் நீயுமே சில வேளைகளில் நல்ல காரியங்களைச் செய்கிறோம்: இன்னும் சில வேளைகளில் கெட்ட காரியங்களைச் செய்கிறோம். உங்கள் குறைகளை நீங்கள் சொல்லுங்கள்; எனக்குத் தெரிந்ததை நான் சொல்கிறேன். முடிந்தால் ஒற்றுமையாகப் போங்கள்; இல்லாவிட்டால் விட்டுவிடுங்கள்.''

மனிதனின் நல்ல எண்ணத்தில் நம்பிக்கை வைத்து, அவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்து பேசினான் தணிகாசலம். இரண்டு மணி நேரம் விளக்கிச் சொன்ன பிறகு அவர்களுக்குத் தணிகாசலத்திடம் நம்பிக்கை பிறந்தது.

''வஞ்சனை யில்லாமல் உழைத்து வயிறாரச் சாப்பிட வேண்டும். அரைப் பட்டினி கிடந்து உங்களை உழைக்கச் சொல்லவில்லை. நிலத்தைத் தரிசு போட்டால் அது நாட்டுக்குத்தான் நஷ்டம். சட்டமோ, அரசியலோ எனக்குத் தெரியாது. விரோதத்தை வளர்த்துக் கொள்ளாமல் கடமையைச் செய்துவிட்டு உரிமைக்குப் போராடுங்கள். சிறிய மிராசுதார்களின் நிலைமையும் அப்படி ஒன்றும் உயர்ந்து விடவில்லை. விரோதம் வேண்டாம் என்று சொல்லத்தான் நான் இங்கு வந்தேன். செல்லையாவும் இனிமேல் வீண் விரோதம் பாராட்ட மாட்டார்.''

அடுத்த நாளே செல்லையாவும் வேலாயுதமும் சமரசமான ஒரு முடிவுக்கு வந்தார்கள். தேவகி தன் பங்கில் விட்டுக் கொடுக்க வேண்டியதையும் தாராளமாக விட்டுக் கொடுத்தாள். உண்மையான மகிழ்ச்சி இதில் தணிகாசலத்துக்குத்தான். மனிதனை மனிதனாக மதித்து நடத்தினால் கூடுமான வரையில் அவன் உண்மைக்குக் கட்டுப்படுவான். பணம் கருவி; மனிதனே உயர்ந்தவன்.

சென்னைக்குத் திரும்பியவுடன் தணிகாசலத்துக்கு ஒரு எதிர்பாராத செய்தி காத்திருந்தது.

''உங்களை உங்கள் செங்கமலம் வந்து தேடி விட்டுப் போனாள்!'' என்று ஒரு பொய்யைச் சொல்லி விட்டு அவன் முகத்தை வேடிக்கை பார்த்தாள் உமா. அவன் சிரிப்பு அவனுக்குக் கோபமூட்டியது. ''அவள் பெயரைக் கேட்டாலே உங்களுக்குச் சிரிப்பு வருகிறதோ?—இந்தாருங்கள் கடிதம்.''

உண்மையில் அங்கே செங்கமலம் வந்து போகவில்லை. அவள் கணவர் குமாரசாமி எழுதிய கடிதத்தை வைத்துக் கொண்டுதான் உமா அப்படி வேடிக்கை செய்திருக்கிறாள்.

''உடனே என்னை என் ஆபீசில் வந்து பாருங்கள்'' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டிருந்தார் குமாரசாமி.

தணிகாசலத்தின் கரம் அந்த ஒரு வரியைப் படித்தவுடன் அவனையும் மீறி நடுங்கியது. 'குமாரசாமி எதற்காக என்னை அழைக்க வேண்டும்? என்னிடம் அவருக்கு என்ன வேலை? அந்த முட்டாள் பெண்ணிடம் முன்பே என் கடிதத்தைக் கிழித்தெறியச் சொன்னேனே!—கடவுளே! எனக்கு அதனால் என்ன துன்பம் வந்தாலும் வரட்டும். அவள் வாழ்வைக் குலைத்து விடாதே..!'

குமாரசாமியைப் பார்த்து வருவதற்காக இரும்பைப் போல் கனத்துப் போன மனத்துடன் தணிகாசலம் புறப்பட்டான். (தொடரும்)




# மண்பாண்டம்

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

அது பொங்கற் புதுப்பானை. செக்கச் செவேலென, பளபளவென்று மின்னி நின்றது அந்த மண்பாண்டம். என்ன மினுமினுப்பு, என்ன சிவப்பு! கோவைக் கனியா, செம்பருத்திப் பூவா, பவளமா, முயலின் இரத்தமா, இல்லை இல்லை, இவையெல்லாம் இல்லை. அந்த மட்கலம், கனலேறிய செம்மண்ணின் ஈடிலா நிறம் பெற்று ஒளி வீசியது. வளைவு விம்மியது; குழைவு தனக்குள்ளே பதுங்கியது; வளைவும் குழைவும் சுட்ட மண்ணும் இசைந்து கண்ணிறைந்த வடிவம் பெற்ற பாத்திரம் ஆகி விட்டன.

எல்லாம் சரிதான். ஆனால் பானை பேசவில்லை, ஊமையாய்க் கிடந்தது. கவிஞன் அதை வியப்போடு பார்த்தான். எவ்வளவு அழகிய கலம், அதன் நிறம் நெஞ்சை அள்ளுகிறதே, எவ்வளவு அந்தமான வடிவம்! ஆனால் ஒரு காலத்தில் வடிவற்ற களிமண்ணாய்த்தானே இது கிடந்தது? குயவன் அந்தக் களிமண்ணை எடுத்துப் பிசைந்தான், தன் சக்கரத்தில் வைத்துச் சுழற்றினான், விரலால் அதைக் கோதிக் கோதி, வடிவத்தை நோக்கி அதைச் செலுத்தினான். களிமண், பானை ஆயிற்று; உருவற்ற பிண்டம் உருவம் படைத்தது; வடிவற்ற மண் திரள் வடிவுடைய கலமாய்ச் சமைந்தது. குயவன் கை தன்னைத் தீண்டியதும், தனக்கு வர இருந்த அழகை எண்ணி, அந்தக் களி மண் சிலிர்த்ததோ? வடிவத்தை நோக்கி, சக்கரத்தில் சுழன்றபோது, அது உள்ளம் பூரித்துத் துள்ளியதோ?

ஏன், இந்தக் கலத்தையே கேட்டுவிடுவோமே என்று எண்ணுகிறான் கவிஞன். கேட்டும் விடுகிறான் :

செக்கச் சிவந்த மட்கலமே!
ஏன் ஊமையாய் நிற்கிறாய்?
உன்னைப் படைத்து இங்கே அனுப்பிய குயவன்
அவன் சக்கரத்தில் நீ சுழன்றபோது
என்ன உணர்ந்தாய்?

அதுவரையில் ஊமையாய்க் குந்தி இருந்த அந்தக் கலம், கவிஞனுடைய குரலைக் கேட்டதும் பேசத் தொடங்கியது. நீண்ட பெருமூச்சுடன் தன் கதையைப் பேசியது :

'என்னுள்ளே
வெறும் மண்ணாய்க்கிடந்த என்னுள்ளே,
தன்-அறிவுத் துடிப்பொன்று கண்விழித்தது.
அந்தப் பெருங்குயவனுடைய நீண்ட கரம்
தொட்டபோதெல்லாம் என்னைச் சுட்டது.
விடுபட்டு ஓடத் துடித்தேன்.
ஐயோ, வடிவத்தில் அழுந்தினேன்.
அழுந்த அழுந்த,
அலகிலாப் பெருந்துயர் என்னை அழுத்தியது.'

சக்கரத்தில் வைத்துக் குயவன் சுற்றிய போது, களிமண் தனக்கு வரப்போகும் புதிய வாழ்வை எண்ணி ஆனந்த நடனம் புரியும் என்றல்லவா நினைத்தோம், வேறு ஏதோ பேசுகிறதே, என்னவென்று கேட்போம். தொடர்ந்து பேசுகிறது அந்தச் செம்மண் கலம் :

'என்ன காலமோ,
களிமண்ணாய்ச் சமைந்தேன்.
இரத்தமாய்ச் சிவந்தேன்.
வடிவம் என்னும் உறக்கத்தில் ஓய்ந்தேன்.
அதற்கு முன்
வடிவற்று, வண்ணமற்று
வெறுங்களிமண்ணாய் நான் கிடந்தபொழுது
உணர்ந்தது ஒன்று உண்டு.
சின்னஞ் சிறிய மலர்ச்செடி ஒன்று
என்மார்பிலே, தன்வேரை ஆழப்புதைத்தது.
அதன் மணம் கமழ்ந்த நட்பை
அன்று நான் உணர்ந்தது உண்டு.'

வடிவற்று, வண்ணமற்று, வெறும் களிமண்ணாய்க் கிடந்தபொழுது அது மலர்ச் செடியுடனல்லவா நட்பு பூண்டது? பிறகு...? அதை இழந்து விட்டோமே என்று எண்ணியா வருந்துகிறது இந்த மண்பாண்டம்? 'வருந்துகிறேனா, இல்லை, செத்து விட்டேன் அப்பா' என்று பேசுகிறது அது :

'இன்றோ,
என் உயிரை வடித்துவிட்டான்
அந்தக் குயவன்.
வடிவம் என்னும் சாவை வழங்கினான்.
வடிவமும் வண்ணமும் அற்ற
வெறுங் களிமண்ணாய்க் கிடந்தேனே,
அந்த நிலை, என் பழைய நிலை,
அதற்கு இணை ஏது?
அன்று, அன்று, என் நெஞ்சில் கடர்ந்தது
ஒரு மலர்.'

இது ஸ்ரீ ஹரீந்திரநாத சட்டோபாத்தியாயர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள 'மட்கலம்' என்னும் பாடல்.

இதைப் பேசி விட்டு, மறுபடியும் தன் பழைய மோனத்தில் ஒடுங்கி விடுகிறது அந்த மட்கலம். பாடலும் இதோடு நின்று விடுகிறது.

ஆனால், இதன் பிறகு தான், நம்முடைய சிந்தை அதன் நீண்ட பிரயாணத்தைத் தொடங்குகிறது. 'பாட்டின் பொருள் என்ன?' என்று அறிந்துகொள் வதிலே நம்முடைய நாட்டம் செல்கிறது. பொருள்தான் தெரிகிறதே, அதன் உட்பொருள் என்ன?

**கற்பனையே ஆனாலும்**
**வேதாந்தமாக விரித்துப் பொருள் உரைக்க யாதேனும் சற்றே இடமிருந்தால்...**

என்கிறார் மகாகவி பாரதியார் தமது 'குயில்' பாட்டில்.

இடம் இருக்கிறதா? பாட்டில் குயவன் என்று குறிப்பிடப் பெறுவது யார்? கடவுளா? அப்படியானால், களிமண் என்பது மூலப் பிரகிருதியா? இந்த மண்ணுலகில் உடலும் உயிரும் இணைந்த வடிவங்கள் எத்தனையோ உலவி வருகின்றனவே, அவற்றில் ஒன்றையா குறிப்பிடுகிறது பாட்டில் வரும் மட்கலம்? களிமண்ணின் மார்பிலே வேரூன்றி நின்ற மலர் எதைக் குறிக்கிறது? யார் கண்டது? பாடல் நேரடியாக ஒன்றும் சொல்லவில்லை. ஏதோ மட்கலத்தைச் சிறிது பேச வைத்து விட்டு, பிறகு அதோடு சேர்ந்து கொண்டு, கவிஞனும் மௌனமாகி விட்டான். நமது சிந்தையோ ஓடுகிறது: 'பொருள் என்ன, பொருள் என்ன, என்று தெரிந்து கொள்ளும் ஆவலிலே பாய்ந்து செல்கிறது. கண் முன்னே நிழலாடி மயக்கி, கைக்கு எட்டாமல் துள்ளி ஓடும் அந்த உட்பொருள் என்ன என்று தேடிக் கொண்டு போகிறது. முடிவில்லா நெடுவழியில் போய்க் கொண்டிருக்கிறது. இதுவே கவிதையின் வெற்றி.



பூனாவில் உள்ள அகில இந்திய ஸ்ரீலலிதகலா சமிதியின் ஆதரவில் லேடி டுன்பாய் கவாஸ்ஜி ஜீஹாங்கீர் மண்டபத்திலே சில தினங்களுக்கு முன் நடந்த ஒரு வைபவத்தில் தென்னிந்தியச் சிறுமிகள் கும்மியடிக்கும் காட்சியை முன்னாள் இந்தியப் பிரதம சேனாதிபதி ஸ்ரீ கரியப்பா கண்டு களிக்கிறார்.

உங்களுக்கு
முற்றிலும் புது
மாதிரியான
இரு பவுடர்கள்







**ஸாண்டால்**
சந்தனத்துடன் கூடிய
பால்கம் பவுடர்...

**ஸாண்டல் வுட்**
**டாய்லட் பவுடர்**
சுத்தமான தனி சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது...

**டி.எஸ்.ஆர். & கோ**
கும்பகோணம்

A.K. GOPAL & CO

தேனும்பேட்டையில் நடைபெறும் காங்கிரஸ் பொருட்காட்சியில்
உள்ள எமது ஸ்பெஷல் ஸ்டாலுக்கு விஜயம் செய்யுங்கள்

பொருளாதாரமும் பொதுமக்களும் 9

# மின்சாரம்

க. சந்தானம்

இயற்கை சக்திகளில் முதன்முதலில் மனிதனுக்கு அடிமையாக்கப்பட்டது நீராவி. அதற்கு உஷ்ணத்தைக் கொடுப்பதற்கு நிலக்கரியே பெரும்பாலும் உபயோகிக்கப்பட்டது. பின்னர் மண்ணெண்ணெய் உபயோகத்துக்கு வந்தது. அதிலிருந்து சுத்தம் செய்யப்படும் பெட்ரோல் முதலிய எண்ணெய்கள் சிறிய யந்திரங்களைச் செலுத்துவதிலும், மோட்டார், ஆகாய விமானங்களை ஓட்டுவதிலும் சுலபமாகவும், சிக்கனமாகவும் இருக்கின்றன. கடைசியாக அடிமையானது மின்சார சக்தி. இப்பொழுது இதுவே மற்றச் சக்திகளைக் காட்டிலும் மேலாகக் கருதப்படுகிறது. நிலக்கரியைக் கொண்டு நீராவியாக்கி, நீராவியால் பெரிய யந்திரங்களைச் செலுத்தி மின்சாரம் உற்பத்தி செய்யலாம். மண்ணெண்ணெயை நிலக்கரிக்குப் பதிலாக உபயோகித்தும் மின்சாரத்தைப் பெறலாம். இயற்கையாக மலைகளிலிருந்து கீழே விழும் நீர்வீழ்ச்சி சக்தியையும் மின்சார சக்தியாக்கலாம். அணு சக்தி மூலம் மின்சார உற்பத்திக்குப் பல நாடுகளில் நிலையங்கள் அமைக்கப் பெற்று வருகின்றன.

ருஷியாவில் பொது உடைமைப் புரட்சியானவுடன் அதன் தலைவர் லெனின் மின்சார வளர்ச்சியே ருஷியப் பொருளாதார முன்னேற்றத்தில் முதல் ஸ்தானம் வகிக்குமென்று கூறினார். யந்திரங்களைச் செலுத்துவதற்கு மட்டுமன்றி, வீட்டில் விளக்கு, விசிறி, அடுப்பு, வெந்நீர், சீதோஷ்ணக் கட்டுப்பாடு முதலிய பணிகளுக்கும், கிணறுகளிலிருந்து தண்ணீர் தூக்குதல் போன்ற விவசாய வேலைகளுக்கும் மற்றும் கணக்கில்லாத காரியங்களுக்கும் மின்சாரம் உதவுவதால், ஒரு தேசத்தின் மின்சார உற்பத்தி அதன் பொருளாதார வளர்ச்சியின் முக்கிய அளவுகோலாகக் கருதப்படுகிறது.

மின்சார சக்தியின் அளவு கிலோவாட்: மின்சார உபயோகத்தின் அளவு கிலோவாட் மணி, அதாவது ஒரு கிலோவாட் சக்தி ஒரு மணி நேரம் செய்யும் வேலை. நமது வீடுகளில் 40 வாட் பல்பு 25 மணி நேரம் எரிந்தால் 1 கிலோவாட் மணி மின்சாரம் செலவாகும். தினம் 24 மணி வீதம் 365 நாட்களும் வேலை செய்தால் 1 கிலோவாட் சக்தியிலிருந்து 8760 கிலோவாட் மணி மின்சாரம் கிடைக்கும். ஆனால் அப்படி எந்த யந்திரமும் வேலை செய்ய முடியாது. ஒரு கிலோவாட் சக்தியிலிருந்து வருஷத்துக்கு 6500 கிலோவாட் மணி மின்சார வேலை கிடைத்தால் அது பூர்ண வேலை செய்ததாகக் கருதப்படும். உலகில் சில தேசங்களின் மொத்த மின்சார உற்பத்தி சக்தியும், அதில் நீர்வீழ்ச்சியிலிருந்து கிடைக்கும் சக்தியும் கீழே குறிப்பிடப்படுகின்றன.

## அவன் எங்கே!






(1954 புள்ளி விவரங்கள்)

| நாடு | மொத்த சக்தி 1000 கிலோவாட் | நீர்வீழ்ச்சி சக்தி 1000 கிலோவாட் |
|---|---|---|
| அமெரிக்க ஐக்கிய நாடு | 1,18,878 | 24,238 |
| பிரிட்டன் | 25,294 | 690 |
| பிரான்ஸ் | 15,736 | 7814 |
| மேற்கு ஜெர்மனி | 13,516 | 2456 |
| பெல்ஜியம் | 3,540 | |
| இத்தாலி | 11,795 | 9330 |
| நார்வே | 3,736 | 3594 |
| சுவிட்சர்லந்து | 3,590 | 3390 |
| ஜப்பான் | 13,015 | 8185 |
| பாரதம் | 3,221 | 796 |

முதல் ஐந்து வருஷத் திட்டத்தில் மின்சார உற்பத்திக்காகச் சர்க்கார் தரப்பில் 135 கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டு, 11 லக்ஷம் கிலோவாட் சக்தி அதிகரிக்கப்பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 427 கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டு மின்சார சக்தியில் 35 லக்ஷம் கிலோவாட் அதிகரிப்பதாகத் திட்டம் போடப்பட்டு, 1961 வருஷத்தில் மொத்தம் 69 லக்ஷம் கிலோவாட் சக்தி இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அப்பொழுதுகூட மின்சார உற்பத்தியில் பாரதம் மிகவும் பின்னணியில் இருக்குமென்று மேலே குறிப்பிட்டிருக்கும் புள்ளி விவரங்களிலிருந்து புலப்படும். நமது நாட்டில் ஒரு ஜில்லா அளவிருக்கும் சுவிட்ஸர்லாந்தில் இந்தியாவைக் காட்டிலும் அதிக மின்சார சக்தி உபயோகிக்கப்படுகிறது. இந்த நாட்டில் நீர் வீழ்ச்சியிலிருந்து மின்சாரம் எடுப்பதற்கு ஏராளமான வசதிகள் இருக்கின்றன. எனிலும் 350 லக்ஷம் கிலோவாட் சக்தி உற்பத்தி செய்ய முடியுமென்று மதிப்பிட்டிருக்கின்றனர். அதில் 40-ல் ஒரு பங்குதான் இப்பொழுது உற்பத்தியாகிறது.

மொத்த மின்சார சக்தி மிகவும் குறைவாக இருப்பதுமன்றி, அது ராஜ்யங்களில் சமமாகப் பரவியிருக்கவில்லை. சில ராஜ்யங்களில் மிகவும் குறைவாக இருக்கிறது. பின்கண்ட விவரங்களிலிருந்து இது விளங்கும்.

| ராஜ்யம் | வருஷத்தில் உபயோகிக்கப்படும் மின்சார சக்தி (கிலோவாட் மணிகள் லட்சம்) |
|---|---|
| ஆந்திரப் பிரதேசம் | 2840 |
| பம்பாய் | 24580 |
| மத்தியப் பிரதேசம் | 2972 |
| மதராஸ் | 10520 |
| மைசூர் | 7425 |
| ஒரிஸ்ஸா | 160 |
| பஞ்சாப் | 3670 |
| ராஜஸ்தானம் | 401 |
| உத்தரப் பிரதேசம் | 7749 |
| மேற்கு வங்காளம் | 17730 |
| ஜம்மு. காச்மீரம் | 226 |

மழையையும், பனி உருகுவதையும் அனுசரித்து நீர்வீழ்ச்சிகளின் வேகமும் சில மாதங்களில் அதிகமாகவும் மற்ற மாதங்களில் குறைந்து மிருக்கிறது. மின்சாரமோ எல்லா மாதங்களிலும் ஒரே அளவில் வேண்டும். இதற்காக நீர்வீழ்ச்சிகளுக்கு மேல் பெரும் அணைகள் போட்டுத் தண்ணீரைத் தேக்கி அதிலிருந்து வருஷம் முழுதும் வீழ்ச்சி வேகம் கட்டுப்படுத்தப்படுகிறது. ஆனாலும் மேட்டூர், பைகாரா முதலிய மின்சார நிலையங்களில் எக்காலத்திலும் குறையாமல் உற்பத்தி செய்வது சாத்தியமில்லாமலிருக்கிறது. அதை நம்பியிருக்கும் தொழிற்சாலைகளுக்கும், நகரங்களுக்கும் மின்சார விநியோகம் குறைவதால் கஷ்டமுண்டாகிறது. இதற்குப் பரிகாரமாக நீராவியால் மின்சார உற்பத்தி நிலையங்களைப் பக்கபலமாக ஏற்படுத்தி, தண்ணீர் குறைவான காலத்தில் அவற்றைக் கொண்டு மின்சார விநியோகத்தைக் குறையாமல் காப்பது புத்திசாலித்தனமாகும். தாமோதர் வாலித் திட்டத்தில் இப்படியே செய்யப்பட்டிருக்கிறது. தென்னிந்தியாவில் நிலக்கரி இல்லாததால் இதுகாறும் இவ்விதம் செய்ய முடியவில்லை. நெய்வேலியில் பழுப்புக்கரி கண்டுபிடிக்கப்பட்டதால் அதைக் கொண்டு மின்சார உற்பத்தி செய்து நிலைமையைச் சமாளிக்க முடிவு செய்யப்பட்டு வேலை நடந்து வருகிறது.

## பரவாயில்லை !



வேலையாள் : இதோ பாருங்கோ, இன்னிக்கு வெள்ளிக்கிழமை; எங்க முதலாளி யாருக்கும் எதுவும் கொடுக்க மாட்டார் !

வந்தவர் : கொடுக்காத போனால் போகட்டும், வாங்கிக் கொள்வார் இல்லையா? இந்தா! இந்த வக்கீல் நோட்டீஸைக்; கொண்டுபோய்க் கொடு! வாங்கின கடனை வருஷக்கணக்காகத் திருப்பிக் கொடுக்காமல் இருக்கார் மனுஷன் !

SEWING AND EMBROIDERY

# Exhibition

பரிசு போட்டிக்கான பூர்த்தி செய்யப்
பட்ட விண்ணப்ப பாரங்கள் எல்லாம்

## 1958

## பிப்ரவரி 15ந் தேதிக்குள்

வந்து சேர வேண்டும்

தையல் கலையையும், சித்திரத் தையல் கலையையும் இந்த நாட்டில் செழிக்கச் செய்வதற்காக நாடு முழுவதும் விரிவான ஒரு போட்டி ஏற்படுத்தியுள்ளோம். இதில் அனைவரும் கலந்து கொள்ளலாம். இதற்குப் பிரவேசக் கட்டணம் எதுவும் கிடையாது.

முழு விவரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள உஷா விற்பனையாளர்களிடமோ அல்லது ஜே இன்ஜினீயரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31 என்ற விலாசத்திற்கு எழுதியோ பெற்றுக் கொள்ளுங்கள்.

## ரூ. 7000/-க்கு மேல்

வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசு வழங்கப்படும்



ORGANISED BY THE
MANUFACTURERS OF

**USHA**

SEWING MACHINE

ஜே இன்ஜினீயரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா-31






# 2 வழிகளால் நரையை ஒழிக்கலாம்...

'சிரசாஸனம்' ஒழுங்காகச் செய்துவந்தால், நரைமயிர் நாளடைவில் கருப்பாக மாறும் எனச் சொல்லப் படுகிறது. ஆனால் அதைப் பழக, ஒய்வு நேரமும், மன நிம்மதியும் அவசியம்.

தற்காலத்தில் "லோமா"வைத் தவருமல் உபயோகிப்பதுவே, நரையை ஒழிக்க நிச்சயமானதும், பத்திரமானதும், சுலபமானதுமான வழியாகும்.



"லோமா" இப்பொழுது திருட இயலாத மூடியுள்ள பிரத்தியேகமாகத் தயாரித்த பாட்டிலில் வழங்கப்படுகிறது.







ஸோல் ஏஜெண்டுகள் : எம். எம். கம்பாட்வாலா, ஆமதாபாத்-1

ஏஜெண்டுகள் : வி. நரோட்டம் அண்ட் கோ., பம்பாய்-2 போன் : 30575

சென்னை ஏஜண்டுகள் : ஜே பாலபாய் அண்டு கம்பெனி 260. எஸ்பிளனேட், மதராஸ்-1

இலங்கை ஏஜண்டுகள் : சிர்குல் கதிர் & கோ., 41&43, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11




"இந்தாருங்கள்: ஊரிலிருந்து கடிதாசு வந்திருக்கிறது!" லலிதா ஒரே வழியாகக் குழைந்து போனாள், இதைச் சொல்வதற்குள்.

"யார் எழுதியது, அப்பாவா? அம்மாவா? படியேன்!" கார சோமாசை முழுசாக வாய்க்குள் திணித்துக் கொண்டு மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் திணறினான் சிவராமன்.

"ஊஹூம்" என்று மறுத்துக் கடிதத்தை அவன் மடியில் போட்டு விட்டு அறைக்குள் ஓடிவிட்டாள் லலிதா. கடிதத்தை எடுத்து ஒரு கண்ணோட்டம் விட்டான் சிவராமன். அதில் கண்டிருந்த விஷயம் அவனுக்குப் பெரிய அதிர்ச்சியைத் தந்தது என்றால் பொய்யே இல்லை. சில மாதங்களில் தான் அத்தையாகப் போவதைக் குறித்து மகிழ்ச்சி தெரிவித்துக் கிண்டலும் கேலியுமாக எழுதியிருந்தாள் அவனுடைய சகோதரி. அப்பா அம்மாவுக்கும் தெரியுமாம். வளைகாப்பு, சீமந்தம் எல்லாம் நடத்த நாள் பார்த்துக் கொண்டிருக்கிறார்களாம். பேஷ்! பேஷ்! ஊரெல்லாம் பரவியிருக்கும் விஷயம் அவன் வரை ரகசியமாகவே இருந்திருக்கிறது.

அவன் போட்டிருந்த திட்டம் என்ன? நடந்ததென்ன? எல்லாவற்றையும் தவிடு பொடியாக்க வேண்டுமென்பதே லலிதாவின் லட்சியம் போலும்!

இந்தக் குழந்தை பிறப்பதில் சிவராமனுக்குக் கொஞ்சமும் விருப்பமில்லை என்றால், அந்த எண்ணம் எப்பொழுதுக்கும் அல்ல; தற்சமயத்துக்குத்தான்.

அவன் எதையுமே திட்டமிட்டு வேலை செய்பவன். தன் திட்டத்தை நிறைவேற்றுவதில் எந்தவிதமான துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தாலும் பொருட்படுத்த மாட்டான். அவனும் அவளும் கல்லூரியில் நண்பர்களானார்கள், காதலித்தார்கள். பெரியவர்களும் அவர்களுடைய திருமணத்தை ஆதரித்தனர். 'சுபஸ்ய சீக்கிரம்' என்று அவசரப்பட்டார்கள். சிவராமன் மட்டும் தன் திட்டத்தைத் தளர்த்த மறுத்து விட்டான். உள்ளூர்ப் படிப்பு முடிந்து, அமெரிக்கா சென்று ஜனன விகிதக் கட்டுப்பாடு பற்றி ஆராய்ச்சி நடத்திப் பட்டம் பெற்றுத் திரும்பி வந்து வேலையில் அமர்ந்த பின்பும் கூட, திட்டத்தின் கடைசிப் பகுதி நிறைவேறாததால் திருமணத்தை ஒத்திப் போட்டுக் கொண்டுதான் இருந்தான். லலிதா கடிதத்துக்குக் கடிதம் உருகுவாள். பெரியவர்களும் ஆயிரம் விதமாகச் சொல்லிச் சலித்துப் போனார்கள். அவன் என்னவோ, தான் போட்ட திட்டப்படி லலிதாவை கெசடட் ஆபீஸரின் மனைவியாகத்தான் ஏற்றான். ஒரு என். ஜி. ஓ.வின் மனைவியாவதற்குத் தான் லலிதா பிறக்கவில்லை என்பது அவனது திடமான அபிப்பிராயம்.

சிவராமன் குடும்பம் நடத்தும் அழகே தனி. எல்லாமே முன்கூட்டித் திட்டமிடப்பட்டுக் கட்டுப்பாடுடன் நடக்கும் குடும்பம் அது. அவனுடைய எதிர்காலத் திட்டம் மிக அழகியது. அதிலும் அடுத்த ஐந்தாண்டுத் திட்டம் மிக மிக முக்கியமானது. முதலில் சென்னையில் ராஜா அண்ணாமலைபுரத்தில் சகல வசதிகளுடன் கூடிய அழகிய சின்னஞ்சிறு பங்களா ஒன்று வாங்க வேண்டும். அடுத்த அம்சம், அவன் வைத்திருக்கும் மோட்டார் சைக்கிளைத் தொலைத்துத் தலை முழுகி விட்டு — மாமனார் தலை தீபாவளிப் பரிசாகத் தந்தது அது. அதைக் கண்டாலே பற்றி வந்தது அவனுக்கு—ஒரு கார் நவீன மாதிரியில் வாங்கிவிட வேண்டும். அதற்குப் பின் லலிதாவுக்கு வளைகாப்பு வந்தால் தான் அவன் தன் திட்டப்படி, லலிதாவுக்கு ஒரு ஜோடி வைர வளையல் வாங்க முடியும்.

குழந்தைகள் விஷயத்திலும் அவன் திட்டம் இட்டிருந்தான். அவன் தாத்தா அடிக்கடி முனகும் பழம் பாடல் ஒன்றில் வருவது போல் 'புலபுல கலகலவெனப் புற்றீசல் போல்' குழந்தைகள் பிறப்பதை அவன் வெறுத்தான்; ஆஸ்திக்கு ஒரு பிள்ளை, ஆசைக்கு ஒரு பெண்; வகைக்கு ஒன்று. இதற்கு மேல் கூடாது. தன் அன்பை அதிகமாகப் பங்கு போட அவன் மனத்தில் தெம்பு இல்லை. இரு குழந்தைகளை முறைப்படி வளர்த்தாலே தன் சக்திக்கு அதிகம் என்று பட்டது அவனுக்கு. நாடு இருக்கும் நிலையில், பொறுப்பறிந்த அவன், ஜனன விகிதக் கட்டுப்பாடு பற்றி ஆராய்ச்சி செய்யும் நிலையத்தில் முக்கிய பதவி வகிப்பவனாயிற்றே? ஜனங்கள் பொறுப்பற்றதனமாகப் பிரஜாபிவிருத்தி செய்வதால் எவ்வளவு பொருளாதாரச் சிக்கல்கள் ஏற்படுகின்றன என்பதை அறியாதவனல்லவே?—சிறப்புடனேயே இருக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தான். இப்பொழுது எல்லாத் திட்டங்களும் தவிடுபொடி யாகிவிட்டன. இந்த மகராஜி லலியால் வந்த வினை!......

கடிதத்தைப் படித்து விட்டுக் கணவன் தன் பின்னாலேயே ஆசையுடன் ஓடிவருவான்...

அதற்கு மேல் நினைத்துப் பார்க்கக் கூட முடியாமல் வெட்கத்தால் தடுமாறிய லலிதா வெகு நேரமாகியும் கணவனின் காலடி ஓசை கேட்காமல் போகவே, ஏமாந்து போனாள். கடைசியில் அவளே மெள்ளச் சமாளித்துக்கொண்டு, கடிதமும் கையுமாக, உச்சி முகட்டை நோக்கி ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும் கணவனை நெருங்கினாள்.

"அடடா! குடும்பம் பெருகுகிறதே. செலவுகளை எப்படிச் சமாளிப்பது என்று துக்கசாகரத்தில் மூழ்கி விட்டீர்களா?" அவன் வாயைக் கிண்டுவதில் அவளுக்கு எப்பொழுதுமே தனி ஆனந்தம்தான்.

"ஆமாம். உட்காரு, லலி! உன்னுடன் கொஞ்சம் பேச வேண்டும்."

"உம் பேசுங்கள்!" கைகட்டி வாய் பொத்திப் பணிவான மாணவி போல் அடக்கமாக உட்கார்ந்தாள் லலிதா. அவளது முகத்தில் மட்டும் குறும்புச் சிரிப்பு உலவியது;

"விளையாட நேரமில்லை, லலி. நாம் மிகுந்த அக்கறையோடு பேசவேண்டிய விஷயம்!" என்றான் கடுமையாக.

"சரி பேசுங்கள், கேட்கிறேன்."

"லலி! நான் எவ்வளவு திட்டம் போட்டிருந்தேன். எல்லாம் குட்டிச்சுவர்!"

"ஏன்? இப்பொழுது எந்தக் குடி முழுகிப் போய் விட்டதாம்!"

"பின்னே என்ன? இப்பொழுது இந்தக் குழந்தை இல்லை என்று யார் அழுதார்கள்? இன்னும் ஐந்தாறு வருஷங்கள் கழித்துப் பிறக்கக் கூடாதோ? எல்லாம் உன் அஜாக்கிரதையால் வந்த வினைதான். நான் கொண்டு வரும் புஸ்தகங்களையும், குறிப்புகளையும் கவனமாகப் படிக்கும்படி முட்டிக் கொண்டேன். கேட்டால்தானே? படித்த பெண்ணாக இருந்து என்ன பலன்? சரி. தொலையட்டும். ஆரம்பத்திலேயே என்னிடம் சொல்லியிருக்கக் கூடாதா? ஏதாவது செய்திருக்கலாம்; ஊருக்கெல்லாம் தம்பட்டம் அடிக்க உனக்கு வெட்கமாக இருக்கவில்லையா?"

"ஐய! சமர்த்து வழிகிறது! உங்கள் பிரசங்கத்தைக் கேட்கத்தான் எனக்கு வெட்கமாயிருக்கு. உங்கள் புஸ்தகங்களும், ஆராய்ச்சிகளும் உங்கள் காரியாலயத்தோடு இருக்கட்டும். நம் வீட்டுக்கு அவை வேண்டவே வேண்டாம்."

தன் கருத்தை அவளுக்குப் புரிய வைக்கச் சிவராமன் முனைந்தான். எப்படிக் கூறினாலும் அவள் புரிந்து கொள்வதாக இல்லை. புத்திசாலியான லலிதா இந்த விஷயத்தில் மட்டும் ஏன் தான் இப்படி மக்காகி விட்டாளோ?

சிவராமனுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. கலகலவென்று அவள் சிரிப்பதும் தளர் நடை நடப்பதும், சோர்ந்து சோர்ந்து படுப்பதும், பெருமூச்சுவிடுவதும் அவனுக்கு வேண்டியே இருக்கவில்லை. அழகியான லலிதா அதிரூப சுந்தரியாகத்தான் விளங்கினாள். ஆனால் அதைக் கண்டு ரஸிக்க அவன் மனம் மறுத்தது. அவன் திட்டமிட்டிருந்தபடி, எல்லாம் நடந்திருந்தால் அவன் போக்கே முற்றிலும் மாறுபட்டுத்தான் இருக்கும். லலிதாவும் அவன் மனத்தைப் பாராட்டாமல் தன்னுடைய இன்பமே பெரிதெனக் கருதிப் பிறந்தகம் சீராடப் புறப்பட்டு விட்டாள்.

'சே. இந்தப் பெண்களே இப்படித்தான். கொஞ்சி விளையாட ஒரு குழந்தை பிறக்கப் போகிறது என்றாலே கொண்ட கணவனிடம் அலட்சியம்தான்! பிறந்து விட்டாலோ!... கேட்க வேண்டியதில்லை. லலியும் அந்த ஸ்திரீ ஜாதியில் பிறந்தவள்தானே?'



சீமந்தக் கல்யாணத்துக்கு முகூர்த்தம் பார்த்து அவன் அப்பா எழுதி விட்டார். லீவே இல்லை என்று எழுதிப் பார்த்தான் சிவராமன். அவனை யார் விட்டார்கள்?

ஓமப் புகையில் கண்களில் நீர் முட்டத் தவித்துக் கொண்டிருந்தான் சிவராமன். அருகே, பதினெட்டு முழப் பட்டுப் புடவையைச் சுற்றிக் கொண்டு, 'தஸ் புஸ்' என்று பெருமூச்சு விட்டுக்கொண்டு அடக்கமே உருவாக அமர்ந்திருந்தாள் லலிதா. தவறு, கணவனின் கொள்கைகளை நாசமாக்கிவிட்ட கர்வமே உருவாக என்றுதான் சிவராமன் கருதினான். அமர்ந்திருந்த லலிதைத் திரும்பிப் பார்க்கக்கூட அவனுக்குப் பிடிக்கவில்லை.

"சற்று நகர்ந்து விசாலமாக உட்காரேன். கால் மரத்துக் கொள்ளப் போகிறது."

"கொஞ்சம் காப்பி வேணுமானால் கலந்து கொண்டு வரட்டுமா?"

"சீக்கிரம் ஆகட்டும் சாஸ்திரிகளே. குழந்தை உட்காருவதற்கு மிகவும் கஷ்டப்படுகிறாள்!"

ஆளுக்கு ஒரு விதமாக அருமை விட்டார்கள். அத்தனையும் வேண்டி விருந்ததே இந்தத் தேகத்துக்கு! வெட்கம் கெட்ட ஜன்மம்...என்னவோ, மகாராணி மாதிரி தான்...அத்தனை உபசாரத்துக்கும் தகுந்தவள் என்ற மிதப்பில் அல்லவா இருந்தாள்!




"பூரணம் மிஞ்சினால் பெண் பிறக்கும்; மாவு மிஞ்சினால் பிள்ளை பிறக்கும் என்று சொல்லுவார்கள்!" — உள்ளே சமையலில் ஈடுபட்டிருந்த சமையல்கார அம்மாளின் அதிகப்பிரசங்கித்தனம் இது.

"அப்பொழுது நம் சிவராமனுக்குப் பெண்தான் பிறக்கப் போகிறது. பூரணம் மிஞ்சிப் போய் விட்டது." அவன் மாமியின் குரலைத் தொடர்ந்து ஒரே சிரிப்பு; கைதட்டல்.

"இல்லை, மாமி! வெறும் பூரணம் தின்ன வேணும் என்பதற்காக மிச்சப்படுத்தி வைத்திருக்கிறார் அத்தை. மாவு, பூரணம் இரண்டும் சரியாகப் போய் விட்டது!..."

"அப்படியானால் எங்கள் லலிக்குப் பிள்ளை ஒன்றும் பெண் ஒன்றும் இரட்டையாகப் பிறக்குமா?" லலிதாவின் மன்னியின் பேச்சில் என்னதான் அதிசயத்தைக் கண்டு விட்டார்களோ, சமையல் கட்டே அதிர்ந்தது சிரிப்பொலியால்!

"பிள்ளையோ, பெண்ணோ பெற்றுப் பிழைத்து ஆயுசோடு இருந்தால், அதுவே போதும்" என்றாள் பாட்டி.

"அப்படியா பாட்டி? ஆயிரம் சொன்னாலும் பெண் என்றால் ஒரு படி இறக்கம்தான்; 'பெண்ணா?' என்று ஒரு முழம் நீட்டிவிட்டுத்தான் அப்புறம் ஆயிரம் சமாதானம் கிளம்புகிறது." - அடுக்காக ஆறு பெண்களைப்பெற்று விட்ட அத்தங்காள் அலமுவின் பிரலாபம் ஈன சுரத்தில் எழுந்தது.

"அதெல்லாம் இல்லை. 'சமர்த்தி என்ன பெற்றாள்? தலைச்சன் பெண்ணைப் பெற்றாள்' என்றுதான் வசனம். நம்ப லலி ரொம்பச் சமர்த்து. அவளுக்குப் பெண்தான் பிறக்கும்; அதற்கு மாலையிடத்தான் எங்க ராஜாப் பயல் காத்துக் கொண்டிருக்கிறானே!" என்று வாழைப் பழத்தை விழுங்குவதற்கு முயற்சி செய்து கொண்டிருந்த தன் மூன்று வயது ராஜாப் பயலை இழுத்து முத்தமிட்டுக் கொண்டாள் சிவராமனின் அக்கா.

"மூக்குப் பிழியப் போகிறார்கள்; வாங்கோடி பெண்களா, கூடத்துக்கு? இங்கே என்ன அரட்டை!" என்று பாட்டி அதட்டியதும் பெண்கள் கூட்டம் 'திபு திபு'வென்று கூடத்தில் வழிந்தது.

பட்டுத்துண்டு ஒன்றில் ஏதேதோ நாலைந்து பொருள்களை வைத்து நசுக்கி லலியின் மூக்கில் பிழியச் சொன்னார் சாஸ்திரிகள். சிவராமன் யந்திரமாக இயங்கினான். மூக்கை நிமிர்த்திப் பிழியும் போதுதான் லலியின் கண்களும், அவன் பார்வையும் நேருக்கு நேராகச் சந்தித்தன. அந்தப் பார்வையில்தான் அவன் எவ்வளவு விஷயங்களை வெளியிட்டான்! அதை அவளும் உணராமல் இல்லை. ஆயினும் தன் திட்டம் கவிழ்ந்து விட்டதினால் ஏற்பட்ட தாபத்தில் அவளுடன் அவன் முகம் கொடுத்துப் பேச விரும்பவில்லை.

அன்று மாலையே அவன் ஊருக்குப் புறப்பட்டுவிட்டான். அகலமா

கச் சரிகைக் கரையிட்ட கருப்புப் புடவை கட்டி, வெண்ணிற வெல்வெட் சோளி அணிந்து, கை குலுங்க வளையும், வாய்நிறைய வெற்றிலையுமாக, மடி பிதுங்கும் தாய்மையுடன் அலங்கார மண்டபத்தின் நடுவே, ராணிபோல் அவள் கொலுவீற்றிருந்த காட்சி அவன் மனத்தை விட்டு அகலவே இல்லை.

ஊர் வந்து சேர்ந்த மறுநாளே, கோவையில் ஒரு புது ஆராய்ச்சி நிலையம் திறப்பது சம்பந்தமாகக் கவனிக்கச் செல்லும்படி உத்தரவு வந்துவிட்டது.

நிலைய அதிகாரி மிஸ்டர் ராவ் தங்கமான மனிதர். வயசானவரா யிருந்தபோதிலும் இளைஞர்களுக்குரிய உற்சாகமும் உயிர்த்துடிப்பும் நிறைந்து விளங்கும் அவருடன் பழகுவதே இன்பமாக இருந்தது. முதல் நாள் அவர் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். திகைத்து விட்டான் சிவராமன். 'என்ன சிவராம் யோசனை? குடும்பக்கட்டுப்பாடு அதிகாரிக்கு இத்தனை சந்தானபாக்கியமா என்று மலைக்கிறாயோ? அது ஆபீஸ். இது வாழ்க்கையப்பா' என்று மனம் விட்டுச் சிரித்தார் மிஸ்டர் ராவ்.



''வெட்கப் படாதே அப்பா, நீ என் சின்னப் பிள்ளை மணி மாதிரி எனக்கு. அவனும் உன் போலவேதான் சங்கோசப்பிராணி'' என்று அவனை உபசரித்தாள் ஸ்ரீமதி ராவ். ஒன்பது பிள்ளைகளுக்கும், நாலு பெண்களுக்கும் பகிர்ந்து அளித்த பின்பும் தாயன்பு வற்றாது பெருகும் அமுதசுரபியாக இருந்தது அவளது இதயம்.

நாலு குழந்தைகள் பிறந்தாலே வீடு நரகமாகிவிடும் என்று நினைக்கும் சிவராமனுக்குச் சிரிப்பும், சந்தோஷமுமாக விளங்கும் மிஸ்டர் ராவின் இல்லம் அதிசயப் பொருளாகவே இருந்தது. மிஸ்டர் ராவின் பேரன் பேத்திகளும், கடைக்குட்டிகளும் சிவராமனிடம் ஒட்டிக்கொண்டு விட்டனர். குழந்தைகள் இவ்வளவு மகிழ்ச்சி தரவல்லவர்களா? அவன் உடம்பில் புதுபலமே ஊறுவது போலிருந்தது.

ஆமாம். மிஸ்டர் ராவின் குழந்தைகள் தம்மை அறியாமலே ஏதோ மாயம் செய்து அவன் மனத்தை மாற்றிவிட்டனர். லலிதாவினால் கூடச் சாதிக்க முடியாத செயல் அது: குழந்தையுடன் வரப்போகும் லலிதாவுக்காக அவன் ஏங்கினான்! உருகினான்.

''சிவராம்! உனக்குத் தந்தி வந்திருக்கிறது, அப்பா!'' என்றார் மிஸ்டர் ராவ்.

''லலிக்கு அபாயம்: உடனே வரவும்.'' சிவராமனின் கண்கள் கலங்கிவிட்டன.

''சே, சே, என்ன சிவராம் இது? நீ இளைஞன். இப்படிக் கலங்கலாமா? தைரியமாக இரு. எல்லாம் சரியாக நடக்கும். நம் கையில் ஒன்றுமே இல்லை. ஆண்டவன் திட்டப்படித்தான் எல்லாம் நடக்கும். அவரை நம்பு.'' பலவிதமாகத் தேற்றி அவனை ஊருக்கு அனுப்பி வைத்தார் மிஸ்டர் ராவ்:

எக்ஸ்பிரஸ் ரயில் ஊர்வதாகத்தான் தோன்றியது சிவராமனுக்கு. ஏதோ ஒரு ஜங்ஷனில் வண்டி நின்றது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். சிட்டுக் சிறிகமாக ஆறு பாலகர்களைக் கட்டி மேய்த்து வந்துகொண்டிருந்தார் ஒரு மனிதர். நடுத்தரக் குடும்பத்துக்கே உள்ள ஏழைமையின் சின்னங்களுடன். இரு கைகளிலும் பசுங் குழவியை ஏந்திக் கொண்டு அவர் பின்னாலேயே வந்த மாது அவர் மனைவி போலிருக்கிறது. அவளிடமிருந்து குழந்தையைத் தாம் வாங்கிக் கொண்டு அவளை முதலில் ரயிலில் ஏற்றிவிட்டு அவள் கையில் குழந்தையைக் கொடுத்தார். குழந்தையை வாங்கி, அதன் கன்னத்தில் ஒரு முத்தமிட்டு மார்புடன் அணைத்துக் கொண்ட அப் பெண்மணியின் முகத்தில்தான் எத்தனை பெருமை!

சிவராமன் தலையைப் பிய்த்துக் கொண்டு படுக்கையில் விழுந்தான். மெத்தென்றிருந்த ஆசனம் முள்ளாக உறுத்தியது. 'சே, அவன் மனுஷனாகப் பிறக்கவே தகுதியற்றவன். யாருமே குழந்தைகளை வெறுப்பதில்லை. மிருகங்கள், செடிகள் கூட இன அபிவிருத்தி குறித்து மகிழ்கின்றன; கவலையாகக் கருதுவதில்லை. அவன் புத்தி மட்டும் ஏன் விபரீதமாகிவிட்டது? அவனுடைய முட்டாள்தனத்தால்தான். அதையே நினைத்து நினைத்து வருந்தியதால்தான் லலியின் உடல் நிலை மோசமாகி விட்டதோ?......சிசுஹத்தி, ஸ்திரீஹத்தி எல்லாப் பாவமும் அவனைச் சேரப் போகின்றன... ஆட கடவுளே. லலியைக் காப்பாற்று. அவள் நல்லபடியாகப் பெற்றுப் பிழைக்க வேண்டும். ஒரு சேதமுமில்லாமல் அவளைக் குழந்தையும் கையுமாக என்னிடம் சேர்த்து விடு......' திட்டமிட்டு வேலை செய்வதாலேயே எதையும் சாதித்துவிடப் பார்க்கும் சிவராமனின் மனம், தன்னையறியாமல், தனக்குமீறிய சக்தி ஒன்றிடம் சரணடைந்தது.

''லலிக்கு எப்படி இருக்கிறது கோபு?''

'காலையிலேயே நினைவு வந்து விட்டது. அத்திம்பேரே! ஆளுக் ரொம்பக் களைப்பாக இருக்கிறாள். மூன்றுநாள் ராத்திரி உடல் நிலை ரொம்பக் கெட்டுவிட்டது. எல்லோரும் அழுதே விட்டோம். டாக்டரே உங்களுக்குத் தந்தி கொடுக்கச் சொல்லிவிட்டார்.''

''குழந்தை?''

''ஹும்? லலியை உருட்ட வந்த எமன், தானே உருண்டு போய்விட்டது. 'ரொம்பச் சிக்கலான கேஸ். ஆபரேஷன் செய்ய வேண்டும். ஆனால் இனி குழந்தையே பிறக்காது'' என்றார் டாக்டர். 'எது எப்படிப் போனாலும் லலி பிழைத்தால் சரி' என்று சொல்லிவிட்டார் அப்பா!'' என்று முடித்தான் கோபு.

நாள் முழுவதும்

# புத்துணர்ச்சியுடன்

இருக்க

வசீகரமான மணம், மிகவும் மென்மையான டால்க், சருமங்களில் கறைகளையும், வியர்வை நாற்றத்தையும் உண்டாக்கும் கிருமிகளை நாசம் செய்யும், மற்ற டாய்லெட் பவுடர்களிலில்லாத உலகப் பிரசித்திபெற்ற ஜி-11★ உள்ளது... இருந்தபோதிலும் கோத்ரெஜ் டாய்லெட் பவுடர் விலை அதிகமில்லை.

ஸ்நானம் செய்த பின்னரோ அல்லது க்ஷவரம் செய்து கொண்ட பின்னரோ, இந்த புதுமாதிரியான பவுடரைத் தூவிக்கொண்டு மனோ தைரியத்துடன், எங்கு சென்றாலும் யாவரும் விரும்பும் வண்ணம் செல்லுங்கள்.

வேர்க்கூரு போன்ற சரும உபாதைகளுக்கு துரிதமாக நிரந்தர நிவாரணமளிக்கிறது— குழந்தைகளுக்கு ஓர் வரப்பிரசாதம்.

ஆடைகளின்மேல் தூவுவதால் புண்ணாவதைத் தடுக்கிறது.

**கோத்ரெஜ் டாய்லெட் பவுடர்**

துர்நாற்றத்தைப் போக்கவல்லது • பாதுகாப்பு அளிப்பது • நறுமணம் உள்ளது. மென்மையானது.



பூரண பாதுகாப்புக்கு சிந்தாலினால் ஸ்நானம் செய்தபிறகு உபயோகியுங்கள்.

(★ பேடன்ட் ஹெக்ஸா-க்ளோரோபின் யு.எஸ்.பி.)



**கோத்ரெஜ்** மிகச் சிறந்த சோப்புகளையும் மற்ற அழகு சாதனங்களையும் தயாரிக்கிறார்கள்.

# நாட்டு வைத்தியம்

- ஸ்ரீஹரி -

## 46. உதிரி வாதங்கள்

“உதிரிப்பிட்டை” மட்டும் கூலியாகக் கொடுத்தால் போதும் அம்மா. உங்களுக்காக நான் மண் சுமந்து வெள்ளத்தின் குறுக்கே அணையைக் கட்டித் தருகிறேன்'' என்றான் பிரசித்தி பெற்ற பிச்சையெடுத்துப் பிழைக்கும் பிக்ஷாண்டவன் மதுரை வாணிச்சியம்மையிடம்.

முழுசாக ஒரு பிட்டுக்கூட அன்று விற்கவில்லை. சொல்லத்தக்கக் காரணமின்றியே முழுப் பிட்டெல்லாம் தாமாகவே சிறிது சிறிதாக உதிர்ந்து கொண்டே இருந்தன.

அன்பைப் பிச்சை கேட்க வரும் அரவாபரணன் உதிரிப் பிட்டை வாங்கி வாங்கித் தின்றான். பிட்டுகள் உதிர உதிர வாணிச்சியம்மையின் வினைகளும் உதிர்ந்து [தீர்ந்து] வந்தன.

முடிவில்......?

முடிவில்! வாணிச்சியம்மையின் பிறவி வெள்ளப் போக்கைத் தடுக்கும் அணையையே கட்டி விட்டான் பிரபு!

சுந்தரேசப் பெருமானின் திருவிளையாடல்களை அறிந்தவருக்கு இது தெரிந்த புராணந்தான்.

உதிரி வாதங்கள் என்றதும் உதிரிப் பிட்டின் விஷயம் நினைவுக்கு வந்தது.

ரத்தவாதம், ஆமவாதம், இருத்ரஸி என்னும் வௌவால் வாதம் ஆகியவற்றைத் தவிர உதிரிப் பிட்டைப் போன்ற சில வாதங்களும் இருக்கின்றன. இக் கட்டுரையில் அவற்றைக் கவனிக்கலாம்.

**முகவாதம்**: உதிரி வாதங்களில் ஒன்றான முகவாதம் (அர்த்திதம்) என்பது ஏற்கெனவே ஓரளவு சுருக்கிச் சொல்லப் பட்டது.

முகத்தில் ஒரு பக்கம் சரிந்திருக்கும். சிரித்தால் வாய் ஒரு புறம் கோணலாகத் திறக்கும். உதடுகளைக் குவித்து ஊதிச் சத்தம் பிறப்பிக்க முடியாது. கண்களில் ஒரு கண் மூட முடியாமலும் சதா ஓரளவு நீர் வடிந்துகொண்டும் இருக்கும். நாவைப் புரட்டிக் கொச்சையில்லாமல் பேச இயலாது. வாயிலிட்டு மெல்லும் பொருள்கள் ஓரளவு ஒரு பக்கம் கடைவாய் வழியாகக் கீழே ஒழுகி விடும். எச்சிலைக் கூட்டிச் சரிவர விழுங்கச் சாத்தியமாகாது. ருசியை நன்றாய் அறிய முடியாது. ஓரளவு வாசனையையும் அறிய இயலாது. இவைதான் இதில் ஏற்படும் லக்ஷணங்கள்.

க்ஷீரபலா [சிற்றாமுட்டித்] தைலத்தைத் தலைக்குத் தேய்த்து ஊற விடுவது. அத் தைலத்திலேயே நனைத்த சீலையைத் தலையில் பிசுவாக இட்டு வைப்பது ஆகியவை இந்நோயில் மிகவும் நல்ல பலனை யளிக்கின்றன. மடக்குச் சிற்றாமுட்டி தைலமானால் மிகவும் நல்ல பலனை வெகு சீக்கிரத்தில் அளிக்கும்.

கால் மணி முதல் ஒரு மணி வரையில் இவ்வாறு இட்ட தைலம் ஊறின பிறகு-பிசுவை எடுத்து விட்டு உபரித் தைலத்தைக் கந்தைத் துணியால் துவட்டிச் சுத்தமாக்கவும். ஆனால் தலைக்கு ஜலம் விட்டுக் குளிக்கக் கூடாது.

இதைத் தொடர்ந்து அணுதைலம் அல்லது 101 தரம் மடக்கிக் காய்ச்சிய சிற்றாமுட்டித் தைலம் என்பதில் சில துளிகளைச் சிறிது சூடாக்கி மூக்கில் உறிஞ்சுதல் [நஸ்யம்] அவசியம். இதைத் தொடர்ந்து ஓரிரு தும்மல், இருமல் இவை உண்டாகிச் சிறிது சளியும் போகும். காரிக் காரித் துப்பவும் நேரும்.

கழுத்து வரையில் குளிப்பதும், குடிப்பதும் வெந்நீராக இருக்க வேண்டும். ஆகாராதிகள் இனிப்புச் சுவையும் நெய்ப்பும் உள்ளதாகச் சூடுள்ளபோது உண்பது அவசியம்.

முன் சொன்ன ராஸ்னாதி கஷாயத்தை உள்ளுக்குக் கொடுக்கலாம். வயதுக்குத் தக்கபடி அரை அவுன்ஸ் முதல் இரண்டு அவுன்ஸ் வரையில் தினம் இரண்டு வேளை கொடுக்கலாம்.

**மாப்பிள்ளை வாதம்**: [மன்யாஸ்தம்பம்] கழுத்தை இந்தப் பக்கம் அந்தப் பக்கம் திருப்ப வராது. அண்ணாந்து பார்க்கவும் முடியாது. பக்கத்தில் உள்ளவரைப் பார்க்கும் இனுசும், நிமிர்ந்து நிற்பதும் நடப்பதும் ஜானுவாஸத்தில் இருக்கும் புது மாப்பிள்ளையைப் போல்தான்.

முகவாதத்தில் சொன்னது போன்ற பிசுவைத் தலைக்கு இடுவதும் பிறகு ஆமவாதத்தில் சொன்னது போன்ற தாபஸ்வேதத்தைக் கழுத்துக்குச் செய்வதும் நல்லது. நஸ்யமும் செய்து நாலு தும்மல் வெளியாகுமானால் கழுத்துப் பிடிப்பு தளரும்.

அபபாஹுகம் என்பது மற்றொரு உதிரிவாதம். இதில் ஒரு தோள் பட்டையின் வெளிப்புற நுனியில் குறிப்பிட்ட ஓரிடத்தில் சிறிது வலியுண்டாகும். முதலில் கையை அசைத்தால் மட்டும் இருக்கும் இந்த நோவு வரவரச் சும்மாவிருக்கும் போதும் ஏற்படும். மற்றொரு கையால் சதா இந்தத் தோளை அமுக்கிக் கொண்டே இருப்பர். காலக்கிரமத்தில் இந்த வலி அதிகமாகித் தோள் முழுவ

ளும் [முன் பக்கம் பின் பக்கம் பூராவும்] பரவி, கீழே படிப்படியாக முட்டிக் கை, மணிக்கட்டு விரல்கள் நுனி வரையில் வியாபிக்கும். கையை உயரத்தூக்குவது, சுழற்றுவது, முதுகுப் புறம் மடக்குவது முதலியவை சிறிது சிறிதாகக் குறைந்து கொண்டே வரும். காலக்கிரமத்தில் தோள் பட்டை ஓரளவு மெலிவு பெற்று, பூட்டு தளர்ந்து நெகிழ்ந்து விட்டது போலவும் தோன்றும்.

இது மிகவும் கடுமையான வாத ரோகம். ஆரம்பத்திலேயே தக்க சிகிச்சை செய்யாவிட்டால் நிரந்தரமான அங்கஹீனமே ஏற்பட்டு விடும்.

முன்சொன்ன விதம் தலைக்குப் பிசு விட்டுத் துடைத்த பின்னர், தோள் பட்டைக்கு சவிஸாரம், ஆமவாதாந்தகம் போன்ற தைலங்களைத் தடவி தாபஸ் வேதஞ் செய்து பிறகு நஸ்யமும் செய்ய வேணும்.

இந்நோயில் தசைகள் மெலிந்துபோய் இருக்குமானால் மாஷ தைலத்தில் சிறிது இந்துப்புவையும் கலக்கி மேலுக்குப் பூசி ஊற விட்டுப் பிறகு எண்ணெய்க் குளி போல் [கழுத்து வரையில்] வெந்நீரில் குளித்தல் ஆகிய நல்லவை.

கடீகிரஹம் — ஊருஸ்தம்பம் என்று இரண்டு வகை உதிரி வாதங்கள் உண்டு.

''இடுப்பைப் பிடித்துக் கொண்டு விட்டது. இப்படி அப்படித் திரும்பச் சாத்தியமில்லை. படுக்கையில் ஒரு விதத்திலும் படுக்க முடியவில்லை. இப்படி அப்படி துளி அசைந்தால் ஒரு மின்னல் மின்னியது போல...'' என்று சொல்லிக் கொண்டே தம் கையால் இடுப்புக்கு முட்டுக் கொடுத்தபடி நிற்பார் கடீகிரஹம் என்ற உதிரிவாத ரோகம் உள்ளவர்.

இவ்வித இடுப்புப் பிடிப்பு அடிக்கடி ஏற்படும் இயல்பும் சிலருக்கு இருக்கும்.

ஹிங்குதிரிகுணம்—அல்லது தாத்ரீ தைலத்தில்-அல்லது தனித்த ஆமணக்கெண்ணெயையாவது அரை-1 அவுன்ஸ் எடுத்து 1-2 அவுன்ஸ் கருநொச்சி இலையின் சாற்றில் கலந்து காலையில் குடித்து நான்கைந்து தரம் பேதியானால் இந்நோய் உடனே குறையும்.

அவசியமானால் மூன்று நான்கு தினங்கள் கழித்து மறுபடியும் ஒரு தரம் இதையே உபயோகிக்கவும். இங்கு, கருநொச்சியின் இலைச்சாற்றில் 'அயோடின்' என்று மேல் நாட்டு வைத்தியத்தில் சொல்லும் மருந்து இருப்பதாகச் சொல்லப் பட்டிருப்பதும் கவனத்துக்குரியது.

ஊரு என்றால் துடை. நடத்தல், நிற்றல், இருத்தல், கிடத்தல் என்னும் சேஷ்டைகளில் இடுப்பு துடைகள் ஒன்றி



''என் மனைவி வீட்டிலிருந்து கோபமாகப் பேசுகிறாள்!''

இயங்கிடல் வேண்டுமல்லவா? இடுப்புக்கும் துடைகளுக்குமுள்ள பூட்டில் ஏற்படும் இந்த உதிரி வாதத்தினால் இவ்வித இயக்கம் பாதிக்கப் படுகிறது. மேற்சொன்ன சேஷ்டைகள் சாத்தியப் படா. இதற்குச் செய்ய வேண்டியது வஸ்தி என்னும் சிகிச்சை. இது அனுபவம் மிக்க வைத்தியர் உதவியின்றிச் செய்ய முடியாது.

பாரிசவாயு என்று ஒன்று உண்டே ஸார் என்கிறீர்களா? அது உதிரி வாதத்தில் சேராது. அதற்குச் சிகிச்சை செய்ய வைத்தியரின் உதவி வேண்டுமாதலால் இங்கு விட்டுவிட வேண்டியதுதான்.

பாரிசவாயுவுக்குச் சிகிச்சையே கிடையாது. ஒரு சிலருக்குத் தானாகவே இது குணமாகி விடுவதும் உண்டு. நான் சிகிச்சை செய்தேன் என்று சிலர் வீண்டம்பம் அடிப்பது தகாது என்றெல்லாம் சிலர் சொல்லவும் கேட்டிருக்கிறேன்.

எந்த ரோகமும் சரி, சிகிச்சை யில்லாமலே குணமாகலாம். முதல்தர சிகிச்சை செய்தும் கடும் பத்தியங்கள் இருந்தும் சில வியாதிகள் குணமாகாமல் நோயாளி இறந்தும் போகலாம். தரமான அல்லது அல்பமான சிகிச்சையினால் குணமும் ஆகலாம்.

'பாரிசவாயு குணமாவதானால் தானே குணமாகும்; சிகிச்சை ஒன்றும் தேவையில்லை. குணமாகாததானால் என்ன செய்தாலும் குணமாகாது' என்று சொல்லி, சிகிச்சை செய்வதே வீண் என்று யாராவது சும்மா இருக்க முடியுமா? சிகிச்சை செய்து பார்க்கத்தானே தோன்றும்?




# தை பிறந்தால் வழி பிறக்கும்

•காந்தன்•

**உ**ண்மை தான். ஆனால் என்னத்துக் கெல்லாமோ வழி பிறக்கிறதேயொழிய இந்தத் தமிழ்ப் படங்களுக்கு ! ஒரு வழி பிறக்கவே மாட்டே னென்கிறதே !

''காலம் மாறிப்போச்சு'' என்னும் படத்தின் சாயை யில் பிறந்ததுதான் ''தை பிறந்தால் வழி பிறக்கும்.''

படத்தின் ஆரம்பத்தில் ''தை பிறந்தால் வழி பிறக் கும் தங்கமே தங்கம்-தங்கச் செம்பா நெல் விளையும் தங்கமே தங்கம்'' என்ற கோஷ்டி கானத்துடன் கிரா மத்து மக்கள் ஆண்களும் பெண்களுமாகக் களி நடம் புரிகின்றனர். ஆனால், பிற்பகுதியில் இந்தக் கோலாகலம் தொடர்பு கொள்ளவேயில்லை. முதலில் பொங்கல் காட்சிகளைப் பார்த்ததும், பொங்கல் நன்னாளையும் விவசாயத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஏதோ புது மாதிரிக் கதையென்று எண்ணினேன். படத் தின் தலைப்புக்காக மேற்படி காட்சிகளைத் தயாரித்திருக்கிறார்கள் என்று எனக்குப் பிறகு தான் தெரிய வந்தது.

மூக்கும் விழியுமாக நன்றாயிருக்கும் தமிழ் நடிகர் எஸ். எஸ். ராஜேந்திரன் இப்படத் தில் முக்கிய பாத்திரம். உரைநடையை உணர்ச்சியோடு வழங்குவார். அவர் ''குல தெய்வம்'' படத்தில் ஒரு உப பாத்திரமாக வந்து நடித்து, ''கடிகார முள்ளின் நடை போல'' என்ற பாட்டின் மூலம் பட ரஸிகர் களின் உள்ளங்களில் என்றும் பசுமையாக இருப்பவர். பிறகு, ''முதலாளி'' படத்தில் கதாநாயகனாகத் தோன்றி நன்றாய் நடித்தார்.

விவசாயி ரங்கனுக்கு அவன் தங்கை மருதி தான் சொத்து. சுகம் எல்லாமாயிருப்பவள். மருதிக்கு மணம் நிச்சயமாகி முகூர்த்தம் நடந்து கொண்டிருக்கும்போது பண்ணையா ரின்கொடுமையினால், தடைப்பட்டு விடுகிறது. மருதியின் அண்ணன் ரங்கன் சிறைபுக நேரிடு கிறது. மருதி அநாதையாகி விடுகிறாள்.

ஏழை விவசாயி ரங்கனாக ராஜேந்திரன் தோன்றி நன்றாய் நடிக்கிறார். தங்கையின் விவாகத்துக்குத் தடை ஏற்பட்டதும் அவர் ரௌத்திராகாரமாக மாறி எதிரியை அடித்து நொறுக்கும் போதும்' சிறையில் வாடும் போதும் பிரமாதமாய் நடிக்கிறார். சிறையிலிருந்து திரும்பியதும், தன் தங்கை மருதி பண்ணையார் மகனை மணந்து கொண்டுவிட்டாள் என்று அறிந்து இதயம் துடித்த போது ராஜேந்திரனின் நடிப்பு மிகவும் சோபித்திருக்கிறது.

''மக்களைப் பெற்ற மகராசி'' யில் நன்குநடித்து நல்லபெயருடன் விளங்கும் வி. கே. ராமசாமி தம் இயற்கையான நடிப்புத் திறமையி னால் பல படங்களில் புகழ்பெற்ற வர். இப்படத்தில் அவர் பண்ணை யாராக வந்து படத்தின் நல்ல அம்சங்களுக்கு உறைவிடமாக விளங்குகிறார். பேச்சு, நடை, உடை, பாவனை யாவும் அவர் ஏற்றிருக்கும் பாத்திரத்துக்கு மிக வும் பொருத்தமாயிருக்கின்றன.

பண்ணையார் மகன் டாக்டர் வரதனாக நடிப்பவர் மிகவும் அதிர்ஷ்டக்காரர். மாமன் மகள் வக்கீல் சாரதாவின் காதலை உதறித் தள்ளவும், ஏழைப் பெண் மருதியைத் துணிந்து காதலிக்க வும் நேரும் கட்டங்களில்கூட அவருக்கு அதிக வேலையில்லை! இது எப்படி என்று கேட்பவர் களுக்கு, வக்கீல் சாரதாவாக நடிப்பவர் எம். என். ராஜம் என்பதும், மருதியாக வருபவர் ராஜசுலோசனா என்பதும் தெரியவருமானால், அவர்கள் ஆச்சரியப்பட மாட்டார்கள்.

தான ஊரில் இல்லாத சமயத்தில் மருதி யின் நடத்தைக்கு மாசு கற்பிக்கப்பட்டு, தன் பெற்றோர்களால் அவள் வெளியேற்றப்பட்ட விவரம் அறிந்த வரதன் மனம் முறிந்து போகிறான்; அந்தச் சமயத்தில் வக்கீல் சாரதா வரதனிடம் வந்து கொஞ்சுமொழி பேசி, மிஞ்சிவரும் தன் காதல் உள்ளத்தைத் திறந்து காட்டுகிறாள்.

கையைக் கட்டிக் கொண்டு ஒன்றும் தோன்றாமல் நிற்கும் டாக்டர் வரதனைக் காதலிக்கும் கட்டத்தில், படவுலகில் அத் துறையில் நன்கு அநுபவம் பெற்ற எம். என். ராஜம் தம் சாகஸமான நடிப்பினால், டாக்டர் வரதனை மட்டுமல்ல, எல்லோரையுமே திணற அடித்து விடுகிறார்.

அதே மாதிரி ராஜசுலோசனாவும் மிகவும் கவர்ச்சிகரமாகத் தோன்றி, வெண்மதி விரித்த தண்ணிலவில் எழில் நடனம் புரிந்து, டாக்டர் வரதனையும், படம் பார்ப்பவர்களையும் பரவசப்படுத்தி விடுகிறார். மேற்கூறிய இரண்டு கட்டங்களிலுமே நாம் டாக்டர் வரதனை அடியோடு மறந்துவிடுகிறோம்.

வக்கீல் சாரதாவின் தூண்டுதலால் டாக்டர் வரதனைக் கொல்ல மாறு வேஷத்தில் வந்த ரங்கனுக்கு எதிரில் அவருக்குப் பேச நா எழ வில்லையாதலாலும், ராஜேந்திரனின் வீர வாசக முழக்கங்களுக்குப் பதிலளிக்க இயல வில்லையாதலாலும் அவர் பாடு நிம்மதியாகப் போய் விட்டது. இது அதிர்ஷ்டந்தானே!

நல்ல பெயர் வாங்க வேண்டுமென்று ஆர்வத்தோடு நடித்துப் புகழ் பெற முயல்வது தான் ஒரு நடிகரின் லட்சியமாகும். ஆனால் அந்த லட்சியம் ஒரு சிறு சிரமமும் இல்லாமல் ஒருவருக்குக் கிட்டுமானால் அதை அதிர்ஷ்டமென்றுதானே கூற வேண்டும்?

சமீபத்தில் ஒரு தமிழ்ப்படத்தில் ஓர் உப பாத்திரமாக நடித்த ஒரு நண்பரைக் கண்டு பேசிக்கொண்டிருந்தேன். "ஸார், நீங்கள் இந்தப் படத்தில் நன்றாய் நடித்திருக்கிறீர்கள். நீங்கள் வருகிற பாகம் படத்தில் கொஞ்சந்தான். என்றாலும் கச்சிதமாயிருக்கிறது!" என்று அவரிடம் கூறினேன்.

"நீங்கள் என்னவோ பாராட்டுகிறீர்கள். எனக்கு அந்தப் படத்தில் நான் நடித்திருக்கிறேன் என்பதை நினைத்தாலே வருத்தமாயிருக்கிறது. நான் என் பாத்திரத்தை உணர்ந்து நடித்த பகுதிகளையெல்லாம் படத்தில் வெட்டியெடுத்து விட்டார்கள். கடைசியில் புண்ணியத்துக்காகக் கொஞ்சம் என் பாகத்தை விட்டு வைத்திருக்கிறார்கள். முழுவதும் வெட்டியிருந்தால் நானும் உங்களோடு சேர்ந்து சந்தோஷப்பட்டிருப்பேன்!" என்றார் என் நண்பர்.

சினிமாத்துறையில் இப்படி எவ்வளவோ சிரமங்கள்! இவற்றுக்கெல்லாம் ஈடு கொடுத்துத் தப்பி நல்ல பெயர் எடுக்க வேண்டும்.

இந்தப் படத்தின் திரைக்கதையில் சில நம்ப முடியாத சம்பவங்கள் இருப்பதால், படத்தின் சுவாரஸ்யம், நடிகர்களின் திறமையான நடிப்பு எல்லாவற்றையும் அவைகள் விழுங்கி விடுகின்றன என்கிற உண்மையை நாம் மறுப்பதற்கில்லை.

வக்கீல் சாரதா, மணமகன் தேவை என்று விளம்பரம் செய்ய, ரங்கன் அதற்கு மனுச் செய்து கொண்டு, நேரில் சந்திக்கிறான். டாக்டர் வரதனைக் கொன்றுவிட வேண்டும் என்னும் நிபந்தனையுடன் சாரதா அவனை மணக்க இசைகிறாள். ரங்கன் மாறு வேஷத்தில் டாக்டரைச் சந்தித்து மிரட்டுகிறான். மருதியின் மீது கற்பிக்கப்பட்ட மாசு அபாண்டமானது என்று உணர்த்துகிறான்.

"கதைக்குக் காலில்லை" என்னும் பழமொழி யாவருக்கும் தெரிந்ததுதான். அதை ஓரளவு எல்லோரும் ஒப்புக் கொள்ளவும் செய்வார்கள். ஆனால், அதற்காகக் கதைக்கு உயிரும் இல்லை, உருவமும் இல்லை என்று யார்தான் ஒப்புக் கொள்ளுவார்கள்?

"வக்கீலுக்குப் படித்த ஒரு பெண் படிப்பில்லாத ஒரு விவசாயியைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புவாளா? படித்த ஒரு வாலிப டாக்டர் ஒரு ஏழை விவசாயிப் பெண்ணை மணக்க முன்வருவானா?—இவையெல்லாம் வாழ்க்கையில் நடக்கக் கூடிய நிகழ்ச்சிகளா என்பதை நன்கு சிந்தித்துப் பார்க்க வேண்டும். இத்தகைய புரட்சிகரமான சம்பவங்களைப் புகுத்த விரும்பினால், கதாபாத்திரங்களை அவற்றுக்குத் தகுந்த முறையில் சிருஷ்டித்திருக்க வேண்டும்.

நல்ல கதையம்சத்தையும் உயிருள்ள கதாபாத்திரங்களையும் படைத்துத் தமிழ்ப்பட உலகை முன்னணிக்குக் கொண்டுபோக வேண்டிய தருணத்தில், இத்தகைய பலஹீனமான கதைகள் படமாக்கப்பட்டிருப்பது தமிழ் மக்கள் செய்த துர்ப்பாக்கியம்தான்.

பாடல்கள் பல கவிஞர்களால் இயற்றப் பட்டிருந்தும், அவைகளில் ஒன்றுகூடச் சோபிக்காமற் போனது குறித்து யாருமே, வருந்தாமல் இருப்பதற்கில்லை.

"தமிழ்ப் படங்களுக்கே நான் போவதில்லை, ஸார்! நீங்கள் ஒரு தமிழ்ப்படங்கூட விடாமல் போய்ப் பார்க்கிறீர்களே!" என்று என்னிடம் சில நண்பர்கள் அடிக்கடி அனுதாபப்படுவதுண்டு.

இத்தகைய படங்களைப் பார்த்த பின்பு நண்பர்களின் அனுதாபம் தவறானதென்று யாரும் கூற முடியாதல்லவா?





திரைப்பட உலகின் மூன்று காதல் ஜோடிகளை இவ்விரு பக்கங்களிலும் இவ்வாரம் நேயர்கள் சந்திக்கிறார்கள்.

இதோ இடது புறத்தில் கம்பீரமாக நிற்பவர்தான் திரு எஸ். எஸ். ராஜேந்திரன். 'முதலாளி' வெளியான பிறகு இவரது புகழ் திரைப்பட உலகிலே வானளாவ உயர்ந்து விட்டதாம். மாடர்ன் தியேட்டர்ஸார் சிறப்பாகத் தயாரித்து வரும் 'பெற்ற மகனை விற்ற அன்னை' இவர் தற்போது நடித்து வரும் படங்களுள் ஒன்று. அவர் அருகே பயமும் வியப்பும் முகத்திலே போட்டி போட்டுக்கொண்டு தோன்ற நிற்பவர் விஜயலக்ஷ்மி.

*

வலது புறத்தில் காட்சியளிக்கும் இரு ஜோடிகளில் மேலே இருப்பவர்கள் திரைப்பட ரசிகர்களுக்கு நன்கு அறிமுகமான சிவாஜி கணேசனும் பத்மினியும் தான். வீனஸ் பிக்சர்ஸார் தயாரித்து மிக விரைவில் வெளிவிட இருக்கும் உத்தம புத்திரன் படத்தில் ஒரு காட்சி இது. இப் படத்தில் சிவாஜி கணேசன் இரு வேஷங்களில் தோன்றிச் சக்கை போடு போடுகிறார் என்று கேள்வி. இவ்விருவருடன் கண்ணாம்பாவும் சிறப்பாக நடித்திருக்கிறாராம். ஸ்ரீதரின் வசனங்கள் மிக நன்றாக அமைந்திருக்கின்றனவாம்.

*

கீழே இருக்கும் படத்தில் அபிமான நட்சத்திரம் ஜெமினி கணேசனையும், அவருக்கு அருகே புன்னகையுடன் புது முகம் இந்திராவையும் காணலாம். 'மணமுள்ள மறுதாரம்' என்ற படத்தில் இப்படித் தோன்றுகிறார்கள். இப்படத்தைப் பத்மா பிலிம்ஸார் தயாரித்து வருகிறார்கள். திரைப் படக் கதை ஒரு பிரபல சினிமா நட்சத்திரத்தின் வாழ்க்கை வர்ணனையை ஒட்டி அமையும் என்று ஒரு குருவி சொல்லுகிறது!



1. ஜெனரல் ஆஸ்பத்திரி காரியதரிசியும், பொருளாளருமான திரு எல். எம். ஜகதீசன் அவர்கள் புதல்வி குமாரி ஜலஜாவின் பரத நாட்டியம் சென்ற மாதக் கடைசியில் சென்னை திருவல்லிக்கேணி கலா மண்டபத்தில் நடைபெற்றது. இந்த நாட்டியத்துக்குத் தலைமை வகித்த மேயர் திருமதி தாராசெரியன் அவர்கள் குமாரி ஜலஜாவின் திறமையையும், அவருக்கு நாட்டியம் பயிற்றுவித்த நாட்டியக் கலாகேசரி வழுவூர் ராமய்யா பிள்ளை அவர்களையும் பாராட்டினார்.



2. பம்பாய் சயானிலுள்ள கலாசதன், பரத நாட்டியத்துக்கு ஆற்றி வரும் தொண்டு அனைவரும் அறிந்தது. கலாசதன் மாணவிகளான குமாரி பரிமளா, பேபி பிரேமாவின் பரதநாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் நடைபெற்றது.

3. திருமதி சீதாலட்சுமி குமாரசாமி — யோகாசன நிபுணர் திரு வி. என். குமாரசாமி அவர்களின் புதல்வி குமாரி ஜான்ஸிராணியின் பரதநாட்டிய அரங்கேற்றம் சென்னை கோகலே மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது. ஜான்ஸி ராணியையும் நாட்டிய ஆசிரியை திருமதி சுவர்ண சரஸ்வதியையும் தலைமை வகித்த திரு சாம்பமூர்த்தி பாராட்டினார்.

4. ராஜராஜேஸ்வரி பரத நாட்டிய கலா மந்திரின் மாணவி குமாரி அநுராதாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் சமீபத்தில் பம்பாயில் நடைபெற்றது. அரங்கேற்றத்துக்கு பத்மபூஷண் திரு எம். கணபதி தலைமை தாங்கிச் சிறப்பித்தார்.





அவ்வளவு சிக்கனம்! ஒரு முறை தேய்த்தால்

# கால்கேட் டெண்டல் கிரீம்

## 85% கிருமிகளை ஒழிக்கிறது

சொத்தையும் மற்றும் துர்நாற்றமும் ஏற்படுத்தும் கிருமிகள் அவை




மிகச் சிறந்த பலனுக்கு எப்பொழுதும் உபயோகியுங்கள்!

# கால்கேட் டூத் பிரஷ்



## நீண்ட, அடர்ந்த ஒளிக்கூந்தலுக்கு

இளமையின் ஒளியும் அற்புத ஜ்வலிப்பும் பெற கூந்தலுக்கு கால்கேட் பெர்பியூம்டு காஸ்டர் ஹேர் ஆயிலை தடவுங்கள். கூந்தலின் இயற்கை அழகை அது எடுத்துக் காட்டி எல்லோரையும் பிரமிக்கச் செய்யும்.

எக்கானமி சைஸை வாங்கி பணத்தை மிச்சப் படுத்துக.




# கால்கேட்

## பெர்ஃபியூம்டு காஸ்டர் ஹேர் ஆயில்



# விஞ்ஞானியின் தவம்

மீனாட்சி ராஜா

**ம**னித சஞ்சாரமே இல்லாத அந்த மலையடிவாரம் பயங்கர அழகுடன் விளங்கியது. வானத்தில் மிதந்து கொண்டிருந்த மேகக் கூட்டங்களுக்குள் தன் சிகரத்தை மறைத்துக் கொண்டிருந்த அந்தப் பிரும்மாண்டமான மலை, பூமியையும் ஆகாயத்தையும் இணைத்தாற் போலக் கம்பீரமாக நிமிர்ந்து நின்று கொண்டிருந்தது.

மரங்களும் செடிகளும் புதர்களுமாக மண்டிக் கிடந்த அதன் அடிவாரம் கண்ணைக் கவரும் வனப்புடன் உள்ளத்துக்குப் பீதி அளிக்கும் அளவுக்கு அடர்ந்திருந்தது. தொலைவில் கேட்ட துஷ்ட மிருகங்களின் உறுமலையும் உயரே பக்ஷி ஜாலங்களின் இன்னொலியையும், எங்கோ சமீபத்தில் விழுந்து கொண்டிருந்த அருவியின் பேரிரைச்சலையும் தவிர, வேறு விதமான சத்தமே இல்லாத இடம். கொஞ்சம் இடைவெளி காணப்பட்ட இடத்தில் அந்தச் சிறிய குடிசை மட்டும் தனித்து நின்றது.

ஆசிரமம்போல விளங்கிய அதனுள் அமர்ந்திருந்த மகரிஷி நிஷ்டையில் ஆழ்ந்திருந்தார். ரிஷி என்றால் வசிஷ்டர், விசுவாமித்திரர், துர்வாசர் இத்யாதி மஹா புருஷர்களையே நம் மனம் சித்திரித்துக்கொள்கிறது அல்லவா? ஆனால் இவர் அவர்களைப் போன்றவர் அல்ல. அம்முனிவர்களைப்போல ஆயுள் முழுவதும் ஞான மார்க்கத்தில் சென்றவர் அன்று. சிறு பிராயத்திலிருந்து விஞ்ஞான ஆராய்ச்சிகளில் கருத்தைச் செலுத்தி, ஞானத்துக்கு உண்டான தாகம் தீராமல், சகல பொருள்களுக்கும் சக்திகளுக்கும் எஜமானராக விளங்கும் இறைவனையே தருவித்து, தம் சந்தேகங்களைத் தீர்த்துக்கொள்ளத் திட்டமிட்டிருந்த புதுமைத் தபஸ்வி சந்திரசேகரர்.

சந்திரசேகரர் பிறந்தவுடன் அவர் ஜாதகத்தைக் கணித்த ஜோஸ்யர், திகைப்பினால் சிறிது நேரம் பேச முடியாமல் தவித்தார். அவர் மௌனம் சாதிப்பதைப் பார்த்து விட்டுப் பதறிப் போன சந்திரசேகரரின் தந்தை, "என்ன? பேசாமல் இருக்கிறீர்களே? குழந்தைக்கு ஏதாவது—" என்று பதற்றத்துடன் வினவினார். "சே! சே! அப்படி ஒன்றும் இல்லை. பயப்படாதீர்கள். உங்கள் மகனின் ஜாதகத்தைப் போல ஒன்றை இதுவரையில் நான் பார்த்ததேயில்லை. உண்மையைச்சொல்லப் போனால், எனக்கு இன்னதென்றே புரியவில்லை. அதனால்தான் பிரமித்துப் போய் விட்டேன். இந்த ஜாதகன் ஒரு மஹா புருஷன் என்பதில் சந்தேகமில்லை. கிரஹங்களின் சேர்க்கை அவ்வளவு பிரமாதமாக அமைந்திருக்கிறது. இருந்தாலும்..." என்று இழுத்தார் ஜோஸ்யர்.

"ஏதாவது தோஷம் காணப்படுகிறதா? விவரமாகச் சொல்லுங்கள், சுவாமி!" என்று தவித்தார் அந்த மனிதர்.

"தோஷம் ஒன்றும் இல்லைங் காணும். ஜாதகம் நன்றாய்த் தான் இருக்கிறது. இருந்தாலும் சில விஷயங்கள் பிடிபடவில்லை. சோதிட சாஸ்திரத்தில் கண்டிராத புதுமை இதில் காணப்படுகிறது." சந்திரசேகரரின் தந்தை அவரைப் பரிதாபமாக நோக்கினார். ஜோஸ்யர் மறுபடியும் தன் கையில் இருந்த மஞ்சள் தடவிய கடிதத்தை உன்னிப்பாகப் பார்த்தார். சில விநாடிகள் மனத்துக்குள் ஏதேதோ கணக்கு போட்டுக் கொண்டபின், தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேச ஆரம்பித்தார்:

"மனிதர்களுக்கு எளிதில் கிடைக்காத புதிய, விநோதமான அனுபவங்கள் இவனுக்குக் காத்திருக்கின்றன. அதுமட்டும்தான் என்னால் சொல்ல முடிகிறது" என்று யோசித்தவாறு கூறியவர், எதிரில் உட்கார்ந்திருந்தவரின் முகத்தில் தோன்றிய கவலைக் குறிகளைப் பார்த்துவிட்டு, புன்னகையுடன், "நான் என்னென்னமோ சொல்லிக் கொண்டு போகிறேனே என்று கவலைப்படாதீர்கள். ரொம்பப் பெரிய மனிதன் ஆகப் போகிறான் உங்கள் மகன். மஹா மேதாவி, சுவாமி! உலகமே அவன்கீழ் இருக்கப் போகிறது. பாருங்கள்" என்று ஒரேயடியாகப் பாராட்டத் தொடங்கினார்.

**ஜோ**ஸ்யர் சொற்படி உலகமே சந்திரசேகரரின் கீழ் இருப்பதை அவர் தந்தை பார்க்கவில்லை என்றாலும், தம் மகன், உலகம் புகழும் விஞ்ஞானியாக அடிக்கடி ஆகாய விமானத்தில் ஏறிச் சென்றதைப் பார்த்து விட்டுத்தான் போனார்.

சந்திரசேகரர் மிகச் சிறு வயதிலிருந்தே விஞ்ஞானத்தில் விசேஷ ஆர்வம் காட்டினார். அதற்கு ஏற்றாற்போல் சூழ்நிலையும் அமையவே அவர் மேன்மேலும் பலவித ஆராய்ச்சிகளில் இறங்கினார். அவருடைய இடைவிடாத ஆராய்ச்சிகளின் பயனாக விஞ்ஞானத்தில் புதைந்து கிடந்த எண்ணற்ற ரகசியங்கள், ஒவ்வொன்றாக அவர் கண்கள் முன் விரிய ஆரம்பித்தபோது, சந்திரசேகரர் ஏட்டிலடங்காத ஆனந்தம் அடைந்தார். அந்தத் துறையில் அவருக்கு இருந்த ஆர்வம் மேன்மேலும் விருத்தி அடைந்தது.

சந்திரசேகரரின் கவனம் இந்த உலகத்து ஆராய்ச்சிகளை விட்டு, சந்திரனையும் சூரியனை



யும் ஏனைய கிரகங்களையும் சுற்ற ஆரம்பித்தது. சந்திரனை அடைவது எங்ஙனம்? செவ்வாயில் ஜீவராசிகள் உண்டா இல்லையா? இது போன்ற விஷயங்களைப் பற்றி யெல்லாம் சிந்திக்கத் தொடங்கினார். நாளடைவில் அவருக்கு விஞ்ஞானத்தின் எல்லையைப் பிடிக்க, யோக மார்க்கம்தான் சிறந்த வழி என்று தோன்ற ஆரம்பித்து விட்டது. முன் காலத்து மகரிஷிகளைப் போல, தவத்தால் பகவானைக் கட்டுப்படுத்தி, விநாடிக்கு விநாடி, தம் மனத்தில் புதிது புதிதாகத் தோன்றும் சம்சயங்களைத் தீர்த்துக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை பிறந்தது. வருஷக் கணக்காக அவர் நடத்திக் கொண்டிருந்த ஆராய்ச்சிகளை விட்டு விட்டுத் தவக்கோலம் பூண்டார். ஆயுளில் முக்கால் பாகத்தை ரசாயனப் பொருள்களும், கண்ணாடி 'டியூப்'களும் அடங்கிய ஆராய்ச்சிக் கூடத்தில் செலவிட்ட அவர், அவற்றை எல்லாம் துறந்துவிட்டுத் தனிமையை நாடிச் சென்றார். ஜனசஞ்சாரமற்ற அந்த மலையடிவாரத்தைக் கண்டதும் அங்கேயே ஒரு குடிசையை அமைத்துக் கொண்டு, நிஷ்டையில் இறங்கி விட்டார்.

இப்போது அவரைச் சுற்றி ரசாயனப் பொருள்களும் நாளுக்கு நாள் முன்னேறிக் கொண்டிருந்த விஞ்ஞான ஆராய்ச்சிக்குரிய கருவிகளும் இருக்கவில்லை. அவற்றுக்குப் பதில், கமண்டலமும் மரவுரியும்தான் இருந்தன. பட்டணவாசத்தின் தடபுடல் அங்கே இல்லை. ஆசிரம வாழ்வின் அமைதி நிலவியிருந்தது. மானிடப் பிறவிகளின் ஆர்ப்பாட்டத்துக்கும் கூக்குரலுக்கும் பதிலாக, பட்சி ஜாலங்களின் இன்னிசை நிறைந்திருந்தது. இந்த அமைதி மயமான சூழ்நிலையில் அவர் மோனத் தவத்தில் ஆழ்ந்தபின், எத்தனை ருதுக்களோ ஓடிவிட்டன. கடுந்தவம் புரிந்து கொண்டிருந்த அந்தத் தபஸ்வியை இரவும் பகலும், வெப்பமும் பனியும், மழையும் குளிரும், மாறி மாறி வந்து தாக்கித் தோல்வியுற்றன. நாட்கள் செல்லச் செல்ல, அவருடைய தவத்தின் உக்ரம் அதிகரித்தது.

சந்திரசேகரரின் நம்பிக்கையும் வீண் போகவில்லை. தம்முடைய கையில் அடங்காததொரு சக்தி தம் கண்களைத் திறப்பதை உணர்ந்தார் யோகி. தம் முன் ஜகஜ்ஜோதியாய் நிற்கும் ரூபத்தைக் கண்டார். இதைப் போன்ற அற்புதமயமான ஒளியை அவர் பார்த்ததே இல்லை. இதுதான் ஈச்வரனாக இருக்க வேண்டும் என்று அவருடைய அந்தராத்மாவுக்குப் பட்டது.

"பிரபஞ்சத்தை ஆண்டு வரும் சக்தியே! எனக்குத் தரிசனம் அளித்ததற்கு வந்தனம். எனக்கு வெகுநாட்களாகத் தோன்றும் சில

சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளவே இந்தத் தவம் இருந்தேன்.''

இறைவன் கலகல வென்று நகைத்தார். அவரது அந்த நகைப்பு காதுக்கு மிகவும் இனிமையாய் விளங்கியது.

''உங்களுக்கு ஏற்பட்ட சந்தேகங்களைக் கேட்போம்'' என்றார் பகவான்.

''கடவுளே! கிரஹங்களுக்கு இடையே இருக்கும் இடத்தில் என்ன வஸ்து இருக்கிறது? ஈதர் என்று நாங்கள் கூறும் அந்த விஷயம் என்ன?''

''சொல்கிறேன். அடுத்த கேள்வி?''

''செவ்வாயில் மனிதர்களோ, வேறு விதமானப்பிராணிகளோ ஜீவித்திருக்கின்றனரா?''

''அடுத்தது?'' பகவான் சற்று அதிசயம் அடைந்தார். தம்மைப் பற்றி இந்த மனிதன் ஏன் ஒன்றும் கேட்கவில்லை? கடைசியில் வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டு புன்னகையுடன் நின்றார்.

''பறக்கும் தட்டுக்கள் என்பவை என்ன?''

பகவான் பொறுமை இழந்தார்.

இத் தடவை, ''அடுத்தது?'' என்று கூறாமல், ''நில்'' என்றார். ''உன்னிடம் இப்போதே ஒன்று சொல்லி விடுகிறேன். நான் இரண்டு விஷயங்கள் சொல்கிறேன். அதில் ஒன்றை நீ பெற்றுக் கொள்ளலாம். ஒன்று விஞ்ஞானத்தைக் குறித்து உனக்கு இருக்கும் சகல சம்சயங்களுக்கும் விடை. இரண்டு நித்திய ஆனந்தமாய் விளங்கும் என்னை அடைதல். எது வேண்டும்?''

''ஈசனே! அநேக சம்சயங்கள் என்






வாழ்நாள் முழுவதும் என்னை வாட்டியெடுத்திருக்கின்றன. ஜீவிய நாட்களையெல்லாம் நான் விஞ்ஞானத்தில் செலவழித்தேனே ஒழிய, சுகதுக்க ஆராய்ச்சியில் அல்ல. ஆகையால் தாங்கள் முதலில் அருளிய வரத்தையே எனக்குத் தருவீர்.''

பகவான் நீண்ட பெருமூச்செறிந்தார். முன் காலத்து பக்தர்களுக்கும் இவனுக்கும் எவ்வளவு வித்தியாசம் !

''சரி, உன் இஷ்டம். ஆனால், மனித உருவத்தில் உன் சம்சயங்களைத் தீர்த்துக் கொள்ள முடியாது. ஒரு கீழ்த்தர மிருகத்தின் உருவத்தில், இந்த உலகத்தையே அதிவேகத்தில் உன்னால் சுற்றிவர முடியும். நூற்றெட்டு சுற்றுகளுக்குப் பிறகு, உன் சுயஉருவத்தை அடைவாய் ......ஆயினும் உன் தவத்தை மெச்சியதன் சின்னமாய் இன்னும் ஒரு வரம் தருகிறேன். உன் சுயஉருவத்தை மறுபடியும் அடைந்ததும், நீ விரும்பும் கோரிக்கை நிறைவேறி, நீயும் என்னை அடைவாய்!''

சந்திரசேகரரின் உள்ளம் குதூகலத்துடன் துள்ளியது. கடைசியில் அவருடைய பயிற்சிக்கு வெற்றி கிட்டிவிட்டது.

சட்டென்று சந்திரசேகரர், தமது மட்டற்ற மகிழ்ச்சிக்கு இடையில், கடவுளுக்குத் தாம் வந்தனம் அளிக்க மறந்து விட்டதை நினைவு கூர்ந்தார். மேலும் ஏதோ கீழ்த்தர மிருகம் என்று குறிப்பிட்டாரே பகவான். அது என்ன மிருகம் என்று கேட்க வேண்டாமா?

அப்போதுதான் அவர் தம் எதிரில் இருந்த தேஜோமயமான ஒளி மறைந்து வெகு நேரம் ஆகிவிட்டது என்பதை உணர்ந்தார். ஏனோ அவர் உள்ளத்தை இனம் புரியாத திகிலும் துயரமும் ஆட்கொண்டன.

சந்திரசேகரர் பிரமை பிடித்தாற்போல் கல்லாய்ச் சமைந்து நின்றார். மனத்தில் இருந்த வேதனை நெஞ்சை அழுத்தியது. அதன் பளு தாங்க முடியாமல், அவர் மயங்கி கீழே சாய்ந்தார். பூமாதேவி அவரை அன்புடன் தன் மடியில் தாங்கிக் கொண்டாள்.

லைகாவுக்குத் தலையைச் சுற்ற ஆரம்பித்தது. அவள் எத்தனை தரம் சுற்றினாளோ அவளுக்கே தெரியாது. தெரிந்தால் மட்டும் என்ன பிரயோசனம்? அந்த வாயில்லா ஜந்துவைத்தான் ஒரு பெட்டியில் அடைத்து மிகுந்த உயரத்தில், வெட்ட வெளியில் அனுப்பி விட்டார்களே !

லைகாவுக்கு மெல்ல அன்று நடந்ததெல்லாம் நினைவுக்கு வந்தது. வாலைக் குழைத்துக் கொண்டு அவள் எஜமானன் பின்னே சுற்றியது ஞாபகம் வந்தது. அன்று அவர், வழக்கத்தைவிட அதிகமாக அவளிடம் அன்பு காட்டினார். அதிகாலையில் அவளைச் சீட்டி அடித்து அழைத்துக் கொண்டு வெகு தூரம் வரையில் நடந்து சென்றார். காலை வேளையின் இன்பத்தை நுகர்ந்து கொண்டு, லைகா சில சமயம் முன்னே ஓடினாள். சிலசமயம், பின் தங்கி நின்றாள். அன்று அவள் விளையாடின விளையாட்டு-அடேயப்பா ! அவளுக்குத்தான் அன்று என்ன உற்சாகமாயிருந்தது !

உயர் குலத்துப் பெண்ணைப் போல, லைகா தன் எஜமானனுடன் கம்பீரமாக நடந்து சென்றாள். லைகா நினைத்த போதெல்லாம் கிடைத்த பண்டங்களையெல்லாம் சாப்பிட மாட்டாள். மனிதர்களைப்போல அந்தந்தச் சமயத்துக்குத் தன் எஜமானன் மேற்பார்வையில், தனக்கு இடப்பட்ட அளவு ஆகாரத்தைத்தான் உட்கொள்வாள்.

அதனால்தானே கண் எதிரே அவளுக்கு வேண்டிய தின்பண்டங்கள் இருந்தும், அறிவுள்ள மானிடரைப் போல, கணக்காக மூன்று வேளை உட்கொண்டு வந்தாள். இதோ கடைசியாக அவள் சாப்பிட வேண்டிய ரொட்டியும் பிஸ்கோத்தும் எதிரே இருந்தன. ஆனால் மணி அடிக்கவில்லையே? அதன் பின் அல்லவோ அதைச் சாப்பிடவேண்டும். அதை உண்ட பின்பு, பிறகு சாப்பிடுவதற்கு ஒன்றும் இல்லையே என்றும் அவள் கவலைப்படவில்லை.

அன்று அவளை இந்தப் பெட்டியில் புகுந்து கொள்ளச் சொன்ன போது அவள் மறுபேச்சு பேசவில்லை. உடனே உள்ளே போய் விட்டாள். சில நாட்களாகவே, அவள் அந்தச் சிறைவாசத்துக்குப் பழக்கப்பட்டிருந்தாள். மறுபடியும் அவள் எஜமானன் வந்து அவளை விடுவிக்கும் வரையில் அவள் பொறுமையுடன் காத்திருப்பாள்.

ஒரு நாள் வெகு நேரமாகியும், அவள் எஜமானர் வரவில்லை. மணியும் அடிக்கவில்லை. லைகாவுக்குப் பசி காதை அடைத்தது. இருந்தும் அவள் உணவு உட்கொள்ள ஒருவித முயற்சியும் செய்யவில்லை.

கடைசியில் அவளுடைய எஜமானன் வந்து அவளை விடுவித்தபோது அவர் அடைந்த மகிழ்ச்சி—அதை எப்படி வர்ணிப்பது? ஏதோ ஒரு பெரிய லட்சியம் கைகூடி விட்டாற்போலக் குதூகலம் அடைந்தார் அந்தமனிதர்.

இன்று ஏன் அவளை விடுவிப்பதற்கு வரவில்லை? லைகா ஏக்கத்துடன் கழுத்தை மிகுந்த சிரமத்துடன் இலேசாக வளைத்துக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தாள். நன்றாகத் திரும்புவதற்குப் போதிய இடம்தான் இல்லையே.



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

**உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்**

பெப்ஸ் வில்லை ஒன்றை சுவைத்தால் வலியைக் குறைக்கவும், தொண்டைப்புண் பிராங்கைடிஸ், இருமல் அல்லது ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள். பெப்ஸ் உடனே நிவாரணம் அளித்து, விரைவில் குணமூட்டுகிறது. அபாயகரமான மருந்துகள் இதில் சேரவில்லை. குழந்தைகளுக்கும் கூட அபாயமின்றி கொடுக்கலாம்.



FPY.54.TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்

சோல் ஏஜெண்டுகள்: தாதா அண்டு கம்பெனி
88, லிங்கியப்ப நாயக் தெரு, சென்னை - 3



**கூந்தல் மற்றும மூளை அபிவிருத்திக்கான தைலம்**

செழுமையாகக் கூந்தல் வளர உதவுகிறது வழுக்கையைத் தடுப்பதுடன் கேசம் உதிர்வதையும நிறுத்துகிறது. ஞாபக சக்தியை அதிகரித்து ஆழ்ந்த நித்திரையை அளிக்கிறது எல்லோருக்கும் எக்காலத்திலும ஏற்றது.

| | | |
|---|---|---|
| பெரிய பாட்டில் | ரூ. | 4/- |
| சிறிய பாட்டில் | ரூ. | 2/- |

எங்கும் கிடைக்கும்




**ராம்தீர்த் யோகாஷ்ரமம்**
பம்பாய்-14. (C. Rly)

ஆரோக்கியமாகவும், திடமாகவும் இருக்க யோகாசனங்களை விவரிக்கும் எங்கள் அழகான ஆசனப் படத்திற்கு எழுதுங்கள். தபால் செலவு உள்பட ரூ. 2. மணியார்டரில் தொகை அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். வீட்டிலேயே ஆசனங்களைச் சுலபமாகப் பழகலாம்.

சென்னை டெப்போ:
4/441, தங்கசாலைத் தெரு, சென்னை

மலரன்ன
முக வதனத்திற்கு









ரெமி ஸ்னோ & பவுடர்

இலங்கையில் கிடைக்குமிடம்: AVRA Ltd., Colombo

ரேடியோ சிலோன் : 41·72 மீட்டரில் "இசை விருந்து"
வெள்ளிக்கிழமைதோறும் மாலை 6-30 முதல் 6-45 வரை

அவனுடைய சிறிய உடலுக்கு என்றே பண்ணினாற் போல இருந்த அவனுடைய தற்கால வாசஸ்தலம் அவளை அப்புறம் இப்புறம் திரும்ப விடவில்லை.

'கண, கண, கண' அவள் பலமுறை கேட்டுப் பழகிய அந்த இனிமையான மணியோசை லீலாவைச் சுறுசுறுப்புறச் செய்தது. ஆவலுடன் தன் எதிரே யிருந்த ஆகாரத்தைச் சாப்பிட்டாள்.

இது என்ன? இத்தனை நாட்களாக இல்லாமல் ஏதோ சங்கடம் பண்ணுகிறதே! பாவம் லீலா! அவளால் நிற்கவும் முடியவில்லை. உட்காரவும் முடியவில்லை. அப்படியே விழுந்து புரள வேண்டும் போல் இருந்தது. அதற்கும் முடியாமல் அவளை அடைத்து வைத்திருந்தது. லீலாவுக்கு மூச்சு வாங்கியது. தாங்க முடியாத சிரமம் உடல் முழுவதும் பரவி, திணற அடித்தது.

திடீரென்று தன் வேதனை அவ்வளவும் மறைந்து விட்டதை உணர்ந்தாள் லீலா.

சட்டையைக் கழற்றுவது போல் எறிந்து விட்ட சுவான உடல் உள்ளே கிடக்க, மகரிஷி சந்திரசேகரர் எல்லையற்ற வானத்தில் மிதந்து கொண்டிருந்தார். தாம் இத்தனை நாட்களாகத் தமது உறைவிடமாகக் கொண்டிருந்த நாற்கால் பிராணியின் உடலை நினைத்த மாத்திரமே, சந்திரசேகரருக்கு அளவற்ற வெறுப்பு உண்டாயிற்று. பாவம்! வாயில்லா ஜீவன்! ஈவு இரக்கமற்ற மனிதனின் கைப்பொம்மையாக ஆடி! அந்த ஆட்டத்திலேயே தன் உயிரை விட்டிருக்கிறதே. அவனுடைய கொடூரமான ஆராய்ச்சிக்குத் தன்னையே அர்ப்பணித்திருக்கிறது.

சந்திரசேகரரின் கண்களில் கனல் தெறித்தது. தனது பயங்கர ஆராய்ச்சிக்கு ஒரு மிருகத்தைப் பலியிட மனிதனுக்கு ஏது உரிமை? கடவுளின் படைப்பில் ஒரு உயிரைப் பறிக்க அவனுக்கு அதிகாரம் அளித்தது யார்? இதற்குக் கேள்வி கேட்பார் இல்லையா? இந்த அக்கிரமத்தைப் பார்த்துக்கொண்டு சும்மா இருப்பதா?

"இந்த உலகத்தில் எந்த எந்த விஞ்ஞானிகள் தாங்கள் கற்ற விஞ்ஞானத்தின் பெயரில், அழிவுச் செயல்களில் ஈடுபடுகிறார்களோ, அவர்கள் மடிய வேண்டும். எங்கெங்கு தங்கள் மூர்க்கமான ஆராய்ச்சிகளுக்கு உயிர்ப்பலி கொடுக்கிறார்களோ, அங்கெல்லாம் ஒன்றும் இல்லாமற் போக வேண்டும். அந்தத் தேசங்களே அழிய வேண்டும். விஞ்ஞானத்தை ஆக்கச் செயல்களுக்கு உபயோகிப்பவனே தழைக்க வேண்டும். அவன் நாடுதான் உய்ய வேண்டும்."

சந்திரசேகரர் வாயிலிருந்து அனல் கக்கும் நெருப்புத் துண்டங்களைப் போல் அச்சொற்கள் தெறித்து விழுந்தன. அடுத்த விநாடி அவர் அளவற்ற வேதனையுடன் கைகளைப் பிசைந்து கொண்டார். என்ன காரியம் செய்து விட்டார். இனிமேல் விஞ்ஞானமே அற்றுப் போய் விடும்படி அல்லவா அவர் சபித்து விட்டார்?

சந்திரசேகரர் மிதமிஞ்சிய துயரத்துடன் கண்களை மூடிக் கொண்டார். ஆனால் மறு கணம் தம்மை மீறியதொரு சக்தி மறுபடியும்



முதல் ரௌடி: அண்ணே! நான் கும்பகோணம் போகணும்னு இருக்கேன். அங்கே விருந்து உனக்கு லெட்டர் போடறதுன்னு எந்த விலாசத்துக்குப் போடறது? உன் வீட்டு விலாசத்துக்கே போடட்டுமா?

இரண்டாம் ரௌடி: இங்கே இருக்கிறது என்ன தம்பீ நிச்சயம்! எதற்கும் வேலூர் ஜெயில் விலாசத்துக்கே போட்டுவிடு! எனக்கு நிச்சயம் கிடைக்கும்!

---

தம் கண்களைத் திறப்பதை உணர்ந்தார். வர்ணனைக்கு அப்பாற்பட்ட அந்த ஒளி வெள்ளத்தைக் கண்டதும், அவர் உள்ளத்தில் புதிய தெம்பு பிறந்தது. "ஐயனே! ஆத்திரத்தினால் தவறு இழைத்து விட்டேனே! சுவாமி, என் பாவத்துக்கு இனி ஏது மன்னிப்பு? அறியாமையினால் தாங்கள் கொடுத்த வரத்தைத் துஷ்பிரயோகம் செய்து விட்டேனே, பாவி?" என்று அலறினார்.

பகவான் புன்னகை புரிந்தார்.

"அப்பனே! வருந்தாதே. என் வரத்தின் மகிமையால் நீ கூறியதை இனி மாற்ற முடியாது என்பது வாஸ்தவம்தான். ஆனால் உன் கடுமையான சாபத்தினால் இனி நன்மையே பிறக்கும். கவலைப்படாதே. இந்த உலகத்தில் இனி எங்கும் கொடுமை இருக்காது. அன்பே தளிர்க்கும். போர் நடக்காது; சமாதானமே தழைத்தோங்கும். விஞ்ஞானத்தினால் பல நன்மைகள் பிறக்கும். விஞ்ஞானம் அழியாது. அதனால் வரும் தீமைகள்தான் அழியும்."

"ஐயனே! அண்டசராசரமும் உம்முள் அடங்கியிருக்கிறது என்ற உண்மையை உணராத மூடனாக இருந்தேன். ஒளியும் நீர்தான், ஒலியும் நீர்தான், உலகமும் நீர்தான். அதைச் சுற்றியிருக்கும் ஈதரும் நீர்தான் என்பதை அறிந்து கொள்ளாமல் ஏதேதோ பேசினேன். என் ஆயுளைச் செலவிட்ட விஞ்ஞான ஆராய்ச்சியும் நீர்தான் என்பதை இப்போது உணர்ந்தேன். சுவாமி! என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்று வேண்டினார்.

# விசித்திரச் சலங்கை

கதை....வாண்டு மாமா

படம்.....பாபு

7


















ஒரே கல்லில் இரண்டு மாங்காய்! ஏரியில் உள்ள மந்திர வாளை அடைய வேண்டும். அதே சமயத்தில் தேவதத்தனையும் கொல்ல வேண்டும். அவனால் தான் அந்த வாளை எடுத்து வர முடியும். வாள் கைக்கு வந்ததும் அவனை... ஹ-ஹா!


வெள்ளைத்தாடி மனிதரைத் தேடிக் காட்டில் அலைந்து திரிந்து அலுத்துப் போய் விடுகிறான் தேவதத்தன். தன்னைச் சதாங்கன் தொடர்வது அவனுக்குத் தெரியாது.


இந்த ஏரியில் இறங்கி கால்களை அலம்பி தாகம் தீரத் தண்ணீர் குடிக்கலாம்.. களைப்பாவது தீரும்.....


என்ன ஆச்சரியம்? ஏரியின் நடுவே வாளேந்திய கையொன்று திடீரென்று தோன்றுகிறதே!


அதோ தெரியும் மந்திர வாளை எனக்காக ஏரியில் குதித்து நீந்திப் போய்க் கொண்டு வா போ!

... தொடரும் ...

"அப்பா!"

அலறி விட்டார் அரசர்.

பவனி போய்க் கொண்டிருந்த பல்லக்கு சட்டென்று நின்றது.

பரக்கப் பரக்க மந்திரிப் பிரதானிகள் ஓடி வந்தனர். அரசரது நெற்றிப் பொட்டிலே ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. ஒரு கையால் நெற்றியை அழுத்திப் பிடித்திருந்தார் அரசர். அவரது இன்னொரு கையில் ஒரு சிறு கல் இருந்தது.

மதியூகிகளான மந்திரி பிரதானிகள் அரசரிடம் காரணம் கேட்கவில்லை. கண்ணுக்கெதிரே காரணம் இருக்கும்பொழுது - மன்னரின் நெற்றிப் பொட்டைப் பதம் பார்த்த கல் இருக்கும்பொழுது-காரணம் கேட்டால், அவர்கள் மதியூகி மந்திரிகளா?

பையன் பொய் சொல்லித் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளப் பார்க்கவில்லை.

"நீ கல் விட்டெறிந்ததன் பலனைப் பார்த்தாயா? என் நெற்றியிலே காயம்பட்டு ரத்தத்தை வருவித்துவிட்டது!"

அதைப் பார்த்த பையன் மிகவும் மன வருத்தமுற்று, "நான் செய்தது தவறு தான்!" என்று ஒப்புக் கொண்டான்.

"அது சரி, எதற்காக இப்படிக் கல்லை விட்டெறிந்தாய்?"

"நான் ஒரு ஏழைச் சிறுவன். என் தாய் தந்தையரும் வேலை வெட்டியின்றிப் பசியினால் வாடுகின்றனர். 'அந்தத் தோட்டத்திலிருந்து இரண்டு மூன்று மாங்காய்கள் அடித்துச் சென்று பசியாற்றிக் கொள்ளலாம். பெற்றோரையும் புசிக்கச் செய்யலாம்'




உடனே கல்லெறிந்த குற்றவாளியைத் தேட நாற்புறமும் ஆட்கள் ஓடினர்.

பதினைந்தே நிமிஷங்களில் காவலர்கள் குற்றவாளியைக் கையும் மெய்யுமாகப் பிடித்து வந்து நிறுத்தினர்.

குற்றவாளி பத்து வயது நிரம்பாத பச்சிளம் பாலகன். அவன் மடியிலே பத்துப் பதினைந்து கற்கள் இருந்து அவனைக் குற்றவாளி என்று நிருபித்தன.

நீதிக்கும் நேர்மைக்கும், உதார குணத்துக்கும், தாராளமனப்பான்மைக்கும் பெயர் போன மன்னர் ரணஜித்சிங் தமது விசாரணையை அங்கேயே தொடர்ந்தார்:

"தம்பி! நீ கல் விட்டெறிந்ததுண்டா?"

"ஆம். விட்டெறிந்தேன்!"

என்று எண்ணினேன்" என்றான் "அவன் மதியூகி மந்திரிகள் குற்றம் சாட்டினர்: "பிறர் தோட்டத்தில் சென்று திருட்டுத் தனமாக மாங்காய் அடிக்க முயன்றது ஒரு குற்றம் கல்லால் அடித்து மன்னரைக் காயப்படுத்தியது மற்றொரு குற்றம். எனவே, இவனுக்குத் தகுந்த தண்டனை அளிக்க வேண்டும்" என்றனர்

அரசர் அந்தப் பையனுக்குத் தகுந்த தண்டனை அளித்துவிட்டார். அவர் அளித்த தண்டனை என்ன தெரியுமா? அந்தப் பையனின் கையில் அவனால் தூக்க முடியாத ஒரு பையைக் கொடுத்துத் தூக்கச் சொன்னார். அந்தப் பைக்குள்ளே ஆயிரம் பொன் நாணயங்கள் இருந்தன.

''தம்பி! இதை எடுத்துக் கொண்டு உன் வீட்டுக்குப் போ. தாய் தந்தையருடன் பசி அறியாமல் ஆனந்தமாக இரு. இதுதான் நான் உனக்கு அளிக்கும் தண்டனை!'' என்று அன்புடன் கூறி அனுப்பிவைத்தார்.

மந்திரி பிரதானிகளுக்கு மன்னரின் இந்தச் செய்கை கட்டோடு பிடிக்கவில்லை. [குற்றவாளிகளுக் கெல்லாம் தண்டனை அளிக்காமல் இப்படி இடம் கொடுத்துக் கொண்டு போனால் நாடு என்னத்துக்கு ஆகும்?' என்று மனதுக்குள் பொருமினர்.

மன்னர் அவர்களது அகத்தில் உள்ளதை முகத்தில் படித்து விட்டார். ''ஏன் நான் அளித்த தண்டனை உங்களுக்குப் பிடிக்கவில்லையா?''' என்றார்.

மந்திரி பிரதானிகளில் ஒருவர், மிகவும் சிரமப்பட்டுத் துணிச்சலை



வரவழைத்துக் கொண்டு, ''இது தண்டனையா, மகாராஜா? இப்படி இருந்தால், நீதியும் நேர்மையும் நமது நாட்டில் சிறிதும் தங்காது!'' என்றார்.

மன்னர் மனத்துள் சிரித்துக்கொண்டார். அந்தச் சிரிப்பு முகத்திலும் படர்ந்தது. ''அந்தப் பையன் மாமரத்தின்மீது எதற்குக் கல்லை விட்டெறிந்தான்? மாங்காயைப் பெறுவதற்குத்தானே?'' என்று கேட்டார்.

'ஆம்' என்று தலையசைத்தனர்.

''அறிவற்ற அந்த மாமரம் அவன் அடிக்கும் அத்தனை கல் அடிகளையும் பொறுத்துக் கொள்வதோடு, அவன் செயலுக்குப் பிரதியுபகாரமாக மாங்காயையும் தருகிறது. அவன் செய்யும் தீமைக்குத் தீமை செய்யவில்லை. நாமோ ஆறறிவு படைத்த மானிடர்கள். தீமைக்குத் தீமை என்ற பல்லவியைப் பாடினோமானால், நாம் மானிட ஜன்மம் எடுத்து என்ன பயன்? கல்லடி பட்டும் மாங்காயைத் தரும் மரத்தின் அளவுக்கு உயர்வது எந்தக் காலம்? அதுவும் அந்தப் பையன் வேண்டுமென்றா செய்தான்? இல்லாமை என்னும் கொடுமை தானே அவனை அப்படிச் செய்யத் தூண்டியது? அதை அகற்றிவிட்டால், அவன் அப்புறம் நல்ல மனிதனாக உலவ முற்படலாம் அல்லவா? அதோடு சட்டமும் திட்டமும் தண்டனை அளிப்பதற்காகவா ஏற்பட்டன? தவறு செய்தவனைத் திருத்துவதற்குத் தானே அவை ஏற்பட்டன? நான் அளித்த இந்தத் தண்டனை மூலம் பையன் திருந்தி விடுவான் என்று நிச்சயம் நம்புகிறேன்!'' என்றார் மன்னர்.

மன்னரின் பேச்சுக்கு மாறு சொல்ல மதியூகி மந்திரிகளுக்கு வாய் ஏது?

பல்லக்கு பழையபடியும் ஜாம் ஜாமென்று புறப்பட்டது. மன்னரும் தாம் அளித்த தண்டனையை நினைத்துப் பார்த்தபொழுது தமது வலியை மறந்தார். ஆண்டவன் அருளால் ஒரு நல்லகாரியம் செய்தோம் என்ற பெருமிதம் அவர் முகத்தில் தவழ்ந்தது.

# இதோ, ஒரு சாதனை!

ஜனவரி மாதம் ஆறும் தேதி கேரள ராஜ்யத்தின் ஒரு பகுதியான கொல்லம், மிகவும் கோலாகலமாகக் காட்சி அளித்தது. எங்கே பார்த்தாலும் கண்ணைக் கவரும் தென்னைக் குருத்துத் தோரணங்களும், தேங்காய் பாக்குக் குலைகளுடன் காகிதப் பூவினால் அலங்கரிக்கப் பட்ட வளைவுகளும், வாழை மரங்களும் காணப்பட்டன. பொதுவாகவே அன்று கேரள மக்கள் யாவரும் உற்சாகத்துடனும் குதூகலத்துடனும் இருந்தார்கள். காரணம், அன்று கேரள மக்களுடைய நெடுநாளையக் கனவு பலித்ததுதான். ஆம்! கேரள மக்களுடைய இரு பகுதிகளான திருவாங்கூரும் கொச்சியும் அன்று ஒன்றாக இணைந்தன!

1952-ம் வருஷம் டிசம்பர் 24-ம் தேதி பாரதத்தின் பிரதமர் நேருஜி அவர்கள் கேரளாவுக்கு விஜயம் செய்து திருவாங்கூருக்கு அருகில் உள்ள கொல்லத்தையும் கொச்சிக்கு அருகில் உள்ள எர்ணாகுளத்தையும் இணைப்பதற்கான இருப்புப்பாதையின் அஸ்திவாரத்தை நாட்டினார். பள்ளத்தாக்குகளையும், ஆறுகளையும், ஏரிகளையும், மலைகளையும் கடந்து செல்லும் இந்த இருப்புப் பாதையைக் கட்டுவதற்குத் தினமொன்றுக்குப் பத்தாயிரம் தொழிலாளர்கள் இரவு பகலாக உழைத்திருக்கின்றனர். அஷ்டமுடி, வெம்பகாடு என்ற இரண்டு ஏரிகளைக் கடக்கப் பாலங்களைக் கட்டுவது மிகக் கடினமான வேலையாகிவிட்டது. தண்ணீருக்குள்ளேயே தொடர்ந்து பல மணி நேரம் இருந்து வேலை செய்யக்கூடிய தேர்ச்சி பெற்றவர்களைக் கொண்டு இப்பாலங்கள் பூர்த்தி செய்யப்பட்டன. பத்தொன்பது ரயில் நிலையங்களைக் கொண்ட இந்த இருப்புப் பாதையில் கேரளாவின் முக்கிய நகரங்களான மாவலிக்கரை, செங்கண்ணூர், திருவல்லா, சென்கனைச்சேரி, கோட்டயம், காயாம்குளம் முதலியவை இணைக்கப்படுகின்றன. இந்த நகரங்கள் கேரளத்தின் வர்த்தகத் துறையில் இன்று உன்னத நிலையில் இருக்கின்றன. 33 பெரிய பாலங்களையும் 435 சிறிய பாலங்களையும் கொண்ட இந்த இருப்புப்பாதையில் 30 அடி முதல் 60 அடி வரை உயரமும் 20 அடி முதல் 35 அடி வரை நீளமும் உள்ள பல பாறைகள் குறுக்கிடுகின்றன. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்த இந்த இருப்புப்பாதையைக் கட்டுவதற்கு 40,000 டன்கள் சிமெண்டும், 14,806 டன்கள் இரும்பும் தேவைப்பட்டன. சுமார் ஆறரைக் கோடி ரூபாய் செலவில் கொல்லம் - எர்ணாகுளம் இருப்புப் பாதை ஐந்தே ஆண்டுகளில் உருப்பெற்றது. இதன் முதல் பகுதியான எர்ணாகுளம் - கோட்டயம் பிரிவு 1956-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 17ம் தேதி திறக்கப்பட்டது. அடுத்த பகுதிதான் ஜனவரி ஆறாந் தேதி திறக்கப்பட்டது.

கொல்லம்-எர்ணாகுளம் இருப்புப்பாதையைக் கேரள கவர்னர் ஸ்ரீ ராமகிருஷ்ண ராவ் திறந்து வைத்தபொழுது கேரள மக்கள் குதூகல ஆரவாரம் செய்தனர். ஆகாயமே அதிரும்படி வெடி முழக்கங்களுடன் கிளம்பிய முதல் ரயில் வண்டியில் உதவி ரயில்வே மந்திரி திரு ஷா நவாஸ் கான், கேரள முதன் மந்திரி ஸ்ரீ நம்பூதிரி பாட், கவர்னர் ஸ்ரீ ராமகிருஷ்ண ராவ் மற்றும் பலரும் பிரயாணம் செய்கையில் வழியெங்கும், ஜன வெள்ளமாகவே இருந்தது. கேரள கலாசாரத்தை ஒட்டி ஆங்காங்கு வாத்திய முழக்கங்களுடன் புதிய ரயிலின் இன்ஜினுக்கு மாலை போட்டு ஆரத்தி எடுத்து, தேங்காய் உடைத்து, பட்டாசுகள் கொளுத்தி மக்கள் ஆரவாரம் செய்தார்கள். இந்த விழாக் காட்சிகளில் சிலவற்றை எதிர்ப்பக்கத்தில் உள்ள படங்களில் காணலாம்.

—நீடாமங்கலம் வேதாந்தம்



1. திறப்புவிழா நடைபெற்ற பந்தலின் அலங்காரத் தோற்றம்.

2. தென்னங் குலைகளால் அலங்காரம் செய்யப்பட்ட புதிய ரயில் இன்ஜின்.

3. விழாவைத் துவக்கி வைக்கத் தலைவர்கள் வருகின்றனர்.

4. விழாவுக்குத் தென்னகத்தின் பல பாகங்களிலிருந்து வந்த பிரமுகர்கள்.

5. கேரள நாட்டுச் சம்பிரதாயப் பண் பாட்டுடன் வரவேற்பு நடைபெறுகிறது.

6. புதிதாகக் கட்டி முடிக்கப்பட்ட நீண்ட ரயில்வே பாலம்.



Worth any price
"And yet priced low"
Nutrine
SWEETS
தி நியூட்ரின் கன்பெக்ஷனரி
கம்பேனி, லிட்., சித்தூர்

# பிள்ளை மனம்...

சிற்றம்பலப் பண்டாரம் மண்டபத்தின் மூலையில் தூரட்டுக் கம்பைச் சாத்தி வைத்து விட்டுக் குடலையில் இருந்த மலர்களைக் கீழே கொட்டினார். தங்க அரளியும், நந்தியா வட்டையும், ரோஜா அரளியுமாகப் பல வர்ணக் குவியல்களாக அவை காணப்பட்டன. அருகில் கிடந்த வாழை நாரை, செம்பில் இருந்த தண்ணீரில் நனைத்து, மலர்களைச் சேர்த்து மாலை கட்ட ஆரம்பித்தார் பண்டாரம்.

"பண்டாரத்தையா! இந்தாங்க பலகாரம்" என்று ஆப்பக்காரக் கிழவி நாலு ஆப்பங்களையும், ஒரு குவளைத் தண்ணீரையும் கொண்டு வந்து வைத்தாள் அவர் எதிரில்.

"வேண்டாம், அம்மா!" என்று சொன்னார் பண்டாரம்.

"ஏங்க ஐயா, உடம்பு ஏதாச்சும் சுகம் இல்லீங்களா?" என்று மிகுந்த அக்கறையுடன் விசாரித்தாள் கிழவி.

"உடம்புக்கு ஒன்றுமில்லை, அம்மா. மனசு தான் இன்று விடிந்ததிலிருந்து சரியாக இல்லை. ஒரே கலக்கமும் குழப்பமுமாக இருக்கிறது" என்று கூறி விட்டு அவர் மாலை கட்டுவதில் மூழ்ந்தார்.

"சாமிக்கே மனசில் கலக்கம் ஏற்பட்டால் நாங்கள் என்ன செய்கிறது?" என்று சொல்லிக் கொண்டே ஆப்பக்காரக் கிழவி ஆப்பங்களை யெல்லாம் எடுத்து வைத்துக்கொண்டு தன் குடிசையை நோக்கி நடந்தாள்.

சிற்றம்பலப் பண்டாரம் மாலை கட்டுவதை நிறுத்திவிட்டுச் சிறிது நேரம் அவள் செல்வதையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பிறகு ஒரு பெருமூச்சுடன், "திருச்சிற்றம்பலம்" என்று சொல்லியவாறு மாலை கட்ட ஆரம்பித்தார்.

கோவிலுக்குள்ளிருந்து மேளச் சத்தம் கேட்க ஆரம்பித்தது. மாலையை எடுத்துக் கொண்டு பண்டாரம் நடராஜர் சன்னிதிக்குச் சென்றார். பயபக்தியுடன் அர்ச்சகரிடம் அதைக் கொடுத்து விட்டு விபூதிப் பிரசாதம் பெற்றுக் கொள்ளும் போது அவர் கரம் இலேசாக ஒருதரம் நடுங்கியது.

"என்ன பண்டாரம்? உமக்கு உடம்பு கிடம்பு சரியில்லையா? ஒரு மாதிரியாக இருக்கிறீரே!" என்று விசாரித்தார் அர்ச்சகர்.

எதிரில் தென்படுகிறவர்கள் எல்லோரும் அவரை அந்தக் கேள்வியையே கேட்டார்கள்.

சரோஜா ராமமூர்த்தி



கணவர் :—போட்டோக்கார ஐயா! நேரம் ஆக்கிக் கொண்டிருக்கீங்களே? என் மனைவி இப்படிச் சிரிச்ச முகமா ரொம்ப நேரம் இருக்க முடியாது. மாறி விடும்...... சீக்கிரம் படம் எடுங்க ஐயா!

---

காலையில் எழுந்தவுடன் திருக்குளத்தில் குளித்தார். வழக்கம் போல் கோயில் தோட்டத்தில் மலர்களைப் பறித்து மாலை புனைந்து வந்து கொடுத்தார். தலைவலியோ, காய்ச்சலோ வேறெதுவும் இருப்பதாகஅவருக்குத் தோன்றவில்லை. ஆனால் உள்ளம் மட்டும் கவலையில் ஆழ்ந்திருந்தது. பண்டாரம் சுரத்தில்லாமல் கோயில் வாகன மண்டபத்தைத் தேடிப் போனார். பெரியதும் சிறியதுமாகப் பல வாகனங்கள் அங்கே இருந்தன. யாளியும், சிம்மமும், மயிலும், ரிஷபமும் வேற்றுமை இல்லாமல் பக்கத்தில் பக்கத்தில் அமர்ந்து இருக்கும் அதிசயத்தை நினைத்துப் பார்த்தவாறு பண்டாரம் சுவர் ஓரமாகத் துணியை விரித்துப் போட்டுப் படுத்துக் கொண்டார்.

மேளச் சத்தம் கேட்டுக் கொண்டே இருந்தது. ஒவ்வொரு சன்னதியாக அர்ச்சகர் நைவேத்தியம் காட்டி, தீபாராதனை செய்து கொண்டே வந்தார். மேளத்தின் பின்னால் பண்டாரமும் சென்று தரிசனம் செய்து விட்டு வருவது வழக்கம். நடராஜரைப் பார்த்து விட்டு வந்தவர் சிவகாமியைப் பார்க்க மறந்து கவலையில் மூழ்கி மண்டபத்தில் படுத்துக் கிடந்தார். பிராகாரத்தில் இருவர் பேசிக் கொண்டே வந்தார்கள்.

''சபேசா! எங்கே உன்னை ஊரிலே நாலைந்து நாட்களாய்க் காணவில்லை? திருவாதிரை உற்சவத்துக்குக் கடைத் தெருவில் வருவல் ஆக வேண்டும். உன்னைத்தான் அனுப்பவேண்டும் என்று நினைத்திருக்கிறேன்'' என்றார் ஒருவர்.

''சாமி காரியத்துக்கு என்னங்க தடை சொல்ல இருக்குது? ஆனால், ஊரிலே எங்க அத்தையம்மா காயலாவா இருக்காங்க. அவங்களைத்தான் போய்ப் பார்த்து வந்தேன். இன்னிக்கோ நாளைக்கோன்னு இருக்குதுங்க. பாவம், அந்த அம்மாவுக்கு ஒரு குறையும் இல்லீங்க. குழந்தை குட்டிகள், பேரன் பேத்திகள் எல்லாம் இருக்குது மங்கையர்க்கரசி, காரைக்கால் அம்மையார் மாதிரி சிவ பக்தி அதிகம். மூத்த பிள்ளை ஒருவர் இருந்தார். குடும்பத்தைத் தாங்குவார் என்று அந்த அம்மா எவ்வளவோ நம்பிக்கையோடு இருந்தாங்க. எவ்வளவோ ஆசையா வளர்த்தாங்க. அந்தப் பிள்ளை காஷாயம் வாங்கிக் கொண்டு பண்டாரமா போயிட்டாரு. ஊட்டி வளர்த்த பிள்ளை மொட்டைத் தலையும், கோவணமுமாக நின்றால், பெற்ற வயிறு எப்படி இருந்து துடிச்சிருக்குமென்று பாருங்க. 'சிற்றம்பலம்! நான் இருக்கச்சே எண்டாப்பா இந்தக் கோலம்'னு அழுதார்களாம். 'என்னை எடுத்துப் போட்டுவிட்டு நீ எப்படி வேணுமானால் இருடா' என்று சொன்னார்களாம்...''

அந்தத் தாயின் தெய்விக அன்பின் வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் சிறிது நிறுத்தினான் சபேசன். சுவர் ஓரத்தில் படுத்திருந்த பண்டாரம் சோர்ந்த உள்ளத்துடன் விஷயத்தைக் கிரகிப்பதற்கு முயன்றார்.

''ஹூம்...'' என்று பெருமூச்சு விட்டார் உடன் இருந்தவர். குழந்தையைப் பெற்று வளர்த்து உயிருடன் பறி கொடுப்பதை விடக் குழந்தையே இல்லாமல் இருப்பது எவ்வளவோ நல்லது என்று அவருக்குத் தோன்றியது. அவர் வருத்தத்துடன், ''பெற்ற தாய் அப்படிக் கேட்டும் அந்தப் பிள்ளை சாமியார் ஆயிட்டுதா?'' என்று கேட்டார்.

''ஆமாங்க. எனக்குத்தெரியாதுங்கஅவரை. நான் சின்னக் குழந்தையாம். துயரம் தாங்காமல் அழும் தாயைப் பார்த்து அவர் சொன்னாராம். 'தாயே! உனக்கு என்னைத் தவிர இரண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள்; இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். உன்னைச் சந்தோஷப்படுத்தி, உன் சொற்படி கேட்க அவர்கள் போதும். என்னை இறைவன் பணிக்காகக் கொடுத்து விடுங்கள்' என்று கூறி அந்த அம்மாளுடைய காலில் விழுந்து கும்பிட்டு விட்டுப் போய் விட்டாராம்......''

''அப்புறம்?'' என்று விஷயத்தை மேலும் கேட்க ஆவலாக இருந்தார் உடன் இருந்தவர். தாம் வீட்டை விட்டுக் கிளம்பிய பிறகு அங்கே என்ன நடந்தது என்பதை அறியப் பண்டாரமும் தான் ஆவலாக இருந்தார். தம்மை அவர்களுக்குக் காட்டிக் கொள்ளாமல் யாளி வாகனத்தின் பின்னால் நகர்ந்து சென்று உட்கார்ந்துகேட்க ஆரம்பித்தார்பண்டாரம்.

''அப்புறம் என்னங்க? எங்க அத்தையம்மாள் சரிவரச் சாப்பிடாமல் பட்டினி கிடந்தாங்க. 'நடராஜா! இப்படி என் குழந்தையை ஆண்டி ஆக்கி விட்டாயே'ன்னு தெய்வத்திடம் முறையிட்டாங்க. அந்தப் பிள்ளை வீட்டை விட்டுப் போன பிறகு அந்த அம்மாவின் முகத்தில் சிரிப்பே மறைந்து போச்சாம். தெருவிலே எந்தச் சாமியார் வந்தாலும் தன் பிள்ளையின் அங்கஅடையாளங்களைச் சொல்லி, 'பார்த்திருக்கிறீயா?' என்று விசாரிப்பாங்களாம். ஒரு தடவை, ஒரு கிழச்சாமியார் அந்த மாதிரி பிள்ளையைத் திருவண்ணாமலை தீபத்தில் பார்த்ததாகச் சொன்னாராம். அத்தையம்மா பிள்ளையைப் பார்க்கத் திருவண்ணாமலைக்குக் கிளம்பி விட்டாங்க...''

பண்டாரம் திருவண்ணாமலைத் தலத்தை நினைவுபடுத்திக் கொண்டார்.

வெளிப் பிராகாரத்தில் சன்னதிக்குள் போகும் வாசலில் இருந்த பெரிய விநாயகரின் முன்பு உட்கார்ந்திருந்தார் பண்டாரம். சமீபத்தில்தான் கார்த்திகை தீப உற்சவம் முடிந்திருந்தது. கோவிலுக்குள் கூட்டம் இருந்தது. பெரிய கோபுர வாசலைத் தாண்டி ஒரு பெண்மணி இடுப்பில் இடுக்கிய மூட்டையுடன் பிராகாரத்துக்குள் வந்தாள். பண்டாரம் யதேச்சையாக அந்தப் பக்கம் திரும்பினார். அந்தப் பெண்மணி வேறு யாரும் இல்லை. அவர் தாய்தான். ஐந்தாறு வருஷங்களுக்கு அப்புறம் தாய் என்றும் மகன் என்றும் விட்டுப்போன உறவை ஒட்ட வைத்துக் கொள்ள அவர் விரும்பவில்லை. உலகமெலாம் ஈன்ற உண்ணாமுலை அம்மையே அவருக்குத் தாய் என்று வைராக்கியம் பேசியது அவர் உள்ளம். 'விடுவிடு' என்று எழுந்து கோவிலின் பின்புறமாகச் சென்று மறைந்து விட்டார். மகனைத் தேடி வந்த அந்தத் தாய்—அவரைப் பெற்றவள் ஏமாந்து சோர்ந்துதான் வீடு திரும்பி இருக்க வேண்டும்.

"ஐயோ பாவம்! 'பிள்ளை மனம் கல்' என்று தெரியாமலா சொன்னாங்க? அப்புறம் அந்த அம்மாள் மகனைப் பார்க்கவே இல்லையா?..."

"பார்க்கவே இல்லையே. மகனுக்குக் கல்யாணம் என்று யார் மூலமாகவோ தகவல் அனுப்பினாங்களாம். அந்தப் பெண் சிற்றம்பலம் அருமையாக வளர்த்த பெண்ணாம்..." என்றான் சபேசன்.

சிற்றம்பலப் பண்டாரம் தம் சகோதரியை நினைத்துக் கொண்டார். ஷண்முகவடிவு அழகானவள். அவர் உடன்பிறந்த அவ்வளவு பேர்களைக் காட்டிலும் அவளிடம் அவருக்கு அலாதி விசுவாசம். அவள் குழந்தையாக இருந்தபோது சிறிது அழுதாலும் பொறுக்க மாட்டார். தொட்டிலை ஆட்டுவார். அப்படியும் அழுகை ஓயவில்லை என்றால் தாய் செய்து கொண்டிருக்கும் வேலைகளைத் தாம் செய்வதாகக் கூறி, குழந்தையை அவளிடம் கொடுப்பார். தங்கச்சிக்குப் பூ வாங்கித் தருவதில் அலாதி விருப்பம் கொண்டவர். படிப்புச் சொல்லிக் கொடுத்தது அவர்தான். அவர் வீட்டை விட்டுக் கிளம்பியபோது அவளுக்குப் பத்து வயசு இருக்கும். சின்னச் சிலை ஒன்று சிங்காரித்துக் கொண்டு எதிரே வந்து நிற்பது போல் இருந்தது அவள் தோற்றம். அவரைப் பார்த்துக் கண்கலங்கி நீர் பெருக, "அண்ணா!" என்று அவள் அழைத்தபோது, அவர் மனம் சற்றுப் பேதலிக்கத்தான் செய்தது. அம்மாதிரி உடன்பிறப்புக்குக் கல்யாணம் என்று கேள்விப்பட்டார். மாப்பிள்ளை சொத்துள்ள பையன் என்று சொன்னார்கள். ஆனால், அவர் போகவில்லை. தங்கச்சியின் கல்யாணத்தன்று காஞ்சியில் ஏகாம்பரநாதனுக்கும், காமாட்சிக்கும் திருமணம். உலகத்தின் அன்னைக்கும், அப்பனுக்கும் திருக்கல்யாணம். போய்ப் பார்த்து ஆனந்தம் அடைந்தார். குடும்பத்தில் பல கல்யாணங்கள் நடந்தன. பிறகு பல வருஷங்கள் கழித்து அவர் தந்தை காலமாகிவிட்டார் என்று கேள்விப்பட்டார்.......

சிற்றம்பலப் பண்டாரம் 'உஸ்' என்று மூச்சு விட்டுத் தூணில் சாய்ந்து கொண்டு



குடை பிடிப்பவர்:—உஷ்......ஷ்...அந்த போலி குரு. பேசிப் 'போர்' அடிக்கும் குப்பண்ணு. அவர் நேற்று இரவு தூங்கும்போது சொப்பனத்தில் வந்துவிட்டார். ஐயா!

மற்றவர்:—ஐயையோ! அப்புறம் நீங்கள் என்ன செய்தீர்கள்!

குடைக்காரர்:—சட்டென்று விழித்துக் கொண்டு விட்டேன்!

மண்டபத்தின் விதானத்தை ஒரு தடவை அண்ணாந்து பார்த்தார்.

சபேசன் கூறுவதைக் கேட்டுக் கொண்டிருந்த பெரியவர், "என்னவோ அப்பா! பெற்ற தாய்...அவள் மனசில் என்ன குறை இருக்கிறதோ!" என்று அங்கலாய்த்தார்.

"என்ன குறை? 'சிற்றம்பலம், சிற்றம்பலம்' என்று ஓயாமல் புலம்புறாங்க. மகனைச் சாவதற்கு முன் பார்க்க வேண்டும் என்கிற ஆசைதான் அந்த அம்மாளின் மனசில் நிறைஞ்சிருக்கு. வேறே என்னங்க குறை இருக்கப் போவுது? 'நாங்க எங்கே போய் அண்ணாவைத் தேடறது அப்பா. இப்படி ஒரு ஆத்மா கிடந்து துடிக்கிறதே' என்று பிள்ளைகளும், பெண்களும் சொல்லி வருத்தப்படுறாங்க.." என்று துயரத்துடன் கூறினான் சபேசன்.

இருவரும் பேசிக் கொண்டே பிராகாரத்தை வலம் வந்து வெளியே போய் விட்டார்கள்.

சிற்றம்பலப் பண்டாரத்தின் மனம் ஏனோ கலங்கிப் போயிருந்தது. அதன் காரணம் அவருக்கு இப்பொழுது விளங்கியது. அவரைப் பெற்ற தாய் உயிருக்கு மன்றாடிக் கொண்டு, சாகும் தறுவாயில் இருக்கிறாள். 'தான் ஆடாவிட்டாலும், தன் சதை ஆடும்' என்று கூறுவார்கள்.

'தாயைப் போய்ப் பார்த்து வருவோமா?' என்று யோசித்தார் அவர். அவர் உள்ளம் அவரைப் பார்த்துச் சிரித்தது.

'தாயாவது, தந்தையாவது? இந்தப் பந்தங்களெல்லாம் வேண்டாம் என்று விட்டு வந்து முப்பது வருஷங்களுக்குமேல் ஆகிவிட்டனவே? இனிமேலா இந்தப் பந்தங்களில் போய்ச் சிக்கிக் கொள்ள வேண்டும்? அவரவர் வந்த

வழியைப் பார்த்துக் கொண்டு போய்ச் சேருகிறார்கள்! இதற்கு நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?' என்று உள்ளம் அவரைச் சாந்தப் படுத்தப் பார்த்தது.

சிற்றம்பலப் பண்டாரத்தின் மனக்கண் முன் அவர் தாயின் முகம் தெரிந்தது. அவர் வீட்டை விட்டுக் கிளம்புகிறபோது அந்த அம்மாள் இளமையோடுதான் இருந்தார்கள். பசும் மஞ்சளைப் பூசி நெற்றியில் வட்ட வடிவமாகக் குங்குமம் வைத்துக் கொண்டிருப்பார்கள். காதில் சிவப்புக் கல் தோடுகள். மூக்குத்திகள் பளிச்சென்று ஒளி வீசும். கழுத்தில் திருமாங்கல்யத்துடன், மூன்று வடம் பிரண்டைச் சங்கிலி பின்னிக் கொண்டு இருக்கும். சிரித்துச் சிரித்துப் பேசுவார்கள். குரல் மிகவும் மெதுவாகத்தான் இருக்கும். கிருத்திகை உபவாசமும், கார்த்திகைச் சோமவாரமும் விரதம் இருப்பார்கள்.

சிற்றம்பலப் பண்டாரத்தின் உள்ளம் அமைதி இல்லாமல் தவித்தது. என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார். எதிரே இருந்த நால்வரின் சிலைகளையும் பார்த்து மனத்துக்குத் தெளிவைக் கொடுக்கும்படி பிரார்த்தனை செய்தார். அப்பொழுது அருகே இருந்த கோயில் நந்தவனத்திலிருந்து ஈனமான குரல் ஒன்று கேட்டது.

''அம்மாவ்......'' என்று உருக்கமாக அரற்றியது ஒரு பசு. பசுவின் குரலைக் கேட்டுச் சிற்றம்பலப் பண்டாரம் தூணில் சாத்தியிருந்த கம்பை எடுத்துக் கொண்டு மாட்டை விரட்டுவதற்காக நந்தவனத்துக்குள் சென்றார். செடிகள் எல்லாம் கப்புங்கிளைகளுமாக மலர்கள் குலுங்க நின்றிருந்தன. மாடு மேய்ந்து விட்டால், கடவுளுக்கு மலர்கள் இல்லாமல் போய் விடுமே?

தோட்டத்துள் சிவலைப் பசு ஒன்று இங்கும் அங்குமாக அலைந்து கொண்டிருந்தது. கீழே மண்டிக் கிடந்த புல்லை அது மேயவில்லை. பசுவைக் கவனித்தார் பண்டாரம்; தளதளவென்று வயிறு பருத்திருந்தது. மடியின் கனம் தாங்க முடியாமல் பசு தவித்தது. அது ஒரு சினைப் பசு. அது தவிக்கும் தவிப்பைப் பார்த்துக் கொண்டே நின்றார் பண்டாரம். ''அம்மாவ்'' என்று ஈனமான குரலுடன் அது வானத்தை அண்ணாந்து பார்த்துக் கத்தியது. கீழே படுத்துப் புரண்டது. எழுந்தது. நடந்தது. மீண்டும் படுத்தது. மறுபடியும் கத்தியது. அவர் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்த போது, பசுவின் கர்ப்பத்திலிருந்து கன்று வெளிப்பட்டுக் கீழே விழுந்தது. பசு கண்களில் பெருகும் நீருடன் குதித்து எழுந்தது. கீழே கிடக்கும் தன் கன்றைப் பரிவோடு நக்கிக் கொடுத்தது. ஆசையுடன் முகர்ந்து பார்த்தது. உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு அதற்குப் பால் ஊட்டியது. பண்டாரம் பிரமித்துப் போய் நின்றார்.

'மிருகத்தின் தாய்மை உணர்ச்சியே இவ்வாறுனால்...?' பண்டாரத்தின் வாயிலிருந்து 'அம்மா' என்னும் ஒலி அவரை அறியாமல் வெளி வந்தது.

தன்னைப் பெற்ற தாயின் ஆசையை எப்படியும் நிறைவேற்றித்தான் தீர வேண்டும், அந்த மகத்தான கடமைக்குத் தாம் தலை வணங்கித்தான் ஆகவேண்டும் என்று தீர்மானித்தவர் போல் பண்டாரம் தம் தாயைப் பார்க்க அந்த ஊரை விட்டுக் கிளம்பினார்.

## பிப்ரவரி மாதச் சிறுகதைப் போட்டி

1. மாதந்தோறும் நடக்கும் இந்தச் சிறுகதைப் போட்டியில் எழுத்தாளர்கள் எல்லோரும் கலந்து கொள்ளலாம்.

2. எழுத்தாளர்கள் சொந்தமாகவே கதைகள் புனைந்து அனுப்ப வேண்டும். கதைகள் கல்கியில் ஆறு பக்கத்திலிருந்து பத்து பக்கம் வரையில் வெளியிடக்கூடியதாக இருக்கலாம்.

3. ஒவ்வொரு மாதமும் அந்தந்த மாதப் போட்டிக்கு வந்த கதைகளில் சிறந்ததற்கு நூறு ரூபாய் பரிசு வழங்கப்படும்.

4. பிப்ரவரி மாதப் போட்டிக்கு பிப்ரவரி 1-ந் தேதியிலிருந்து 28-ந் தேதி வரை கதைகள் எழுதியனுப்பலாம். பிப்ரவரி மாதப் போட்டிக்கு வந்த கதைகள் மார்ச் மாதம் முழுதும் பரிசீலனை செய்யப்படும். பரிசு பெற்ற கதை ஏப்ரல் மாதத்தில் பிரசுரமாகும். அதேபோல் அந்தந்த மாதக் கதைகள் அடுத்த மாதத்தில் பரிசீலனை செய்யப்பட்டு, அதற்கடுத்த மாதத்தில் பிரசுரமாகும்.

5. கதைகளை நல்ல காகிதத்தில் இடைவெளிகள் விட்டு ஒரே பக்கத்தில் எழுத வேண்டும். காகிதத்தின் மறு பக்கத்தில் எழுதக் கூடாது.

6. தேர்ந்தெடுக்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற விரும்புவோர் அவற்றுடனேயே போதிய தபால் பில்லைகள் வைத்து அனுப்ப வேண்டும். தபால் பில்லைகள் வைத்து அனுப்பாதவற்றைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.

7. போட்டிக் கதை சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்வதற்கில்லை.

8. தேர்ந்தெடுத்த கதைகளைத் திருத்துவதற்கும் குறைத்து வெளியிடுவதற்கும் ஆசிரியருக்குப் பூரண உரிமை உண்டு.

— ஆசிரியர், கல்கி



# ஒரு புதிய முறையில் பழைய டிரைபின் தயாரிப்பு

6 நீளத்தில் பாதியாக துண்டித்த வாழைப்பழம், கஸ்டர்ட் (பிரௌன் அண்ட் போல்ஸன் கஸ்டர்ட் பவுடர் கொண்டு தயாரித்தது) ஸ்டிராபெரி ஜாம் 1 கப் கிரீம். வாழைப்பழத்தின் ஒரு பாதியில் ஜாம் தடவி மற்றொரு பாகத்தை அதன் மேல் வைத்து, இலேசாக ஒன்று சேர்த்து, ஒரு கண்ணாடி பாத்திரத்தில் அடுக்காக வைக்கவும், கஸ்டர்டை விட்டு, கெட்டியான நுரையாக மாறும் வரை கிரீமைக் கடைந்து, டிரைபின் மீது விடவும். உடைத்த பாதாம் பருப்பு, பிஸ்தா பருப்பு கொண்டு அலங்கரிக்கவும்.

## பாலின் மூலம் ஆரோக்கியம்

குழந்தைகள் வளரும், ஆடை நிரம்பியதும், ருசியுள்ளதும், ஆரோக்கியமளிப்பதுமான கஸ்டர்டை விரும்புகிறார்கள். இதில் ஆரோக்கியமளிக்கும் பால் சேர்த்துள்ளது, பிரௌன் அண்ட் போல்ஸன் கஸ்டர்ட் பவுடர் முற்றிலும் ஒரு சைவ தயாரிப்பு என்பது ஞாபகமிருக்கட்டும். நீங்கள் அடுத்தத்தடவை கடைக்குச் செல்லும்பொழுது, பிரௌன் அண்ட் போல்ஸனின் இதர வகைகளான ரெயின்ஸி, பேடண்ட் கார்ன்பிளவர் மற்றும் பிளமாஞ்சையும் கேட்டு வாங்குங்கள்.




## இலவசம்

ருசிமிக்க சமையல் செய்யும் முறை கொண்ட புத்தகம் வேண்டுவோர் இந்தப் பாரத்தை பூர்த்தி செய்யவும்.

இங்கிலீஷ் பாஷையிலுள்ள சமையல் புஸ்தகம் ஒன்று எனக்கு அனுப்பவும்.

என் பெயர் ______________________

என் விலாசம் ______________________

______________________

தபால் செலவிற்காக 15 நயா பைசா ஸ்டாம்பு அனுப்பியுள்ளேன்.

டிப்பார்ட்மென்ட்: KLK—1 கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட். தபால் பெட்டி நெ. 994—பம்பாய்-1



**கார்ன் பிராடக்ட்ஸ் கோ (இந்தியா) பிரைவேட் லிட்.**

ஏஜெண்டுகள்: பாரி அண்டு கம்பெனி லிமிடெட்



*புதுமை பெறுக!*
*இதம் பெறுக!*
*நேர்மையாய் இருங்கள்! நாள்முழுதும்!*

மணமுள்ள சார்மிஸ் டால்கம் பௌடர் உபயோகித்த பின் நீங்கள் பெறும் உணர்ச்சிகள் இவை. சார்மிஸ் குளுமையும் புத்துணர்ச்சியும் அளிக்கிறது ... உன்னத மனோரம்மிய மணம் கொண்டது.




# சார்மிஸ்
## டால்கம் பவுடர்

உன்னத. மனோரம்மிய மணத்துடன்.

---

# பாலுஸ்ரீ பெனிபிட் சிட் பண்டு
## (பிரைவேட்) லிமிடெட்

*வீணு விஹார்"*

17 A. ஸையான் - மதூங்கா எஸ்டேட்
பம்பாய் - 22

### குறுகிய கால ஏலச் சீட்டுகள்

2 வது ஞாயிற்றுக்கிழமை ஏலங்கள் ... 1958 பிப்ரவரி மாதச் சீட்டுகள்
சேரக் கடைசி தேதி 8 - 2 - 58 ... முதல் ஏலத் தேதி 9 - 2 - 58

25 மாதங்கள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | G | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | H | ரூ. 15/- | ரூ. 375/- |
| F | ரூ. 25/- | ரூ. 625/- | I | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக்கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது

(போர்டார் உத்திரவுப்படி) — எம். வி. சுப்ரமணியம் மானேஜிங் டைரக்டர்

**எங்கள் சேவை உங்களுக்குத்தேவை**

விளையாட்டு மன்னர்கள் (10)

# கைப்பந்தில் வல்லவர்கள்

சென்னை நகரசபையின் பிரசித்தி பெற்ற எழும்பூர் விளையாட்டு மைதானத்தில் எழும்பூர் நண்பர்கள் ஐக்கிய சங்கத்தினர் கைப்பந்து, வளையப் பந்து, பூப்பந்தாட்டப் போட்டிகளை வெகு விமரிசையாக நடத்தினர். மூப்பது வருஷங்களாக இந்த விளையாட்டு விழா தொடர்ந்து அங்கே நடைபெற்று வருகிறதென்றால் அதுவே பெருமைப்படக் கூடிய காரியமல்லவா?

ஜனவரி பதினைந்தாம் தேதி தென்னிந்திய ரயில்வே விளையாட்டுக் குழுவினருக்கும் தாஜ் மகால் கோஷ்டியினருக்கும் கைப் பந்தாட்டத்தின் இறுதி விளையாட்டு நடைபெற்றது. இந்த விளையாட்டைப் பார்ப்பதற்குச் சென்னை நகரமே திரண்டு வந்து விட்டதோ என்று எண்ணும்படி இருந்தது. கூட்டம். விளக்குக் கம்பங்களையும், மரங்களையும், சுவர்களையும் ரசிகர்கள் விடவில்லை. இந்தக் குதூகலமான கூட்டத்துக்கு மத்தியில் இரு கோஷ்டிகளுமே தங்கள் தங்கள் திறமையைக் காண்பித்தனர். எந்தக் கோஷ்டிக்கு வெற்றி கிடைக்குமோ என்று தெரியாமல் மக்கள் திகைத்துத் திணறும்படி விளையாட்டு விறுவிறுப்போடு அமைந்திருந்தது. கடைசியில் தென்னிந்திய ரயில்வே கைப்பந்து விளையாட்டுக் குழுவினர் வெற்றியடைந்து விருது பெற்றனர்.

தென்னிந்திய ரயில்வே விளையாட்டுக் குழுவினரின் வெற்றிக்குத் திரு அருணாசலம், திரு ஆதிக்கண்ணு, திரு பழனிசாமி ஆகிய மூவரது விளையாட்டுத் திறமையே காரணமாக அமைந்தது. திரு பழனிசாமியிடம் நல்ல திறமை இருக்கிறது; திறமையைப் பயன்படுத்தினால் கைப்பந்தாட்ட உலகில் அவருக்கு நல்ல எதிர் காலம் உண்டு. திரு அருணாசலமும் திரு ஆதிக்கண்ணுவும் சென்னை ராஜ்யத்தின் சார்பில் வெளி நாடுகளுக்குச் சென்று தமிழ் நாட்டுக்குப் புகழ் தேடித் தந்தவர்கள்.

சுறுசுறுப்பும் கலகலப்பும் மிகுந்த திரு அருணாசலம் இருபத்தைந்து வயது நிரம்பிய இளைஞர். மதுரைக் கல்லூரியிலே கல்வி கற்றுத் தமது இன்டர் வகுப்பை முடித்தார். விளையாட்டுக் கலையிலுள்ள ஆர்வம் படிப்பை விட மேம்பட்டு நின்றது. நாள் முழுவதும் அவர் கைப்பந்தும் கையுமாய்ப் பயிற்சி பெற்றார். முயற்சி மெய் வருத்தக் கூலி தருமல்லவா? சென்னை ராஜ்யக் கைப் பந்து விளையாட்டுக் குழுவினருக்குத் தலைமை வகிக்கும் தகுதியைப் பெற்றிருக்கிறார். 1954ம் வருஷம் சைனாவுக்கு விஜயம் செய்த கைப் பந்துக் குழுவினரில் இவரும் ஒருவர்.



பந்தைப் பலமாகத் தாக்கி யடிப்பதிலும், இடம் பார்த்துத் தள்ளுவதிலும் சமர்த்தர்.



வெளி நாடு சென்ற மற்றொரு ஆட்டக்காரரான திரு ஆதிக்கண்ணு ஸ்ரீ வைகுண்டம் தாலுக்காவில் முள்ளன்விளையில் பிறந்தவர். முதன் முதலாக அவரது பெருமை சாத்தூர் ராமநாதன் ஞாபகார்த்தப் பந்தாட்டப் போட்டியில் தெரிந்தது. 1954-ம் வருஷம் திருவனந்தபுரத்தில் நிகழ்ந்த தேசிய கைப் பந்தாட்டப் போட்டியில் அவர் கலந்து கொண்டார். அவரது இணையற்ற ஆட்டத்தைக் கண்டு ஜப்பான் தலைநகரான டோக்கியோவில் நிகழ்ந்த ஆசிய வெற்றி வீரர் போட்டிக்கு இந்திய கோஷ்டியில் ஆடத் தேர்ந்தெடுக்கப்பட்டார். 1955ம் வருஷம் ரஷ்யக் கைப்பந்தாட்டக் குழுவினருக்கு எதிராக ஆடி ரஷ்யக் கைப்பந்தாட்டப் பயிற்சியாளர் திரு கோலோமோலோவின் பாராட்டுதலைப் பெற்றார். அவரது பாராட்டுதல் இளைஞர் ஆதிக்கண்ணுவின் உற்சாகத்தை அதிகப்படுத்தியது. அதனால் அவர் 1956ம் வருஷம் பாரிஸில் நிகழ்ந்த உலகக் கைப்பந்தாட்டப் போட்டியில் கலந்து கொள்ளும் வாய்ப்பு கிட்டியது. இரண்டு வருஷங்களாகத் தென்னிந்திய ரயில்வே விளையாட்டுக் குழுவினருக்குச் சென்னை ராஜ்யத்தில் கிடைத்த வெற்றிக்குத் திரு ஆதிக்கண்ணுவின் ஆட்டமும் ஒத்தாசை செய்தது.

நல்ல உயரமும் திடகாத்திரமும் படைத்தவர் திரு ஆதிக்கண்ணு. பந்தை இடது கையினால் தாக்கியடிப்பதில் அவர் நிபுணர்.

விரைவில் இவ் விளைஞர்கள் நல்ல பயிற்சி பெற்றுக் கைப்பந்தாட்ட உலகில் சென்னை ராஜ்யத்துக்கு வெற்றியும் புகழும் தேடித் தருவார்களாக.

— குண்டுமணி

# படித்துப் பாருங்கள்

## திருக்குறள் புது உரை (சுருக்கம்)

திருக்குறளுக்குப் பத்து உரை ஆசிரியர்கள் உரை எழுதியிருக்கிறார்கள். அந்தப் பத்து பழைய உரைகளுள் பரிமேலழகர் உரையே சிறந்தது என அறிஞர்களால் கொள்ளப்பட்டு அதுவே போதிக்கப்பட்டும் வருகிறது. பரிமேலழகர் மிகச் சிறந்த அறிஞர் என்பதில் சந்தேகமில்லை. ஆயினும் சில குறள்களுக்கு அவர் எழுதியுள்ள உரை வள்ளுவரது உண்மையான எண்ணத்தைத்தான் பிரதிபலிக்கிறதா என்ற சந்தேகம் தற்காலத்தில் ஏற்படத்தான் செய்கிறது. சுமார் அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட பரிமேலழகர் உரை அந்தக் காலத்துக்கு மிகவும் பொருத்தமாக இருந்திருக்கலாம். அக்காலச் சூழ்நிலையையும் எண்ணங்களையும் பிரதிபலிப்பதாக இருக்கலாம்.

ஆனால் காலம் மாற மாற, மனித சமுதாயம் முன்னேற்றம் அடைய அடைய, மக்களின் எண்ணங்களும் மாறி வருகின்றன. அப்படி இக்காலச் சூழ்நிலையில் பார்க்கும் போது பரிமேலழகர் உரையில் சிலவற்றை ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. இதோ ஒருஉதாரணம்.

தவம் என்ற அதிகாரத்திலே இரண்டாவது குறள் :

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
அஃதிலார் மேற்கொள் வது.

இக் குறளுக்குப் பரிமேலழகர் உரை யாவது: தவத்தினால் பயன் உண்டாவது முன் தவமுடையார்க்கே. ஆதலின் அந்த முற்றவமில்லாதார் தவத்தினை மேற்கொள்வது அவம் (பயனில்லா முயற்சி) என்பது.

சிறிது யோசித்துப் பார்த்தால் இக்காலத்திய எண்ணங்களுக்கு இந்த உரை சிறிதும் பொருத்தமில்லை என்பது தெரிய வரும். முற்பிறப்பிலே தவம் செய்துவிட்ட குறை உள்ளவர்களுக்குத்தான் இப் பிறப்பில் செய்யும் தவமும் பலிக்கும் என்றால் யார் தவத்தை மேற்கொள்ள முடியும்? முற்பிறப்பில் தவம் செய்து விட்ட குறை உள்ளதா என்று எப்படிக் கண்டறிவது? ஆகவே தவத்தை மேற்கொள்வதில் உள்ள ஊக்கம் குறையுமல்லவா?

இன்னொரு குறளையும் பார்ப்போம். புகழ் என்ற அதிகாரத்தில் ஆறுவது குறள் :

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று.

மக்களாய்ப் பிறந்தால் புகழுக்கு ஏதுவாகிய குணத்தோடு பிறக்க; அக்குணமில்லாதார் மக்களாய்ப் பிறத்தலின் விலங்காய்ப் பிறத்தல் நன்று என்பது பரிமேலழகர் உரை.

மனிதன் பிறக்கும்போதே எப்படிப் புகழுக்கு உரிய குணங்களுடன் பிறக்க முடியும்? அது தம்முடைய விருப்பத்தைப் பொறுத்தா இருக்கிறது? மனிதனைப் புகழ் வந்து அடைய எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன. ஆகவே பிறக்கும்போதே புகழுடன் பிறப்பான் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அப்படிப் பிறக்காதவனை 'விலங்காகப் பிறப்பதே மேல்' என்று சபிப்பது நியாயமாகுமா? அது தான் வள்ளுவரது எண்ணமாக இருக்குமா?

இவை போன்ற சந்தேகங்களையெல்லாம் நாமக்கல் கவிஞர் திரு ராமலிங்கம்பிள்ளை அவர்கள் தமது திருக்குறள் புது உரையில் தீர்த்து வைத்து விட்டார்.

முதலில் குறிப்பிட்ட குறளுக்குக் கவிஞர் எழுதியுள்ள உரை பின்வருமாறு :

தவம் என்பது 'தவ இலக்கணம்' உள்ளவர்களுக்குத்தான் பலிக்கும். அந்தத் தவ இலக்கணம் இல்லாதவர்கள் தவத்தை மேற்கொள்வது பயனற்றது.

'தவ இலக்கணம் என்பது என்ன' என்று இதற்கு முந்திய குறளில் கூறப்படுகிறது! தனக்கு வரும் துன்பங்களைச் சகித்துக் கொள்வதும் பிற உயிர்க்குத் துன்பம் செய்யாதிருப்பதும் தவத்தின் இலக்கணமாகும்.

இரண்டாவதாகக் குறிப்பிட்ட குறளுக்கு நாமக்கல் கவிஞரின் புது உரை :

தோன்றில்-மக்களிடையில் முன்னால் வந்து தோன்றினால் ; புகழொடு தோன்றுக : (சாமர்த்தியப்) புகழொடு தோன்றுக. அஃது இலார் : அந்த (சாமர்த்தியப்) புகழ் இல்லாதவர்கள் ; தோன்றலின் தோன்றாமை நன்று : மக்களுக்கிடையே முன்வருவதைக் காட்டிலும் மறைவாக இருந்துவிடுவதே மேல்.

கவிஞரது புது உரை, இப்படி முற்றிலும் வேறுபட்ட புது உரையாக இருப்பதோடு மட்டும் அல்லாமல் மிக எளிய நடையில் அழகாக எழுதப்பட்டிருக்கிறது. மற்ற உரைகளை விட இது ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இருக்கிறது. இது போலவே ஒவ்வொரு குறளுக்கும் மிகச் சிறந்த முறையில் கவிஞர் உரைகொடுத்திருக்கிறார். கவிஞரின் உரைகள் பகுத்தறிவுக் கண் கொண்டு பார்ப்பவர்களும், பழைய பண்டித முறைகளில் பற்றுக் கொண்டுள்ளவர்களும் விரும்பி ஏற்கும் வண்ணம் அமைந்திருக்கிறது. கவிஞரின் ஆழ்ந்த அறிவும், ஆராய்ச்சித் திறனும், தமிழ்ப் பற்றும், கவி இதயமும் ஒவ்வொரு குறளின் புதுஉரையிலும் சுடர்விட்டு மின்னுவதைக் காண முடிகிறது.

நாமக்கல் கவிஞரது புது உரையைப் பத்து ரூபாய் கொடுத்து வாங்க முடியாதவர்கள் அதன் சுருக்கத்தை இரண்டு ரூபாய்க்குப் பெற்றுக் கொள்ள வசதி செய்துள்ள கவிஞர் பதிப்பகத்தாரை எவ்வளவு பாராட்டினாலும் தகும். இந்தச் சுருக்கத்தில் திருக்குறள் மூலம் இடது புறத்திலும் அதற்கு நேராகக் கவிஞரது புது உரை வலது புறத்திலுமாகச் சௌகரியமாகப் படித்துப் பயனடையும்படி அச்சடிக்கப்பட்டிருக்கிறது. முதலில் அதிகார அகராதியும் கடைசியில் பாட்டு முதற் குறிப்பு அகராதியும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் வாங்கிப் படித்துப் பயனடைய வேண்டிய அருமையான நூல் திருக்குறள் புது உரைச் சுருக்கம்.

பிரசுரம் : கவிஞர் பதிப்பகம், கோயமுத்தூர், விலை ரூபாய் 2.

# உங்கள் கேசத்தை அதிக கருமையுடனும் பகட்டுடனும் வைக்க குளிர்ச்சியான வெண்ணிற ப்ரில்க்ரீம் உபயோகியுங்கள்



சுபாஷ் குப்தே
புகழ்பெற்ற இந்திய கிரிக்கெட் பௌலரான இவர், வெற்றிபெறும் மற்றவர்களைப்போல் கேசத்தை அதிக பளபளப்புடனும் கருமையுடனும் வைப்பதற்கு எப்பொழுதும் ப்ரில்க்ரீம் உபயோகிக்கிறார்.




* ப்ரில்க்ரீமின் சுத்தமான க்ரீமாக்கப்பட்ட எண்ணெய்கள் உங்கள் கேசத்தின் இயற்கை கருமை நிறத்தை சோபிக்கச் செய்கின்றன. சுத்தமான வெண்ணிற ப்ரில்க்ரீமை உங்கள் தலையில் தினந்தோறும் அழுத்தித் தேயுங்கள். பொடுகுகள் ஏற்படுவதை இது தடுத்து உங்கள் கேசத்தை சுத்தமாயும் ஆரோக்கியத்துடனும் வைக்கிறது.

* சிறிதளவு ப்ரில்க்ரீம் நீடித்த உபயோகத்திற்கு வருகிறது! இன்றே ஒரு ப்ரில்க்ரீம் ஜாடியை வாங்கி எவ்வளவு காலம் அது நீடித்த உபயோகத்திற்கு வருகிறதென்று பாருங்கள்.

வாழ்க்கையில் வெற்றிபெற்றவர்கள்

# ப்ரில்க்ரீம் BRYLCREEM

உபயோகிக்கிறார்கள்

குரூப் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

---

# வேண்டாதவன்

ஜி. கே. பொன்னம்மாள்

தினது ரிக்ஷா வண்டியின் படியில் உட்கார்ந்தவாறு சூடான 'சாயா' வை ரசித்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான் கந்தன். அந்த மழையில் 'சாயா' அவனுக்கு இதமாக இருந்தது. காலை எட்டு மணியிலிருந்து, பன்னிரண்டு மணி வரையில் காத்திருந்தும் ஒரு சவாரிகூடக் கிடைக்காமல் இருந்ததை நினைத்துக் கந்தன் வருத்தப்பட்டான். இப்பொழுது சாப்பிட்ட சாயாவுக்கு ஒரு அணா முனியனிடமிருந்து கடனாக வாங்கியிருந்தான். காலையிலிருந்து நிற்க நேரமில்லாமல் வண்டியை இழுத்துக் கொண்டு ஓடும் செல்வத்தைப் பார்க்கச் சற்றுப் பொறாமைகூட ஏற்பட்டது கந்தனுக்கு. என்னதான் செல்வத்திடம் அப்படி ஒரு வசியம் இருந்ததோ, வருகிறவர்களெல்லாம் செல்வத்தின் வண்டியையே விரும்பினார்கள். இத்தனைக்கும் செல்வம், பார்வைக்கு நோஞ்சலாக இருப்பான். ஒரு சவாரி போய்விட்டு வந்ததும், களைத்து வண்டிப் படியிலே உட்கார்ந்து விடுவான். ஆனால் பேச்சு மட்டும் வெகு வீரத்துடன் வேகமாகப் பேசுவான். எந்த விஷயத்தையும் அலட்சியமாகப் பேசும் திறமை அவனிடம் இருந்தது. யாருக்கு, எப்படிப் பேசினால் பிடிக்கும் என்பதையும் செல்வம் நன்றாகத் தெரிந்து வைத்திருந்தான். கூலியும் அதிகமாகக் கேட்பான். மற்ற ரிக்ஷாக்காரர்களை, அதட்டிப் பேசித் தானாகவே, அவர்களின் தலைவன் பதவியையும் ஏற்றுக் கொண்டிருந்தான்.

கந்தனுக்கு முதல் பார்வையிலேயே செல்வத்தைப் பிடிக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். மில் ஆடைகள் வந்து கைத்தறி ஆடைகளைப் புறக்கணித்து வரும் இந்த நாளில், நெசவுத் தொழில் செய்து பிழைக்க வழியில்லாமல், வறுமைக்கு அடிபணிந்து, பிழைப்பை நாடிப் பட்டணத்துக்கு வந்திருப்பவர்களில் கந்தனும் ஒருவன். கையிலிருந்த பணத்தில் ஒரு ரிக்ஷா வாங்கிக் கொண்டு, முதன் முதலாக, ரிக்ஷாக்காரனாக அந்தப் புளியமரத்தடியில் வந்து நின்றான் கந்தன்.

மற்ற ரிக்ஷாக்காரர்கள் இவனைப் புதுமையாகப் பார்த்தார்கள். கோடுபோட்ட பனியனும், காக்கி நிஜாரும், அரும்பு மீசையும், ஆரோக்கியமான அவனது உடலும் பார்ப்பவர்களைப் பிரமிக்கச் செய்தன. "ஏன் தம்பீ, நீ ஊருக்குப் புதிசோ?" என்று கேட்டான் முனியன்.

"ஆமாம், அண்ணே, சொந்த ஊரு நெல்லிக்குப்பம். ஏதோ பிழைக்க வழி தேடி, இந்த ரிக்ஷாத் தொழிலே தம்பி என் தாயாருடன் வந்து விட்டேன்" என்றான் கந்தன் பணிவுடன்.

"இதென்ன பிழைப்பு, தம்பீ? இப்போ எல்லாம் இந்த வண்டிக்குப் போட்டியாக எத்தனையோ இனம் பிடிச்சு. அதனால் இந்த வண்டிக்குக் கிராக்கி இல்லே, ஆட்டோ ரிக்ஷா, சைக்கிள் ரிக்ஷா என்று வந்து ஜனங்களை மயக்கிடிச்சு. இருந்தாலும், பழகின தொழிலாச்சே என்று விட முடியவில்லே. எதற்கும் இப்போ, செல்வம் அண்ணன் வருவாரு. அவருக்கு, வெற்றிலே, பாக்கு, ஆப்பம், டீ என்று வாங்கிக் கொடுத்திடு. தட்டிப்பார்க்காதே. இந்த 'ஸ்டாண்டு'க்கு அவர்தான் தலைவர்; அவராலதானே உனக்குத் தொழில் நடக்கணும். அவரைத் தாஜா பண்ணிக்கோ" என்றான் முனியன்.

"இதென்ன வேடிக்கை அண்ணே? வண்டி இழுக்கிறவன் நான். எதற்குத் தாஜா பண்ண வேணும்?" என்ற கந்தனின் குரலை இடைமறித்து, "அதெல்லாம் பட்டணத்துத் தொழில் வழக்கம். போகப் போக உனக்குத் தெரியும்" என்றான். இதற்குள் "முனியா!" என்று ஒருவர் குரல் கொடுக்கவே, "ஐயா கூப்பிடறாரு. போய் வரேன்" என்று வண்டியை இழுத்துக் கொண்டு ஓடினான் முனியன்.

இந்த விநோதமான பழக்கத்தைப் பற்றி யோசித்துக்கொண்டேயிருந்தான் கந்தன். மற்ற ரிக்ஷாக்காரர்களுக்கு இடையே, ஒரு கலகலப்பு ஏற்பட்டது. காரணம் செல்வத்தின் வரவுதான். "வாங்க அண்ணே" என்று வரவேற்றார்கள் அங்கிருந்தவர்கள். செல்வம், அலட்சியமாகத் தன் ரிக்ஷாவைக் கீழே விட்டு விட்டு, அதன் படியில் கம்பீரமாக உட்கார்ந்து கொண்டான். மெலிந்த உடல், கருட்டை மயிர், பெரிய மீசை, அரைக் கைச் சட்டை,—இதுதான் செல்வத்தின் உருவம். சற்றும் கண்ணோட்டம் விட்டுவிட்டு, ஒரு பீடியைப் பற்ற வைத்துக் கொண்டே, கந்தனைப் பார்த்து, "யாரு இந்தப் பொடியன்? எந்த ஊரு?" என்ற கேள்வியைப் போட்டான்.

"அசலூர், பிழைப்புக்குப் பட்டணம் வந்திருக்கிறான்" என்றான் திரும்பி வந்த முனியன் முந்திக் கொண்டு.

"ஏது, பட்டணத்திலே ரிக்ஷாக்களுக்குப்





படியே, கந்தனை நோட்ட மிட்டான் செல்வம். அந்தப் பார்வையில், 'அட பயலே......பார்த்துக் கொள். இந்த ரிக்ஷா ஸ்டாண்டுக்கு, நான்தான் ராஜா' என்ற பொருள் நிறைந்திருந்தது.

பொழுது போய்க் கொண்டிருந்தது. எத்தனையோ பேர்கள் வந்தார்கள். எத்தனையோ ரிக்ஷாக்கள் கிளம்பிப் போயின. கந்தனை யாரும் திரும்பிப் பார்க்கவே இல்லை. ''டேய், முனியா! அம்மாவை காலேஜிலே விடு; ஐயாவைக் கோபிலுக்கு அழைத்துப்போ; விநாயகம், ஒன்பது மணிக்கு, வக்கீல் ஐயா வூட்டுச் சவாரிக்குப் போ. எட்டு அணா குடுப்பாரு'' என்று பல வேலைகளை மற்றவர்களிடம் ஏவியவாறு, தானும் அடிக்கடி போய் வந்துகொண்டிருந்தான் செல்வம்.

பள்ளிக்கூடத்து மணி பன்னிரண்டு அடித்து ஓய்ந்தது. கந்தன் மிகவும் சோர்ந்து விட்டான். இவர்களைப் போல் செல்வத்தைத் தாஜா செய்தால்தான் தனக்கும் வேலை கிடைக்கும் என்று நினைத்தான். ஆனால் அவனது மான உணர்ச்சி அதற்கு இடம் அளிக்கவில்லை. 'உடம்பில் பலம் இருக்கிறது. நாம் உழைக்கிறோம், அதற்கு இவன் என்ன நடுவில்?' என்றுதான் நினைத்தான்.

பகல் சாப்பாட்டைக் கூடையில் எடுத்துக் கொண்டு, ஆபீசில் வேலை செய்பவர்களுக்குக் கொடுத்து வந்த கூடைக்கார ஆச்சி, ஒரு மணிக்கு டிபன் செட்டுகள் நிறைந்த கூடையுடன் வந்து, அந்த புளியமரத்து நிழலில் உட்கார்ந்து தன் வியாபாரத்தை ஆரம்பித்தாள். பாத்திரத்தில் மீதியிருந்த சாதம், கறி வகைகளை ஒன்று சேர்த்து, விற்பதுதான் அவள் வேலை. ரிக்ஷாக்காரர்கள் அவளைச் சூழ்ந்து கொண்டார்கள். கிழவியும், கையில் இலையில் சாப்பாட்டை வைத்து, எல்லோருக்கும் கொடுத்தாள்.

விதம் விதமான கறி வகைகளின் வாசனை கந்தனின் மூக்கைத் துளைத்துப் பசியைக் கிளப்பியது. ''உனக்குச் சாப்பாடு வேண்டாமா, தம்பி? ஓரணாத்தான், வாங்கிக்கோ'' என்ற கிழவியின் குரலுக்கு, ''வேண்டாம்'' என்று ஒரே வார்த்தையில் பதிலளித்தான் கந்தன். காலையிலிருந்து இதுவரையில் காலணா சம்பாதிக்கவில்லை; 'ஓரணா டீ சாப்பிட்ட கடன் வேறு! இந்த அழகில் நமக்குச் சாப்பாடு என்ன வேண்டியிருக்கிறது?' என்ற வைராக்கியம் அகனுள் எழுந்தது.

தூரத்தில், கையில் பையுடன் வரும் ஒரு பெரியவரின் பார்வை கந்தன்மேல் படவே, ''ஏ ரிக்ஷா!'' என்ற குரல் தேவகானம் போலிருந்தது கந்தனுக்கு. தனது ரிக்ஷாவை இழுத்துக் கொண்டு விரைந்தான்.

''பக்கத்துத் தெருவுக்குப் போகணும், நாலு அணா தருகேன். சம்மதமா?'' என்றார் பெரியவர்.

பஞ்சம் என்று இவனும் வந்து விட்டான்!'' என்றான் கேலிக் குரலில் செல்வம். இந்த வார்த்தையில் என்னதான் ஹாஸ்யம் இருந்ததோ, மற்றவர்களும் சேர்ந்து சிரித்தார்கள். ''போகிறது இந்தா, பயலே, ஒரு 'ஸ்ட்ராங்' டீ வாங்கிவா,'' என்றான் செல்வம் உத்தரவிடும் தோரணையில்.

கந்தனுக்கு, இந்த உத்தரவு பிடிக்கவே இல்லை. இருந்தாலும், முதல் நாளிலே, யாருடனும் பகை வைத்துக் கொள்ள வேண்டாமென்று நினைத்து மெதுவாக எழுந்து வந்தான். ''சரி துட்டு கொடுங்கள்'' என்று கேட்டான் கம்பீரமாக.

''நீ, டீயை வாங்கிவா தம்பி. பிறகு பார்த்துக் கொள்ளலாம்'' என்று நிலைமையைச் சொல்லாமல், விளக்கினான் முனியன்.

''என்னிடம் துட்டு இல்லை'' என்று சொல்லி விட்டுப் பேசாமல் தன் இடத்தில் போய் உட்கார்ந்தான் கந்தன்.

செல்வத்தின் முகம் கோபத்தால் சிவந்து விட்டது. கந்தனை முறைத்துப் பார்த்து விட்டு, ''புது மாடு துள்ளுகிறது. சூடு போட்டால் சரியாகிவிடும்'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே, கையிலிருந்த பீடித் துண்டை, கந்தன் பக்கம் வீசி எறிந்தான். இதற்கிடையே, சடையன் சூடான டீயைச் செல்வத்திடம் நீட்டினான். டீயை அருந்திய

"சும்மா வண்டியிலே குந்துங்க சாமி! நான் பேரம் பேசுகிற ஆசாமி இல்லே" என்று ரிக்ஷா ஆசனத்தைத் தட்டிப் போட்டான் கந்தன். 'நாலு அணா சம்பாதித்து விடுவோம். ஓரணா முனியன் கடனைக் கொடுத்துவிட வேண்டும். முதல் போணி அரை அணாவுக்குப் புஷ்பம் வாங்கி, மாரியம்மனுக்குப் போடணும். ஓரணா ஆயாவிடமிருந்து சாப்பாட்டுக்கு. மீதி அணாவை அம்மாவிடம் கொடுத்துவிடவேண்டும்' என்று மனத்தில் நினைத்துக் கொண்டான். "ஆயா! சற்று இரு. இதோ நொடியில் வந்து விடுகிறேன்! எனக்கும் சாப்பாடு வேண்டும்" என்றான் மகிழ்ச்சியுடன். பெரியவர் 'அப்பாடா' என்ற பெருமூச்சுடன் வண்டியில் உட்கார்ந்தார். இந்தச் சமயத்தில் புளிய மரத்தின் நிழலிலிருந்து, சாப்பிட்டு விட்டு, வெற்றிலை, பாக்கை மென்று கொண்டே வந்த செல்வம் பெரியவரைப் பார்த்து, "அட, நம்ம ஐயாவா? நமஸ்காரங்க. எங்கே, மகள் வூட்டுக்கா? அடேய் சடையா, சீக்கிரம் வண்டியை எடுத்து வா. இந்த வண்டி வாண்டாமுங்க, பையன் புதுசு. சடையனுக்கு மூன்றணா கொடுங்க போதும். நம்ம குழந்தை சௌக்கியமா?" என்று பேச்சில் இறங்கி விட்டான்.

செல்வத்தின் உத்தரவைக் கேட்ட சடையன், மீதியிருந்த சோற்றை ஒரே வாயில் விழுங்கிவிட்டு வண்டியுடன் வந்துவிட்டான். பெரியவரும் செல்வத்தின் பேச்சில் மயங்கிச் சடையன் வண்டியில் ஏறிவிட்டார். கந்தன் கோபத்தால் துடித்தான். கண்ணும் முகமும் சிவந்து தொண்டை இடறியது. "இது நியாயமா, உங்களுக்கு? என் வண்டியில் ஏறினவரை இறங்க வைச்சீங்களே. என் பிழைப்பைக் கெடுத்தால் உங்களுக்கு என்ன லாபம்?" என்று இரைந்தான்.

"சும்மா துள்ளாதே தம்பி! நான் தீர்மானமாகச் சொல்லி விடுகிறேன். நீ இந்த இடத்தை விட்டு வேறு எங்கேயாவது போய் விடு. உன்னால் இங்கு தொழில் நடத்த முடியாது" என்றான் செல்வம்.

"பார்த்துக் கொண்டே இருங்கள். இந்த இடத்திலேயே நான் தொழில் நடத்திக் காட்டுகிறேன். அநியாயம் எப்பொழுதும் ஜயித்து விடாது. கடவுள் உங்களைக் கேட்பார்" என்று பொருமினான் கந்தன். அவனுக்கு அழுகையாக வந்தது. பேசாமல் சோர்ந்து உட்கார்ந்து விட்டான், மாலை வரையில். வந்த சவாரி எல்லாம் செல்வத்தினால் தட்டிப் போயிற்று.

காலையில் ஆபீசுக்குப் போன வக்கீல் பஸ்ஸிலிருந்து இறங்கியதும், சடையன் வண்டி தயாராக இருந்தது. அந்த வண்டியில் அவர் போய் விட்டார். அரை மணிக்குப் பிறகு வெகு குஷியுடன் திரும்பி வந்த சடையன், "அண்ணே, அந்த வக்கீல் ஐயா, ஐந்து ரூபாயை வண்டியில் விட்டுவிட்டாரு. ஏதோ காகிதம் என்று எடுத்துப் பார்த்தால் பணம். அதைத் திரும்பக் கொடுக்கணுமா? நாமே செலவு பண்ணலாமா?" என்றான்.

"அடே, உனக்குப் பைத்தியம்தான் பிடிச்சிருக்கு. அந்த ஐயா பணக்காரரு. இந்த

ஐந்து ரூபாயாலே, அவர் குடி முழுகிப் போகாது. நாமும் நல்ல சாப்பாட்டைப் பார்த்து எத்தனை நாளாச்சு. இன்றைக்கு நமக்கு அதிருஷ்டம் அடிச்சிருக்கு. மிலிட்டரி ஓட்டலிலிருந்து, ஆளுக்கொரு பிரியாணி பொட்டலமும், சூடான சாயாவும் வாங்கி வா!" என்றான் செல்வம் குஷியாக. இந்தப் பேச்செல்லாம் கந்தன் காதிலும் விழுந்தது.

"இந்தா பாருங்க, பணத்தை உடனே அந்த ஐயாவிடம் திரும்பக் கொடுங்க. இல்லாட்டி நானே அவரிடம் சொல்லி விடுவேன்" என்றான் கந்தன் கோபமாக.

"தம்பி! பதறாதே. உலகம் தெரியாத பிள்ளையாக இருக்கிறாயே, உனக்கும் சேர்த்துத்தான் விருந்து" என்றான் முனியன் சமாதானப்படுத்தும் தோரணையில்.

"இந்த மாதிரி சாப்பாட்டை என் நாய் கூடத் தின்னாது. மனிதனுக்கு நாணயம் வேணும்" என்ற கந்தனின் குரோதக் குரலை அவர்கள் கவனிக்கவே இல்லை.

"டேய், உன் வேலையைப் பார்த்துக்கிட்டுக் கிட, உன்னால் ஆனதைப் பாரு; சடையா! நீ உன் காரியத்தைக் கவனி. இந்தப் பயல் கிடக்கிறான்" என்று அதட்டினான் செல்வம் அலட்சியமாக.

சற்று நேரத்துக்கெல்லாம் சூடான பிரியாணியை ருசித்து உண்டார்கள் மற்ற ரிக்ஷாக்காரர்கள். அவர்கள் கேலிப் பேச்சும் சிரிப்பும் கந்தனுக்குப் பிடிக்கவே இல்லை; அன்று இரவு எட்டு மணி வரையில் உட்கார்ந்து விட்டு, ஒட்டிய வயிறுடனும், வேதனை நிறைந்த உள்ளத்துடனும் குடிசை நோக்கி நடந்தான் கந்தன்.

முன் இருட்டு வேளை. சிறிது மழை தூறிக் கொண்டிருந்தபடியால் அதிக ஜனநடமாட்டம் அந்தத் தெருவில் இல்லாமல் இருந்தது. தெரு விளக்கும் தலைவிதியை நொந்து கொள்வது போல் மங்கலாக எரிந்தது. திடீரென்று ஒரு குடிசையின் பின்னாலிருந்து சடையன் வெளிப்பட்டான். "என்ன கந்தா! அந்தப் பண விஷயத்தை வக்கீல் ஐயாவிடம் சொல்லத்தான் போகிறாயா?" என்றான் வம்புக்கு இழுக்கும் நோக்கத்துடன். அவன் பேச்சில் கேலியும் கலந்திருந்தது.

"ஆமாம், கண்டிப்பாக அவரைப் பார்த்துதான் சொல்லுவேன்" என்றான் கந்தன் தீர்மானமாக.

"சரி. இதையும் சேர்த்துச் சொல்லு" என்று கந்தனின் முகத்தில் இரண்டு குத்து விட்டான் சடையன். கந்தனும் விடவில்லை. திருப்பிக் குத்தினான். இருவரும் பாதையில் கட்டிப் புரண்டார்கள். தடதட வென்று சடையனின் உதவிக்கு இன்னும் நாலைந்து பேர்கள் சேர்ந்துகொண்டார்கள். கந்தனுக்கு நல்ல அடி. மூக்கிலிருந்து ரத்தம் கொட்டியது. தலை சுற்றுவது போலிருந்தது. தன்னை மறந்து தெருவில் மயங்கிக் குப்புற விழுந்தான். எதிரிகள் நாலா பக்கமும் மறைந்து ஓடிவிட்டார்கள். அந்தமழையில் அநாதை போல் கந்தனும் அவனுடைய சகாவான ரிக்ஷாவும் கிடந்தார்கள்.

கந்தன் கண் விழித்ததும் குளிருக்கு இதமாக யாரோ சூடான காப்பியைத் தன் வாயில் ஊற்றுவதை உணர்ந்தான், மங்க







HAZELINE SNOW






லான சிம்னி வெளிச்சத்தில் ஒரு பெண் தன் அருகே குனிந்து நிற்பதைக் கண்டான். திடுக்கிட்டு எழுந்து உட்கார முயன்றான். உடம்பில் வேதனை அப்பொழுதுதான் நன்றாகத் தெரிந்தது. முன் நிகழ்ச்சிகள் நினைவுக்கு வந்தன. "நான் எப்படி இங்கு வந்தேன்?" என்றான் பதற்றத்துடன். அந்தப் பெண் நாணம் நிறைந்த புன்னகையுடன், "நான் கடையிலிருந்து அரிசி வாங்கிக் கொண்டு வரும்போது நீங்க தெருவிலே மயக்கமாகக் கிடந்தீங்க..." என்று கூறினாள்.

"ரொம்ப நன்றி. பொழுது போயிடுச்சு. எங்க அம்மா காத்துக்கிட்டிருக்கும்" என்றபடி வலியைத் தாங்கிக் கொண்டு மெதுவாக எழுந்து நின்றான். அடிபட்ட இடமெல்லாம் 'விண் விண்' என்று தெறித்தது. பனியன் எல்லாம் ரத்தக் கறை. முகம் வீங்கியிருந்தது.

'இந்தக் கோலத்தை அம்மா பார்த்தால் பயந்து விடுவாளே' என்று நினைத்தான். அதை உணர்ந்த அந்தப் பெண் வெந்நீர் எடுத்து முகம் கழுவக் கொடுத்தாள். அவன் முகத்தைத் துடைத்துக் கொள்ளும் போது "எப்படி விழுந்தீங்க? நல்லா அடி பட்டிருக்கே!" என்று வருத்தப்பட்டாள். கந்தன் அவளிடம் எதையும் மறைக்க விரும்பாமல் நடந்ததையெல்லாம் சொல்லி விட்டான். தனக்கு நேர்ந்த விபத்துக்குக் காரணம் செல்வம்தான் என்று நினைத்ததும் அவனுக்குச் செல்வத்தை அடித்து நொறுக்கி விட வேண்டுமென்று தோன்றியது. அவன் பேச்சைக் கேட்டு அந்தப் பெண் அவனிடம் பரிதாபப்பட்டாள்.

"கவலைப் படாதீங்க; கடவுள் இருக்கிறார்!" என்று தேற்றினாள். அவள் எத்தனை உபசரித்தும் அங்கே சாப்பிடாமல் தன் குடிசையை நோக்கி நடந்தான் கந்தன். வழியெல்லாம் அந்தப் பெண்ணின் நினைவாகவே இருந்தது. அவள் சிரித்த சிரிப்பும், அன்பான பேச்சும், அழகு முகமும் அவன் கண்முன் நின்று மறையவே இல்லை.

மகனைக் கண்டு பதறிவிட்டாள் தாய். "போதும் தம்பி, நீ ரிக்ஷா இழுத்துச் சம்பாதித்தது. பேசாமல் ஆயுசோடு எனக்கு மகனாக இருந்தால் போதும். நான் இட்டிலி விற்றாவது பிழைப்புக்கு வழி தேடுகிறேன்" என்று கூறினாள் அந்த அன்புத் தாய்.

பலவித சிந்தனைகளும், உடல் வலியும் சேர்ந்து இரவைத் தூங்காமல் தள்ளினான் கந்தன். பொழுது விடிந்ததும் தலையைத் தூக்க முடியாமல் ஜுரமும் தலைவலியும் சேர்ந்து கொண்டன. தாயார் அன்புடன் கொடுத்த மிளகுக் கஷாயத்தைச் சாப்பிட்டு விட்டுப் படுத்தான். குடிசை வாசலில் பேச்சரவம் கேட்டு மெதுவாக எட்டிப் பார்த்தான். அந்தப் பெண்ணைக் கண்டு இனம் தெரியாத மகிழ்ச்சியில் திளைத்தது மனம்.

வள்ளி உள்ளே நுழைந்தாள். ஒருகணம் கந்தனால் ஒன்றுமே பேச முடியவில்லை. அவளே பேசினாள்: "உங்களுக்குத்தான் உடம்பு சரியில்லையே; எங்க மாமன்கூட ரிக்ஷாவண்டி ஓட்டுகிறவர்தான். அவர்வண்டி பழுதடைந்து ரிப்பேரிலே இருக்குதுங்க. உங்க வண்டியைப் பத்து நாளைக்குக்குடுங்க. தினசரி இரண்டு ரூபாய் வாடகையாக நான் கொண்டு



"உங்களுக்குச் சந்தோஷமான செய்திங்க! எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி தரப்போகிறார்களாமே!"

"உம்! அது அமுலுக்கு வருகிறதுக்குள்ளே என் குழந்தைகளெல்லாம் பெரியவர்களாகிப் படிப்பை முடித்துக் கொண்டு வேலை தேடிக் கொண்டு இருப்பாங்க!"

வந்து கொடுத்து விடுகிறேன். இதோ முன் பணம்" என்று பணத்தை நீட்டினாள்.

இதைக் கேட்ட கிழவி இடைமறித்து, "நல்ல காரியம் தம்பி! யோசிக்காதே! உனக்கும் உடம்பு சுகமில்லை. வண்டி சும்மாதானே கிடக்குது" என்று ஒத்துப் பாடினாள். கந்தன் வண்டியைக் கொடுக்க இசைந்து விட்டான். வள்ளி இரண்டு ரூபாயை அவன் கையில் வைத்தாள்.

நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. செலவுக்குப் பணம் கிடைத்துக் கொண்டிருந்ததால் கந்தனின் குடித்தனம் நன்றாகவே நடந்தது. உடம்பு குணமானதும், இனிமேல் வேலைக்குப் போக வேண்டியதுதான் என்று நினைத்தான். இந்த ஆறு ஏழு நாட்களில் வள்ளி கந்தனின் இதயத்தில் நிரந்தரமாகக் குடி புகுந்து விட்டாள் என்றுதான் சொல்ல வேண்டும். அவள் கையால் ரசம் சோறாக்கிக் கந்தனுக்குப் பரிமாறுவாள். கிழவிக்கும் வள்ளியை மிகவும் பிடித்து விட்டது. 'எனக்கு இப்படி ஒரு மருமகள் வந்தால்?' என்று நினைக்கும் அளவுக்கு வந்து விட்டாள் கிழவி. அவள் வரலாற்றைக் கேட்டுத் தெரிந்து கொண்டாள். தனக்குத் தாயார் இல்லை என்றும், தகப்பன் இரண்டாம்தாரம் கட்டிக் கொண்டு வேறு வீட்டில் வசிக்கிறான் என்றும், பாட்டியும், தானும், தனிக் குடிசையில் இருக்கிறோம் என்றும் அவள் சொன்னாள்.

அன்று பொழுது விடிந்ததுமே, இனம் புரியாத மகிழ்ச்சியுடன் படுக்கையிலிருந்து எழுந்தான் கந்தன். கிழவி கொடுத்த பழைய சோற்றை ஒரே வாயில் சாப்பிட்டு விட்டு, துண்டை உதறித் தலையில் கட்டிக் கொண்டு வண்டியை எடுத்தான் கந்தன். இரண்டடி வைத்ததும் வள்ளி எதிர்ப்பட்டாள். "நான்

ஒன்று சொன்னால் கேட்பீங்களா?" என்றாள் சிரித்துக்கொண்டே. "சொல்லேன்" என்றான் கந்தன் குறும்புச் சிரிப்புடன்.

"நீங்க, இந்த வண்டியை எடுத்துக்கிட்டுப் புளியமரத்தடியிலே போய் நிற்க வேண்டாம். நான் வேலை செய்யும் ஐயா வூட்டுக் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்குக் காலையிலே அழைச்சுக்கிட்டுப் போய், மாலையிலே திரும்ப அழைத்து வரணும். பக்கத்து வீட்டுக் கிழவி அம்மாவை, தினம் கோவிலுக்கு அழைச்சுக்கிட்டுப் போகணும், சம்மதமா?" என்றாள்.

கந்தனுக்கு அவன் காதுகளையே நம்ப முடியவில்லை. "கரும்பு தின்னக் கூலி கேட்பாங்களா, வள்ளி?" என்றான் உணர்ச்சிப் பெருக்கில்.

அன்று ஒன்பது மணி. இளம் வெய்யிலில் இரண்டு குழந்தைகளை வண்டியில் ஏற்றிக் கொண்டு சந்தோஷமாக நடந்தான் கந்தன். அந்தப் புளியமரத்தடி வந்ததும் கம்பீரமாக நிமிர்ந்து நடந்த கந்தனைச் செல்வமும், அவன் சகாக்களும், ஆச்சரியத்தினால் விழி பிதுங்கப் பார்த்துக் கொண்டிருப்பதை அவனால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை. குழந்தைகளுக்குப் புது ரிக்ஷாக்காரனை மிகவும் பிடித்து விட்டது. "ரிக்ஷாக்காரன் ரொம்ப நல்லவன். செல்வம் மாதிரி எரிந்து விழமாட்டேன் என்கிறான். வேடிக்கையாக வரும் வழியில் கதை கூடச் சொல்கிறான். எங்களுக்கு இவனே போதும்" என்ற சின்னஞ்சிறு குழந்தைகளின் புகழ்ச்சியைக்கேட்டுக் கந்தனின் மனம் நிறைந்திருந்தது. ஒருநாள் வீட்டு எஜமானர் கந்தனின் வண்டியில் ஏறினார். "அன்று உன்னைச் செல்வம், புதுப் பையன் என்று சொன்னானே நீ வள்ளியின் அத்தை மகன் என்று வள்ளி சொல்லித்தான் எனக்குத் தெரியும். இனி மேல் உன் வண்டியிலே ஏறுகிறேன்" என்றார்.

புளியமரத்தடியில் காத்துக் கிடக்காமலே கந்தனுக்கு நிரந்தரமான சவாரி கிடைத்து விட்டது. அவன் குணத்தை எல்லோரும் மெச்சினார்கள்.

அன்று வள்ளியைப் பார்க்காமல் பொழுதே போகவில்லை கந்தனுக்கு. வேலை முடிந்ததும் இரண்டு முழம் கதம்பமும், ஒரு பொட்டலம் ஹோட்டல் பலகாரமும் வாங்கிக் கொண்டு குஷியுடன் வள்ளியின் குடிசைக்கு வந்தான். குடிசையுள் விருந்து பலத்த விசும்பலும், யாரோ அதட்டும் குரலும் கேட்டன.

"அடி பாவிப் பெண்ணே, உனக்கு இத்தனை ஆணவமா? வக்கீல் ஐயா வீட்டுச் சவாரியை நீதானே அந்த பயலுக்குப் பிடிச்சுக் குடுத்தது? எல்லா விஷயமும் சடையன் சொல்லி விட்டான். அவனை அத்தை மகன் என்று வேறு சொல்லிக் கொள்கிறாயாமே! நாளைக்கு மாரியாத்தா கோவிலிலே சடையன் உனக்குத் தாலிகட்டப்போகிறான்" என்று இரைந்தான்.

"போதும் நிறுத்துங்க; நீங்க மாத்திரம் தான் பிழைக்கணுமா? அவரும் பிழைக்க வேண்டியதுதானே? திருடின பணத்தைத் திரும்பக் குடுக்கச்சொன்னா, ஆளைவிட்டு அடிக்கிறதுதான் உங்கள் நியாயமா என்று கேட்கிறேன்" என்றாள் வள்ளி. அவளது குரலை இடைமறித்து. "அந்தப் பயல் பக்கம் சேர்ந்து என்னைக் குற்றப்படுத்தும் அளவுக்கு வந்து விட்டதா உன் தைரியம். என்னைக் கேட்காமல் ஐந்து ரூபாயை எதற்கு வக்கீல் ஐயாவிடம் கொடுத்தாய்? அவன் ரிக்ஷாவை வாயகை குடிசை மறைவிலே வைச்சுக்கிட்டு. தினம் நீ வேலை செய்யும் பணத்திலிருந்து வாடகை கொடுத்தாயாமே. இந்த அநியாயத்தை நான் பொறுக்க மாட்டேன். நீ என் மகளா?" என்று கூறி, அவளை அடிக்கக் கையை ஓங்கினான்.

செல்வத்தின் மகள்தான் தன் காதலி என்று தெரிந்ததும், கந்தனின் கையிலிருந்த பொட்டலம் நழுவிக் கீழே விழுந்தது. 'ஐயோ' என்ற வள்ளியின் குரலைக் கேட்டு வேங்கை போல் உள்ளே நுழைந்தான் கந்தன். செல்வத்தின் கோபம் அதிகமானது. "வாடா அயோக்கியப் பயலே" என்று கந்தன் மேல் பாய்ந்தான். தன் இரும்புக் கரங்களால் செல்வத்தைப் பிடித்து நிறுத்தினான் கந்தன்.

"நான் உங்களுடன் வரவும் முடியாது; அந்தச் சடையனைக் கட்டிக் கொள்ளவும் மாட்டேன். இவர்தான் என் கணவர்! அத்தான்! என்னைக் கைவிடாமல் அழைத்துப் போங்கள்" என்று கந்தனிடம் சென்றாள்.

"அடி சண்டாளி, பெற்ற தகப்பனிடமா பேசுகிறாய்?" என்று அலறினான் செல்வம்.

"ஆம், நீங்கள் பெற்ற தகப்பன் என்றால் இவர் என் கணவர்!" என்றாள் வள்ளி.

செல்வம் மனக் கொதிப்பினால் எதை எதையோ பேச நினைத்தான். ஆனால் அவன் தளர்ந்த உடல் அதற்கு இடம் கொடுக்கவில்லை. தலையைப் பிடித்தவாறு தரையில் உட்கார்ந்து விட்டான். வெற்றிக் குறியுடன் கந்தனின் கையைப் பிடித்துக் கொண்டு முன் நடந்தாள் வள்ளி.

அன்று இரவு கந்தனின் குடிசையில் உட்கார்ந்திருந்தாள் வள்ளி. மடமடவென்று செல்வம் உள்ளே நுழைந்தான். "வள்ளி! என்னை மன்னிச்சிடு. கந்தன் குணக்குன்று" என்று அலறினான். வள்ளிக்கு ஒன்றுமே புரியவில்லை. அந்த நிலையிலும், தன் தந்தையின் நோயால் மெலிந்து வாடியிருந்த உடலைப் பார்த்து வருத்தம்தான் வந்தது.

"மனக்கொதிப்பை அடக்க மருந்தாக ஒரு புட்டி சாராயம், என் ரிக்ஷா-பெட்டிக் கடியில் வைத்திருந்தேன். அதைப் போலீசு கண்டு பிடித்து விட்டாங்க. நான் கோபத்தில் பழி வாங்கும் எண்ணத்துடன் 'இது என் வண்டி இல்லை. கந்தனின் வண்டி' என்று சொல்லி விட்டேன். என்னுடன் என் சகாக்களும் சேர்ந்து கொண்டார்கள். அப்பொழுது கந்தன் அந்தப் பக்கம் வந்தான். விஷயம் தெரிந்ததும் 'ஆம் இது என் வண்டிதான். நான்தான் குற்றவாளி' என்று ஒப்புக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போய் விட்டான். போகும்போது 'மாமா! கவலைப்படாதீர்கள். ஒரே வாரத்தில் வந்துவிடுகிறேன். வள்ளிக்குத் தைரியம் சொல்லுங்கள். உங்களுக்கு உடம்பு சரியில்லை. உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள்' என்றான். இந்தத் தியாகத்தைப் பார்த்து, முனியன், சடையன் எல்லோருமே, மூக்கில் விரல் வைத்து விட்டார்கள். வள்ளி! நீ பாக்கியவதி. கந்தன் உனக்கேற்ற கணவன்" என்று சொல்லி விட்டு விம்மிவிம்மி அழுதான் செல்வம். அந்தக் கண்ணீரில் அவன் களங்கம் மறைந்து குறைந்து கொண்டே வந்தது.

## பதினோராம் அத்தியாயம்
## கலங்கரை விளக்கம்

கந்தசாமி ஆஸ்பத்திரிக்கு வந்து சுமார் பதினைந்து தினங்களாயின. அவனது உடம்பு வெகுவாகக் குணமடைந்து விட்டது. அன்றுகட்டுகளை அவிழ்த்து விட்டு வெறும் 'பிளாஸ்திரி' மாத்திரம் போட்டிருந்தார்கள். கூண்டுச் சிறையிலிருந்து எப்போது விடுபடுவோம் என்று ஏங்கித் தவிக்கும் பறவையைப் போலத் துடிதுடித்துக் கொண்டிருந்த அவனுக்கு, ''இன்னும் நாலைந்து தினங்களில் வீட்டுக்குப் போகலாம்' என்று டாக்டர் கூறியதும் ஒரே குதூகலமாக இருந்தது.

முதல் நாள் வந்து போன பிறகு சிங்காரியும் புலவரும் அந்தப் பக்கமே எட்டிப் பார்க்காதது அவனுக்கு மிகுந்த ஏமாற்றத்தையும் கவலையையும் கொடுத்துக் கொண்டிருந்தது. 'சிங்காரியின் கல்யாண விஷயம் வரவர முற்றிக் கொண்டே போகிறது!' என்று புலவர் கூறியது அவனது மனத்தை அரித்துக்கொண்டேயிருந்தது. ஒருவேளை கண்ணம்மாள் ஏதாவது தீர்மானமாக முடிவு செய்து கிழவரையும் சரிப்படுத்தி விட்டாளோ! அவர் மட்டுமென்ன? 'எடுப்பார் கைக் குழந்தை' தானே! யாராவது கொஞ்சம் தூக்கி வைத்துத் தேனொழுகப் பேசி விட்டார்களென்றால் உடனே அவர்களது வலையில் விழுந்து விட மாட்டாரா! ஆனால் சிங்காரி?...

பலவித சிந்தனைகளால் மூளையைக் குழப்பிக் கொண்டு படுத்திருந்த சமயத்தில் முருகேசன் அங்கு வந்து சேர்ந்தான்.

''என்ன கந்தசாமி! நாலைந்து நாட்களில் உன்னை 'டிஸ்சார்ஜ்' பண்ணப் போகிறாங்களாமே?'' என்று கேட்டான்.

''பின்னே, இங்கேயேவா நான் கணக்கா படுத்திருக்கச் சொல்லறே?''

''அதுக்கில்லையப்பா, 'டிஸ்சார்ஜ்' பண்ணி விட்டால்கூட, பேசாமல் இன்னும் பதினைஞ்சு நாளைக்கு லீவு போட்டு விட்டு வீட்டிலே ஓய்வு எடுத்துக்கிட்டால்தான் நல்லது. நானும் அடிக்கடி வந்து உன்னைக் கவனிச்சுக்கறேன்'' என்றான் முருகேசன் மிகுந்த அன்புடன்.

கந்தசாமி அவன் கூறியதைக் கேட்டுச் சிரித்தான். அவன் அடிக்கடி வந்து கவனித்துக் கொள்ளுகிறேன் என்று கூறியது, அந்தச் சாக்கில் முனியம்மாளைப் பார்ப்பதற்காகத்தான் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். அவன் ஆஸ்பத்திரியில் படுத்த நாள் முதல் தருமலிங்கமும் முனியம்மாளும் வரும் போதெல்லாம் முருகேசனும் கூடவே பருந்து போல் வட்டமிட்டுக் கொண்டு



சுற்றி வருவதை அவன் கவனியாமல் இல்லை. முருகேசனின் கண் வெட்டும், முனியம்மாளின் புன்சிரிப்பும் அவனது பார்வைக்குத் தப்பவில்லை. அதுவும் ஒரு நன்மைக்குத்தான் என்று கருதினன்.

''ஆமாம் முருகேசா! நான் வீட்டிலே ஓய்வெடுத்துக் கொண்டாலும் இல்லா விட்டாலும் நீ மாத்திரம் அடிக்கடி நம்ம வீட்டுக்குத் தவறாமல் வந்து கவனிச்சுக்கோ அப்பா! அதுக்கும் உன் மேலே பிரியம்தானே?'' என்று சடக் கென்று ஒரு கேள்வியைப் போட்டு வைத்தான் கந்தசாமி.

எதிர்பாராத இந்தக் கேள்வி முருகேச னைத் திணறச் செய்தது.

''எதைச் சொல்லுகிறாய் கந்தசாமி?''

''எதைச் சொல்லுவேன்! முனியம் மாளைத்தான் சொல்லுகிறேன்! இதோ பார், முனியம்மாளை நான் கட்டிக் கொள்ளப் போகிறதில்லை. அதுக்கும் உன் மேலே விருப்பம்தான் என்று எனக்கு நன்றாகத் தெரியும்!''

முருகேசனுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலிருந்தது. கந்தசாமிக்கு அவளைக் கட்டிக் கொள்ள விருப்ப மில்லை என்ற செய்தி அவனுக்குப் புதி தல்ல. ஆனல் பிடிவாதக்கார முத்தம் மாள் உறவு முறை விட்டுப் போகக் கூடாதென்று அவனது மனத்தைக் கரைத்து விடுவானே என்றுதான் அவன் அஞ்சிக் கொண்டிருந்தான்.

ஒரு நிமிஷம் அவன் பேசவில்லை. கந்தசாமி சிரித்தான்.

''எனக்கு எல்லாம் தெரியும், முரு கேசா! முனியம்மா உனக்குத்தான்.''

முருகேசனின் முகத்தில் அசட்டுக் களை தட்டியது.

''என்ன கந்தசாமி, பரிகாசம் பண்ணுறே! முனியம்மா உனக்கு என்று பிறந்து வளர்ந்திருக்குது! உன்னை நம்பிப் பட்டணத்துக்கு வந்திருக்குது! நீ என்னடான்னு, காஷாயம் வாங்கிக் கிட்டவன் மாதிரி பேசறியே!... அடுத்த மாசமே உன் கல்யாணத்தை நடத்தி விட வேணும்னு சொல்லிக்கிட்டிருக் குது உங்க அக்கா!'' என்று கூறி விட்டு அவனை அவநம்பிக்கையோடு ஒரு தடவை பார்த்தான்.

இதே சமயம் அழகே உருவெடுத் தது போன்ற ஒரு இளம் பெண் அவர் களை நோக்கி ஒய்யாரமாக நடந்து வரு வதைக் கவனித்தான் முருகேசன். கந்த சாமியின் அருகில் அவன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்டு தயங்குவதைப் போல் ஒரு கணம் அவள் அந்த நீண்ட ஹாலின் கோடியி லேயே நின்ருள்.

கந்தசாமி அவளைக் கண்டதும் துள்ளி எழுந்தான். ''வா, வா, சிங்காரி!'' என்று மிகுந்த உரிமையோடு அவன் அவளைக் கூப்பிட்ட தோரணையைக் கண் டதும் முருகேசன் அயர்ந்துபோனன். ''முனியம்மாளை நான் கட்டிக் கொள்



ளப் போவதில்லை!'' என்று கந்தசாமி அழுத்தம் திருத்தமாகக் கூறியதன் பொருள் அவனுக்கு விளங்கிவிட்டது.

'' நான் போய்வருகிறேன், கந்தசாமி!'' என்று கூறிப் புறப்பட்டான்.



* * *

ஆஸ்பத்திரியில் படுத்திருந்த கந்தசாமியை மீண்டும் வந்து பார்க்க வேண்டுமென்று சிங்காரிக்கு உள்ளூற ஆவல் துடித்துக் கொண்டுதான் இருந்தது. ஆனால் தந்தையின் உடல்நிலை காரணமாக அவளால் வீட்டை விட்டுச் சிறிது நேரம்கூட நகர முடியவில்லை.

அன்று நிலைதவறிக் கீழே விழுந்த தன் தந்தையை மெதுவாகத் தூக்கினாள் சிங்காரி. புலவரின் கண்கள் மூடியிருந்தன. மூச்சு மட்டும் மெதுவாக வந்து கொண்டிருந்தது. ஒருகால் இறந்து போய் விடுவாரோ என்று கண்ணம்மாளுக்குக் கூடப் பயம் பிடித்துக் கொண்டது. என்றாலும் தன் பிடிவாதத்தை விட்டுக் கொடுத்துப் பயத்தை வெளிக்காட்ட அவள் விரும்பவில்லை. சிங்காரிக்கு உதவி செய்யவும் அவள் முன்வரவில்லை. பேசாமல் எழுந்து தன் அறைக்குப் போனாள்.

மிகுந்த சிரமப்பட்டு அவரைத் தூக்கிக் கொண்டு போய் அறையில் படுக்க வைத்து, முகத்தில் தண்ணீர் தெளித்து, விசிறிக் கொண்டிருந்தாள் சிங்காரி. அவளது உள்ளம் கசிந்து கரைந்தது. கள்ளமறியாத தந்தையின் பரிதாப நிலையைக் கண்டு அவளது ஆத்மா கதறி அழுதது. அவள் பொருட்டு அவருக்கு எத்தனை கஷ்டம்! வாழ்க்கையில் அவர் என்ன சுகத்தைக் கண்டார்? விச்ராந்தியாகஓய்வு எடுத்துக்கொண்டு கவலையின்றிக் காலந்தள்ள வேண்டிய வயதில் ஒரு நிமிஷமாவது அவருக்கு நிம்மதி உண்டா? அவள் ஒருத்தி மட்டும் அவருக்குப் பாரமாக இல்லாமல் இருந்தால்!....



புலவர் மெதுவாகக் கண்களைத் திறந்தார். மிரள மிரள விழித்தார். வலது கையைத் தூக்கி மெதுவாக மகளின் முகத்தின் அருகே கொண்டு போனார். அதற்குள் மீண்டும் நினைவு இழந்தார். சிங்காரி பயந்து போனாள். ஒருகால் அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால்?....

நேர்ந்து விட்டால், பிறகு ஒருகண நேரங்கூட இந்தப் பைசாசத்துடன் இருந்து வாழ முடியாது!....வேறு எங்கே போவது? யார் இருக்கிறார்கள்? அன்போடு ஆதரிக்கக் கூடிய உற்றாரோ உறவினரோ கிடையாது. அநுதாபமுள்ள நண்பர்கள் என்று சொல்லிக் கொள்ளக் கூடியவர்கள் எவருமில்லை..!

'' ஏன் இல்லை? அன்று வந்தாரே, அந்தப் போலீஸ் இளைஞர் கந்தசாமி!'' என்று நினைவுறுத்தியது நெஞ்சம்.

அவளது பஞ்சை உள்ளத்தில் ஒரு அவல நம்பிக்கை தோன்றியது. ஆனால் மறுகணமே அந்த நம்பிக்கை வலிவு இழந்தது. ஆஸ்பத்திரி வராந்தாவில் முதல் நாள் அவள் கண்ட காட்சி!....முனியம்மாளிடம் கந்தசாமியின் நண்பன் கேட்ட கேள்விகள்! '' அப்புறமாகச் சொல்லுகிறேன்!'' என்று நாணத்தோடு முனியம்மாள் கூறிய பதில்...

அவளது அந்தராத்மா சிரித்தது. '' பைத்தியக்காரப் பெண்ணே! அந்த அதிர்ஷ்டம் உனக்குக் கிடையாது. தந்தை போனாரென்றால் அதோடு உனது வாழ்க்கைக்கும் ஒரு முற்றுப் புள்ளிதான்!'' என்றது உள்ளுணர்வு.

மாலையிலே புலவருக்குக் கடுமையான காய்ச்சல் கண்டுவிட்டது.

''ஏண்டி அப்பனும், பொண்ணும் என் பிராணனை வாங்குகிறீங்க! எவனாவது ஒரு டாக்டரை அழைத்து வந்து மருந்து வாங்கிக் கொடுத்துத் தொலைக்கிறது தானே!'' என்றாள் கண்ணம்மாள். தன் ஏற்பாடுகளெல்லாம் குட்டிச்சுவராகப் போய் விட்டதைக் கண்டு அவளுக்கு அளவுகடந்த ஆத்திரம். புலவரின் உடல் இருந்த நிலையில் கல்யாண விஷயங்களைத் தற்போதைக்கு ஒத்திப்போட வேண்டியதாயிற்று.

டாக்டர் வந்து மருந்து எழுதிக் கொடுத்தார். ''கொஞ்சங்கூட அதிர்ச்சி



"எந்த சந்தோஷ சமாசாரம் சொன்னாலும் உங்கள் முகம் மாறப் போகிறது இல்லை. பதினாறு வயது வரை குழந்தைகளுக்கு இலவசக் கல்வி தரப் போகிறார்களாம். அதற்கேனும் கொஞ்சம் சந்தோஷப் படுங்களேன்!"

"எப்படி சந்தோஷப்படுகிறது? என்னுடைய பையனுக்கு இன்றோடு பதினாறு வயது முடிந்து போகிறதே ஐயா!"

---

ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்! இருதயம் மிகவும் பலவீனமாக இருக்கிறது!" என்று சிங்காரியிடம் எச்சரித்து விட்டுப் போனார்.

இரவு பகல் தந்தையின் பக்கத்தை விட்டு அசையாமல் இருந்து கவனித்து வந்தாள் சிங்காரி. சுமார் மூன்றாவது நாளன்று சிறிது சிறிதாகக் குணம் தெரியலாயிற்று. அவர் ஏதோ பேச முயன்றார். ஆனால் சிங்காரி அவரைச் சாந்தப்படுத்தி விட்டாள். எனினும் ஏதோ பலமாக யோசனை செய்வதும் தமக்குத் தாமே பேசிக் கொள்வதுமாக இருந்தார் முத்துப் புலவர்.

மேலும் ஐந்தாறு தினங்களில் மெதுவாக எழுந்து நடமாடத் தொடங்கினார் அவர். சிங்காரியை அருகில் அழைத்துத் தணிவான குரலில் பேசினார்:

"குழந்தை! நல்ல காலமாக இந்தத் தடவை நான் பிழைத்தெழுந்து விட்டேன். இன்னொரு முறை ஏதாவதென்றால் பிறகு நம்புவதற்கில்லை. அதற்குள் ஏதாவது வழி செய்ய வேண்டும். கந்தசாமியைப் போய்ப் பார். அவன் ஆஸ்பத்திரியிலிருந்து என்றைக்கு வரப் போகிறான் என்று தெரிந்து கொண்டு வா. வெளியே வந்தவுடனேயே என்னை வந்து பார்க்கச் சொல் அம்மா. இல்லையென்றால் நாளைக்கு நாலாவது போய் அவனைப் பார்த்து விட்டு வருகிறேன்" என்றார் முத்துப் புலவர்.

"பிறகு பார்த்துக் கொள்ளலாம், அப்பா! இப்பொழுது உங்கள் உடம்பு இருக்கிற நிலையில்..."

"என் உடம்புக்கு இப்போது ஒன்றுமில்லை, அம்மா. மனம்தான் சரியாக இல்லை. ஆனால் என்ன செய்ய வேண்டுமென்று நான் தீர்மானித்து விட்டேன். இவ்வளவு தூரம் ஆன பிறகு இனி சும்மா இருக்கக் கூடாது."

"நீங்கள் என்னதான் பண்ணப் போகிறீர்கள், அப்பா!"

"அதெல்லாம் இப்போது கேட்காதே, குழந்தை! நான் சொல்லுகிறபடி செய்!" என்றார் புலவர்.

சிங்காரி, டாக்டர் வீட்டுக்குப்போவது போல் கையில் புட்டியுடன் கிளம்பி நேராக ஆஸ்பத்திரியை அடைந்தாள்.

தன்னைப் பார்ப்பதற்காகத் தனியாக வந்திருந்த சிங்காரியைப் பார்த்ததும் கந்தசாமிக்குக் கரைகாணாத ஆனந்தம் ஏற்பட்டது. இதைப் போன்ற ஒரு சந்தர்ப்பத்தை எண்ணி எண்ணி அவன் எத்தனையோ முறை பெருமூச்சு விட்டிருக்கிறான். ஆனால் அவனது உள்ளக் கிளர்ச்சிகளை அவளிடம் ஒப்படைக்க வியாதியஸ்தர்கள் நிறைந்த இந்த இடமா கிடைக்க வேண்டும்?

"அப்பா வரவில்லையா சிங்காரி?" என்று கேட்டான் அவன்.

சிங்காரியின் முகத்தில் கவலை படர்ந்தது. "அப்பாவுக்கு ஏழெட்டு நாட்களாகக் காய்ச்சல். இந்தத் தடவை ரொம்பக் கவலைக்கிடமாகப் போச்சு. என்ன ஆகுமோ என்று பயந்தே போய் விட்டேன். இப்போது இரண்டு நாட்களாகக் கொஞ்சம் குணம்தான். உங்களைப் போய்ப் பார்த்து வரும்படி அவர் தான் அனுப்பினார்."

கந்தசாமிக்கு அவள் கடைசியாகக் கூறிய வார்த்தை சிறிது ஏமாற்றத்தை அளித்தது. புலவர் சொல்லாவிட்டால் அவள் வந்திருக்கமாட்டாள் போலும்!

"அப்படியானால் அப்பா சொல்லித் தான் நீ வந்திருக்கிறாயா, சிங்காரி? உனக்கு என் மேலே இரக்கமில்லையாக்கும்..." என்றான். சிங்காரியின் கண்கள் கலங்கின. அவள் கால் கட்டை விரலால் தரையைக் கீறிக்கொண்டு நின்றாள்.

கந்தசாமியின் உள்ளம் இந்தக் காட்சியைக் கண்டு பாகாய் உருகியது.

"சிங்காரி! என் மனசு உனக்குப் புரியவில்லை. உங்க சின்னம்மா உன் கல்யாணத்துக்கு ஏதோ ஏற்பாடு



அம்மா: டேய் அம்பீ! தாத்தாவுக்கு ஒரு பெரிய முத்தம் கொடு, பார்க்கலாம்!

---

செய்யறுங்கன்னு உங்கப்பா சொன்னதி லிருந்து என் மனம் என்ன பாடுபடுகிறது தெரியுமா? அதுவும் இந்தப் பத்துப் பதினைந்து நாட்களாக உன்னைப் பார்க்காமல் போகவே நான் என்னென்னவோ நினைத்து விட்டேன்!...''

சிங்காரி கண்ணீருக்கிடையே வேதனை கலந்த ஒரு புன்னகையுடன் அவனை நிமிர்ந்து பார்த்தாள். அவனுக்கு ஏதோ கேட்க வேண்டும் போல் இருந்தது. ஆனால் துணிவு வரவில்லை. கந்தசாமி மேலும் கூறினான்:

''நீயும் வரவில்லையா? 'ஏதடா மனிதன் ஆஸ்பத்திரியில் படுத்திருக்கிறானே' என்றுகூடக் கவலையில்லாமல் எங்க அக்காளும் மாமனும் இங்கேயே வந்து கல்யாண விஷயத்தைப் பேசி என்னைத் தொளைச்சு எடுத்தாங்க!''

மேலே என்ன கூறப் போகிறானோ என்று படபடக்கும் நெஞ்சுடன் அவனைக் கூர்ந்து நோக்கினாள் அவள்.

''கடைசியிலே, இதோ நீ வருகிற போது இங்கே உட்கார்ந்திருந்தான் பார், முருகேசன், அவனுக்கு அவளை முடித்து விடலாமென்று ஏற்பாடு பண்ணி விட்டேன்.''

அவள் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள். அவளது உள்ளத்திலிருந்து ஒரு பெருத்த சுமையை இறக்கி வைத்தது போல் இருந்தது.

''உன் விஷயம் எப்படி இருக்கிறது, சிங்காரி? முதலில் அதைச் சொல்லு! அப்பா என்ன சொன்னார்?'' என்று ஆவலோடு கேட்டான் அவன்.

சிங்காரி அவனிடம் எவ்வளவோ விஷயங்கள் பேச வேண்டும் என்றுதான் நினைத்துக் கொண்டு வந்தாள். தந்தைக்கு அடுத்தபடியாகத் தன் மீது அனுதாபமும் அன்பும் காட்டக் கூடியவன் அவன் ஒருவன்தான் என்று அவளது உள்ளம் பரிபூரணமாக நம்பியது. ஆனால் அவனைக் கண்டதும் வெட்கம் அவளது நாவுக்குத் தடை போட்டது. முதன் முதலில் டைமண்ட் பூங்காவில் அவனைச் சந்தித்த போது எவ்வளவு தாராளமாகப் பேசினாள்? அந்தத் தைரியம் இப்போது எங்கே ஓடி மறைந்து விட்டது? அவள் சுருக்கமாக நிறுத்தி நிறுத்திக் கூறினாள்:

''மருதம்மாளின் அண்ணன் மகன் தங்கவேலுவுக்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தாங்க...'' என்று அவள் ஆரம்பித்ததுமே கந்தசாமியின் கண்களில் தீப்பொறி பறந்தது.

''அந்த அயோக்கியப் பயலுக்கா? ஒரு நாளும் நடக்காது!'' என்று உறுமினான் அவன்.

அக்கம் பக்கத்துப் படுக்கைகளிலிருந்த நோயாளிகள் அவனது இரைச்சலைக் கேட்டுத் தலைதூக்கிப் பார்த்தனர். சிங்காரி தணிவாகப் பேசினாள்:

''இரைஞ்சு பேசாதீங்க ... அப்புறம் அப்பாவுக்குக் காய்ச்சல் வந்து நிலைமை மோசமாகப் போய் விடவே ஏற்பாடுகளைக் கொஞ்சம் தாமதப்படுத்தியிருக்காங்க. இந்த விஷயத்திலே அப்பாவுக்குத் துளிக்கூட விருப்பமில்லை...''

''அப்போ உனக்கு?...''

சிங்காரி அவன் முகத்தைத் தீனமாக ஏறிட்டுப் பார்த்தாள்.

''உங்கமனசை நான் புரிந்துகொள்ளவில்லை என்று சொன்னீங்களே,' என் மனசை மாத்திரம் நீங்க புரிஞ்சுகிட்டு இருக்கீங்களா?''

அவளது வார்த்தைகளில் சிறிது பதற்றம் தொனித்தது கண்ட கந்தசாமி அன்பு கனியப் பேசினான்:

''சிங்காரி! உன் மனம் எனக்குத் தெரியாமல் இல்லை. இருந்தாலும் உன் வாயாலே ஏதாவது சொல்லுகிறாயா என்கிற நப்பாசை எனக்கு இருக்கிறது சகஜம்தானே...!''

அவளது முகம் குப்பென்று சிவந்தது. அவள் தலை கவிழ்ந்தாள்.

''இதோ பார், அப்பாவுக்கு வீட்டை விட்டு நடந்துவர முடியுமா?''

சிங்காரி 'முடியும்' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள்.

''அப்படியானால் ஒன்று செய். நாலு நாட்கள் பொறுத்துத்தான் டாக்டர் என்னை 'டிஸ்சார்ஜ்' பண்ணுவேன் என்று சொல்கிறார். ஆனால் எனக்கு லீவு இன்னும் இரண்டு நாளைக்குத்தான் இருக்குது. என் உடம்பும் இப்போ குண

மாகிப் போச்சு. பேசாமல் எப்படியாவது டாக்டர்கிட்டே சொல்லி நாளைக்குக் காலையிலே இங்கிருந்து கிளம்பி விடுகிறேன். அப்பாவை டைமண்ட் பூங்காவுக்கு வந்து காத்திருக்கச் சொல்லு. இரண்டு பேருமாகப் பேசி ஏதாவது ஒரு முடிவு கட்டி விடுகிறோம்!'' என்றான் கந்தசாமி.

சிங்காரி புறப்படுகையில் அவன் மீண்டும் உறுதி கூறினான்.''சிங்காரி! கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதிச்சாலும் சரி, உன்னை அந்த முரடன் கையிலே ஒப்படைக்கிறதைப் பார்த்துக்கொண்டு நான் சும்மா இருக்க மாட்டேன்!''

சிங்காரியின் உள்ளம், அவனுக்கு எந்த விதத்தில் நன்றி கூறுவது என்று தெரியாமல் தவித்தது.

நடுக்கடலில் திசை தெரியாது திக்கித் தவிக்கும் மரக்கலத்தைப் போல் குழம்பிக் கொண்டிருந்த அவளுக்கு, கந்தசாமி கலங்கரை விளக்கத்தைப் போல் காட்சியளித்தான்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

# மந்திராலோசனை

கண்ணம்மாள் தமது முதல்தாரத்தின் நகைகளை விற்று விட்டாள் என்று அறிந்தபோதே புலவருக்குச் சொல்லொணாத ஆத்திரமும் துயரமும் ஏற்பட்டன. தமது அருமை மகளின் கதி என்னவாகும் என்பதை நினைக்க நினைக்க அவரது உள்ளம் வேதனையால் துடித்துக் கொண்டிருந்தது. போதாக்குறைக்கு மருதம்மாளிடம் அவள் கூடிக் கூடிப் பேசுவதையும் தம் சம்மதத்தையோ, சிங்காரியின் சம்மதத்தையோ கேளாமல் கல்யாணத்தை முடிவு செய்ததையும் கண்டு அவர் பதைத்துப் போனார். அவரது தேக நிலையில் அபிவிருத்தி ஏற்பட்டு விட்டது என்பதைக் கண்ட பிறகு அவள் சும்மா இருக்க மாட்டாள். தனது முயற்சிகளையும் ஏற்பாடுகளையும் தொடர்ந்து நடத்தத் தயங்க மாட்டாள். உடனடியாக ஏதாவது செய்யாவிடில் அனர்த்தம் நேர்ந்துவிடும் என்று தோன்றியது.

அவளது அட்டகாசங்களுக்கு எப்படியாவது ஒரு முடிவு காண வேண்டும் என்று படுக்கையில் படுத்த வண்ணம் ஐந்தாறு தினங்களாக மண்டையைக் குழப்பிக் கொண்டு சிந்தித்துக் கொண்டேயிருந்தார். அவரது விரக்தியடைந்த உள்ளத்தில் பல பயங்கரமான எண்ணங்கள் உருப் பெறலாயின. 'இந்தப் பணம்தானே அவளுக்கு இத்தனை ஆணவத்தைக் கொடுக்கிறது! அதை அப்புறப்படுத்தி விட்டால்?... அப்போது அவளுடைய டம்பமும் அதிகாரமும் அடங்கி விடுமல்லவா?' என்று கூட எண்ணினார்.

மறுதினம் காலை எட்டு மணி இருக்கும். சூரியன் கீழ்வானத்தில் வெகுதூரம் முன்னேறி விட்டான். டைமண்ட் பூங்காவின் நடுவேயிருந்த சாலையில் ஓரிரு வழிப்போக்கர்களைத் தவிர வேறு சந்தடியில்லை. கூவம் நதிக்கரையை ஒட்டியிருந்த பூங்காவிலிருந்த சிமெண்ட் பெஞ்சுகள் காலியாகக் கிடந்தன. முத்துப் புலவர் ஏகாந்தமான ஒரு இடத்தில் உட்கார்ந்து தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார்.

சுமார் பதினைந்து நிமிஷங்களுக்குப் பின்னர் கந்தசாமி வருவது தெரிந்தது.

''உங்களுக்குக் காய்ச்சலாக இருந்ததாமே?'' என்று கேட்டான் அவன்.

''காய்ச்சலா!....உயிர் போயிருந்தால் ஒன்பது நாளாகியிருக்கும். பிழைத்தது புனர்ஜன்மம்தான்; உனக்கு முழு விவரமும் தெரியுமா?'' என்று கேட்டு விட்டு, கண்ணம்மாளுக்கும் தமக்கும் நேர்ந்த சச்சரவையும், தாம் தைரியமாகச் சண்டை பிடித்த விவரங்களையும் கூறினார் புலவர்.

''சிங்காரி இத்தனை விவரமாகச் சொல்லவில்லீங்க. பாவம், வெட்கமா இருக்குமல்ல. அந்த அயோக்கியப் பயல் தங்கவேலு முதல் நம்பர் ரவுடியாச்சே!'' என்றான் கந்தசாமி.

புலவர் ஏதோ ரகசியம்பேசப்போவது போல் தணிவான குரலில் பேசினார்.

''கண்ணம்மாளின் தீர்மானம் எனக்கோ சிங்காரிக்கோ துளிக்கூடப் பிடிக்கவில்லை. ஆனால் உனக்கு எனது நிலைமை நன்றாகத் தெரியும். எதிர்த்துப் பேசிச் சண்டை பிடித்துக் கொண்டேயிருந்தால் சாகிறவரைக்கும் ஓயாத ரகளையாகி விடும். இப்போது சொல்லு! உனக்கு ஏதாவது யோசனை தோன்றுகிறதா?'' என்றார் புலவர்.

''பேசாமல் சிங்காரியும் நீங்களும் தனியாகப் பிரிந்து வந்து விடுங்களேன். ஏன் இத்தனை கஷ்டம்? தனியாக வந்துவிட்டால் அப்புறம் அவளை நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கலாம். இல்லையா?''

புலவர் தலையை அசைத்தார்.

''அது, நடக்காது! கந்தசாமி. எத்தனையோ தடவை நான் இதைப் பற்றி

யோசித்துப் பார்த்து விட்டேன். எங்கே போவது? எப்படிப் பிழைப்பது? என் பொருள் முழுதும் அவள் கையில் இருக்கிறது! வீட்டை அவள் பெயரில் வாங்கினேன். மூத்த தாரத்தின் நகைகளை எனக்குத் தெரியாமல் விற்றுப் பணமாக்கி வைத்துக் கொண்டிருக்கிறாள் அவள். 'நாங்கள் பிரிந்து போகிறோம், பணத்தைக் கொடு' என்றால் ஒரு பைசாகூடத் தரமாட்டாள். அவளையும் போகச் சொல்ல முடியாது. வழக்கு தொடர்ந்து ரசாபாசமாக்கவும்கூடாது. அப்படிச் செய்வது சாத்தியமுமல்ல...''

''இதோ பாருங்க. நான் சொல்கிறேன்னு வித்தியாசமாக நினைக்காதீங்க. உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானால், நீங்கள் பேசாமல் நம்ம வீட்டுக்கே வந்து இருக்கலாமுங்க!''

''இல்லை, கந்தசாமி! உன்னுடைய அன்பான உள்ளம் உன்னை இப்படிப் பேசச் சொல்லுகிறது. என்றாலும், பிறருக்குப் பாரமாக இருக்க என்னுடைய மனம் இசையாது.''

கந்தசாமிக்கு ஒன்றும் புரியவில்லை.

''அப்போ என்னதான் வழி?''

''கொஞ்சம் பொறு. நான் எல்லாவற்றையும் நாள் கணக்கில் யோசித்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறேன். தெய்வந்தான் உன்னை எனக்கு நண்பனாக்கியது. உன்னைச் சந்தித்த அன்றே உனது தங்கமான குணம் எனக்குப் புரிந்து விட்டது. சிங்காரி தாயில்லாப் பெண். உன்னைப்போன்ற உத்தமனுக்கு அவளைக் கட்டிக் கொடுத்து விட்டால் அவளது எதிர்காலம் க்ஷேமமாக இருக்கும் என்று நான் நிர்ணயித்து விட்டேன், அப்பா. அவளுக்கும் உன்மீது வாஞ்சை!...''

கந்தசாமிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. புலவர் மேலே கூறினார் :

''இதிலே விஷயம் என்னவென்றால் கண்ணம்மாள் பணப் பிசாசு. பெண்ணுக்குப் பரிசமாக யாராவது கணிசமான தொகை தருவதாக இருந்தால் உடனே அவள் சிங்காரியைத் தங்கவேலுவுக்குக் கொடுக்க வேண்டும் என்ற ஏற்பாட்டை மாற்றி விடுவாள்!''

''எவ்வளவு வேண்டியிருக்கும்?''

''ஆயிரம் இரண்டாயிரம்....''

கந்தசாமியின் உள்ளம் படுத்து விட்டது. ''அப்பாடி''.. என்று நீண்ட பெருமூச்சு விட்டான் அவன்.

''கவலைப்படாதே, தம்பி! அதற்கும் வழி கண்டு பிடித்திருக்கிறேன். நீ மட்டும் கொஞ்சம் உஷாராக இருந்து எனக்கு உதவி செய்தால்..''

''என்ன உதவி சொல்லுங்க! உங்களுக்காகவும், சிங்காரிக்காகவும் நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராக இருக்கிறேன்!''

''ஒன்றுமில்லை. கண்ணம்மாள் பணத்தில் கொஞ்சம் எடுத்து..''

''ஐயையோ! திருட்டா..?''

''யோசித்துப் பார்! கந்தசாமி, நகைகள் என்னுடைய முதல் தாரத்தினுடையவை. அதை விற்ற பணமும் என்னுடையதா? கண்ணம்மாளுடையதா? நீ ஒன்றும் செய்ய வேண்டாம். எனக்குச் சொந்தமான அந்தப்பணத்தில் ஒரு பகுதியை நான் எடுத்தால் அது எப்படித் திருட்டாகும்? என் பணத்தைஉன்னிடம் எடுத்துக் கொடுக்க எனக்கு உரிமை இல்லையா? மேலும் அந்தப் பணத்தை நீயோ நானோ வைத்துக் கொள்ளப் போவதில்லை. சிங்காரிக்குப் பரிசப் பணமாக நீயே அதைக் கண்ணம்மாளிடம் சேர்ப்பித்து விடலாம்!''

கந்தசாமியின் மூளை குழம்பியது. ஒரு சமயம் பார்த்தால் புலவர் கூறுவது நியாயமாகத்தான் பட்டது. புலவர் அவனைத் திருடச் சொல்லவில்லை. அவர் ரகசியமாகக் கொடுக்கும் பணத்தை வேறு உருவத்தில் அவர்களிடமே திருப்பிக் கொடுக்கத்தான் சொல்லுகிறார். அப்போது இதில் தவறு என்ன? சிங்காரிக்காக இதைக்கூடச் செய்யக் கூடாதா என்று தோன்றியது. மறுகணம் 'இதனால் ஏதாவது எக்கச்சக்கமான நிலைமை ஏற்பட்டு விட்டால்...?' என்று நினைக்கையில் அவனுக்கு வயிற்றைக் கலக்கியது.

''கண்ணம்மாவுக்குத் தெரிந்தால்?''

''தெரிய வழி இல்லை, கந்தசாமி! ஐந்து ரூபாயும் பத்து ரூபாயும் கட்டுக் கட்டாக நிறைய வைத்திருக்கிறாள். தினம் தினம் அதை எண்ணியா பார்க்கிறாள்? அதில் ஒரு கட்டு இரண்டு கட்டு எடுத்தால் சந்தேகமே ஏற்படாது! நானும் எவ்வளவோ யோசித்துப் பார்த்தேன், அப்பா! என்னைப் பற்றிக் கவலை இடையாது. சிங்காரியை அந்த மிருகத்திடமிருந்து காப்பாற்ற வேண்டுமானால் வேறு வழியே இல்லை!''

''எனக்கு இருபத்திநாலு மணி நேரம் 'டைம்' குடுங்க! கொஞ்சம் நிம்மதியா யோசிக்கணும்!'' என்றான் கந்தசாமி.

''நன்றாக யோசித்துப் பார், அப்பா; நாளை மாலை ஐந்து மணிக்கு இதே இடத்துக்கு வந்து உனது முடிவைச் சொன்னால் போதும்'' என்றார் முத்துப் பிள்ளை.

''இப்போ நீங்க சொன்னதெல்லாம் சிங்காரிக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் கந்தசாமி.

''சேச்சே! தெரியவே தெரியாது! இதையெல்லாமா அதனிடம் சொல்லுவாங்க!'' என்றார் புலவர். **(தொடரும்)**

**Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited Managing Editor : T. Sadasivam**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon